உ

வேலுமயிலுந்துணை.

---

## நேரிசைவெண்பா.

### காப்பு.

சமர்புரி மாகிம்பத் தண்ணிழற்பா லும்ப
லமரர் தொழவிருந்த தன்றித்—திமிரமலம்
போக்கியெம துள்ளின்பப் பூரணமா யெவ்விடத்துந்
தேக்கறிவு மாயிருந்த தே. (க)

உலகமெல்லா மீன்ற வொருத்திதனப் பாலுண்
டிலகு கவிதைமழை யீச—னிலவு
புயமலைப்பாற் பெய்தசுகப் போரியில்வாழ் வானம்
பமலர்த்தா ளென்முடிக்குப் போது. (உ)

---

## காப்புப் பருவம்.

### திருமால்.

பூமேவுபொய்கைப் பொறிச்சிறகர்வண்டினம்
பொங்கரின்விருந்தயர் தரும்
போரூரின்முருகனைச் சீர்மேவுகுமரனைப்
புனிதஞானக்குரவனைக்
காமேவுகடவுட் பசுந்துணர்விரிந்துநறை
கடிமணத்தொடுபிலிற்றுங்
கண்ணகன்னிழலரசு சசிகணவனுக்குதவு
கந்தவேளைப்புரக்க
தூமேவுஞானசத் திக்கடலின்மொண்டுசிற
சொலிதசத்துவப்பொருப்பிற்
றூமறவிவர்ந்துலக மெங்கும்பரந்துயிர்த்
தொகைவகைப்பயிர்கடழையத்
தேமேவுமதுரம் பழுத்தொழுகுமென்மொழித்
திருமின்கலந்துமிளிரச்
செய்யபோருண்மாரி பொய்யாதுபொழிகின்ற
செங்கட்கருங்கொண்டலே. (க)

### சதாசிவம், வேறு.

காரொனவாருயிர் மீதருளேபொழி
கண்ணனைவிண்ணவனைக்
கந்தனையெந்தையை வந்தனையன்பர்
கடும்பகைகொன்றவனைச்
சீர்சமராபுரி யாளனைமாறுறு
தேவர்மணாளனையோர்
சின்மயரூபனை நன்மையெலாமுறு
சேயினையருள்புரிக

வோர்வரி தாமுயி ரியாவையுநேர்வினை
யொத்துமலப்பகைபோ
யொண்சுகமேவிட வைந்தொழி றந்திடு
முத்தமசிற்பரமாய்ச்
சேருருவாயரு வாயிருவகையுஞ்
செறிபொருளாய்நிறைவாய்ச்
செம்முகமைந்தொடு செம்மையினின்றருள்
செய்தசதாசிவமே. (௨)

பராசத்தி. வேறு.

விடயவாவாரகஞ் சொருபவாவாரக
மெனப்பகர்விதங்களாகி
விரிமலக்கங்குலுயிர் விடயஞானத்தினொடு
மிருசொருபஞானத்தையுந்
தடையதாகச்செய்த தனுவாதிநாலையுந்
தருமாயையறிவினெனுந்
தன்னருட்போறிவினெனுமத்தடைவிடுந்
தருபளாவையஞ்சலிப்பா
மடவிநெடெழுமவனை ருடல்வேறுகூறுபட
வல்லைகவேதாளபூத
மாடப்பெருங்கூகை கூவப்பருந்தாடிழ
வீடச்சிவந்தவடிவே
நெடியிலேவியகுகனை நெடியமான்மருகனை
சிகரில்போரூர்முருகனை
நானியகூரறிவுகொடு கருதுவோரமுதமென
நுவலுமோரருள்புரியவே. (௩)

விநாயகர். வேறு.

பதவதிகாரவினை மிசைதுயில்பயிலு
பிகலதுறாமினை யினிதருள்புரிக

வகாரமுமுகாரமு மகாரமுமாகித்
திகழுறுபிரணவ மெழுசிறுகளிறே. (சு)

திருநீறு. வேறு.

சோதிமகரக் குழைசெறிசுந்
தரத்தோளீரா றுடையானைச்
சுருதியினாக்குந் தண்டையந்தாட்
டுணையென்முடியிற் பொறித்தானை
மாதுவளருஞ் சமரபுரி
வாழ்வைவானோர் சிகாமணியை
வடிவேலரசை மயிலரசை
வந்துபுறங்காத் தளித்திடுமால்
ஆதிபகவன் ஞானவடி
வழலிற்பூத்து நித்தியமா
யணிந்தோர்தமக்கு வசிகரமா
யருந்தினோர்கட் காரமுதாய்
நீதியறியும் பசுமலத்தை
நீக்குமொருநற் குறிகாட்டி
நிகழ்பேரின்பக் கடலூட்டி
நின்றபுகழ்வெண் டிருநீறே. (ரு)

உருத்திராக்ஷம்.

அரியமனமு மறிவரிதா
யருவாய்நிறைவா யிருந்துமுனை
ரமரர்திரிபு ரஞ்செய்குறை
யறையக்கேட்டு முக்கண்வழிக்
கரியகளச்செம் புயல்கருணை
பொழியப்பெருகுங் கடற்பிறந்து

கருதுமடியார் பவக்கடலைக்
கடத்துமணியைத் துதித்திடுவோம்
பெரியதவத்துக் குறுமுனியெம்
பெருமான்செவிவாய் மடுத்தருந்தப்
பிறங்குஞான மொழிநறவு
பெய்யுங்குமுத வாயானைத்
தெரியனறுமா முகைகுறமான்
றிளைக்குமுலைக்கோ டுழவலருந்
திருமார்பகனைச் சமரபுரிச்
சேயைப்புறங்காத் தளித்திடவே (௬)

பஞ்சாக்ஷரம். வேறு.

கருதரிய பலவுயிர்கள் பந்தனைக் கார்க்கடற்
கரையிவர வருகலனை யன்பருட் காட்சியை
யருமறையு மறிவரிய வஞ்சகப் பேற்றினை
யரியசிவ ஞுரியபெய னாந்தினைப் போற்றுதுங்
குரவுகமழ் குறவனிதை கொண்கனைக் கார்த்திகைக்
குடமுலையி னமுதகட லுண்டகத் தேக்கனைத்
தருணகும ரனையினிய தண்டலைச் சீர்ப்பொலி
சமரபுரி தனினிலவு கந்தனைக் காக்கவே (௭)

திருமகள். வேறு,

பொற்குவடுபத்துநூ றிலகுமுடிதொறுமிரவி
பூணெனக்கொண்டுமதியம்
பொழிநிலவுவெள்ளத்தின் மிசைமிதந்தழகுசெறி
புண்டரிகமண்டுபுயலை
யற்புதத்தொடுகொண்டு மிளிரவப்புயனடு
வரும்புநால்வகைமலரொடு
மஞ்சோதிமினலொண் றிருந்தெனவிருந்தொளி
ரணங்கினைநினைந்துதொழுவா

மெற்செறிதிருப்பரங் குன்றுவினன்குடி
யிரும்பொழிற்றிருவேரக
மீறில்சீரலைவாய் விளங்குபழமுதிர்சோலை
யென்னுமறைபுகழ்பதிதொறுங்
கற்குவடுதொறுமினிய நற்சமரபுரியுமுறை
கடவுளைக்கடவுளரெலாங்
கைமலர்குவிக்கவிரு கான்மலர்படைத்தவொரு
கந்தனையளிக்கவென்றே. (க)

சரஸ்வதி. வேறு.

நெய்தலங்காடுமிரு காவிபொருவெள்ளையு
நிகழ்குமிழுமுகைமுல்லையு
நிறைகுறைக் குமுதமுந் தொடியுடைத்தோன்றி
நேர்கன்னிகாரமுகையு [யொடு
மெய்தரியநூபுரக் கமலமுஞ்செறிகடவு
ளொகினம்வெள்ளைக்கமலமீ
தேர்பெற்றமறைமுதல கலைசொற்றிருந்தென
விருந்தவளையஞ்சலிப்பாங்
கைதையங்கானமும் புன்னையங்கானமுங்
கானனெய்தற்கானமுங்
கடிமணத்தொடுநறவு மகரமுந்தந்திலகு
கல்யாணமாமறுகென
மைதவழ்பொழிற்புளின மலிகயற்புலவையும்
வளையலவனுறுபகியையும்
வாராதகற்றியொளிர் நெய்தலஞ்சமரபுரி
வருகுகனையருள்புரியவே. (க0)

பலதேவர். வேறு.

எண்டிசையோர்வசுவெண்மர்கள்வயிரவ ரெண்மர்மருத்துவ
மீரிருமூவரு மோரொருபதின்மரு மீராறுசூரியரு [ரு

மண்டர்வியாழ னடம்புயவீர ரலர்ந்தசரோருகமே
லந்தணரேழொழு மங்கையர்சோமனும் வந்தருளேபுரிவார்
தண்டையுநீடு சதங்கையுநீளொளி தங்கியகிண்கிணியுந்
தாளிணைமாமலர் மீதினிலோசை தழைந்திடவந்துமையா
மொண்டொடிகொஞ்ச விருந்துகுறங்கி னுவந்துதன்கொங் [கையமு
தூண்டருள்கந்தனை யஞ்சமராபுரி யொண்குமரேசனையே.

காப்பு - முற்றியது.

---

## செ ங் கீ ரை ப் ப ரு வ ம்.

---

மும்மையுலகெங்கும் பரந்தொளிபரப்பிடு
முதற்பரையெனத்துணைத்து
மூதருட்புனிதநீர் நிறையவாட்டிப்பெருமை
மொய்த்தசித்தியவாடையான்
மெய்ம்முழுதுமொத்தியிரு வேறற்றவத்துவித
வெண்ணீறணிந்துமிளிரும்
வீறுபூரணதிலப் பொட்டுமிட்டுப்பெரிய
மெய்ஞ்ஞானதீபதட்டா
லம்மருவுமாலத்தி சுற்றிமற்றிச்சையுட
னுஞானங்கிரியையென்
றருள்செவிலியாயராங் கருகிலுறவாறு
றகன்றசிவவாரியிலெழுஞ்
செம்மையாமுதம் புகட்டவளருங்குழவி
செங்கீரையாடியருளே
திரிமலமகலவரு குமாரசரவணமுருக
செங்கீரையாடியருளே. (௧)

திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

அஞ்சக்கரப்பரத் தொட்டிலிற்சதுர்வேத
மானவடமொருநாலையு
மாதியுடனிச்சைஞா னங்கிரியைநாமமுற்
றருள்வளர்ந்தொளிர்சத்திக
டஞ்சக்கரங்கொடு பிடித்தங்கசைத்திடத்
தகுபணாயுமாதிசிவனுந்
தாமுளமகிழ்ந்துறச் சோமனெனநிலவுபொழி
தவளயானைக்கடவுளும்
விஞ்சக்கரம்புனையு முதல்வர்பதினொருவரும்
விபுதர்களுமரிபிரமரும்
வேணிமுனிவாருமருண் ஞானமுனிவராதி
வியனுலகரும்பரவவே
செஞ்சக்கரப்பரிதி யெனநிலவுபோரூர
செங்கீரையாடியருளே
திமிரமலமகலவரு குமரசரவணமுருக
செங்கீரையாடியருளே. (௨)

குஞ்சிமுடியுற்றசெஞ் சுட்டிகையாடச்செவிகொள்
கோலக்குதம்பையாடக்
குமுதமெனவமுதொழுகு மிதழ்களாடக்காம்
கொண்டபொற்றொடிகளாடக்
கஞ்சமலரைப்பொருவு நயனமாடக்கடி
தடத்தலைவடங்களாடக்
கருதரியமுத்தியின் புதைசிறைமருவு
கனகற்றண்டையாட
வஞ்சவடிவத்தசுரர் திண்டாடவரிபிரம
ராதிசுரர்கொண்டாடநீ
ளகிலசராசரங்களின்றுடனென்றுமை [illegible]
டண்டபகிரண்டமாட

செஞ்சரவணப்பொய்கை மஞ்சமிசைநிலவுமிறை
செங்கீரையாடியருளே
திமிரமலமகலவரு குமரசரவணமுருக
செங்கீரையாடியருளே. (௩)

ஐந்தொழிலுமெனதிவைக ளாகுஞ்சிருட்டிமுத
லானமுத்தொழில்சடத்து
மறிவிடத்தோரிரண் டும்வினைக்கீடா
யவற்றையுயிரறியாமையான்
முந்திவருதன்னையும் பிறரையுங்கருதினவி
முதிர்விழைவுவெகுளிமருவி
மூன்றுசகதுன்பங்கண் மன்னியிருவினைமேவி
மூடப்பிறப்பிலாழும்
பந்தமுறுமுயிர்சுதந் தரமிலிசடம்பாச
மானகருவிகண்முழுதுமே
பகருமற்றவைகடந் திடுமொருவனுனிலை
பகுத்துன்சுதந்தரமறச்
சிந்தனைசெய்பந்தமறு மென்றனக்கருள்குரவ
செங்கீரையாடியருளே
திமிரமலமகலவரு குமரசரவணமுருக
செங்கீரையாடியருளே. (௪)

வேறு.

காமவிடத்தான் மாமயல்கொண்டே னொந்தேனைக்
காருணியத்தால் வாவெனவந்தா டந்தோனை
தீமையிழைத்தேறும் வாரிதிசென்றே நின்றேனைச்
சீரருள்பெற்றா ரார்களைதந்தா னெங்கோனை
மாமலமுற்றே தோமுறுமென்னெஞ்சே [illegible]
[illegible]

சேமநிதிப்போ ரூரிறைசெங்கோ செங்கீரை
தேவர்தமக்கோர் மாமணிசெங்கோ செங்கீரை. (௫)

வேறு.

களவறுஞானிக ளுள்மலர்மீதி லெழுந்தூறுந்தேனே
கடையனைமேவிய மலமறவோர்குரு வென்றேவந்தோனே
யளவறுசூரிய ரெனமயிலேறியு வந்தூருங்கோவே
யகமுகமாயொரு சுழிமுனைசேர்பவ ரங்கேயுந்தேவே
யிளநிலவாணகை யுறுகுறமாதை யிலையந்தாளுந்தோளா [ளா
வெழிலடியார்முத லனைவருமேகசை கொண்டாருந் தா
தெளிவுறவேயென தகநிறைபேரொளி செங்கோசெங்கீரை
திகழ்சமராபுரி முருகசடானன செங்கோசெங்கீரை. (௬)

வேறு.

மகபதிசக்கிரி மலரயனத்திய வண்சேருங்காவே
மலமறுமுத்தர்க ளெனுமளிசுற்றிய தண்குழும்பூவே
யிகலறுமெய்த்தவமுழுதையுமுற்றவ ரெண்கூரும்பேறே [றோ
யெழிலருள்பெற்றுயிர் மயில்கள்களிக்க வெழுந்தூருங்கா
ககனசுரர்க்கொரு துணையெனநெட்டயில் கொண்டேகின் [மொய்ம்போனே
றோனே,
கடவுண்மடப்பிடி தனவிணைகைத்தொளிர் திண்டோன்
திகழ்மதியொத்தொளிர் சமரபுரிக்கிறை செங்கோசெங்கீரை
செறிதயவுற்றவ ரிதயபுரிக்குக செங்கோசெங்கீரை. (௭)

வேறு.

குவளைப்பிழிசெங் குமுதப்பிழிகோ கனகப்பிழிகூடிக்
கோகநுசேதக மாகிக்கூனற் கொழுவுழுசிறைதொறுங்
தவளத்தரளத் தொடுபிழியூற றதும்பக்கடைசியர்தந்
தண்ணகையொடுமிந் நூறலொடுஞ்சம றுமெனவுட்கின
பவளக்கொடிகைப் பேரணிசூரிதிகழ் பங்கயமென்கையாற் [லிட்
பணிலத்தரளத் திரளைத்திடரிற் பழனக்களை [illegible]

திவளுற்றிடுதொண் டைநன்னாடா செங்கோசெங்கீரை
சீரூர்போரூர் வீரமயூரா செங்கோசெங்கீரை. (௮)

புள்ளுங்கிளியு மயிலுங் குயிலும் பொன்னஞ்சிறையனமும்
பொருகோடரமுங் கரியுந்திரியும் பொங்கர்ப்புதுமலர்வாய்
கள்ளும்விள்ளு மிருவிழிபிழியுங் கனிவகையின்சாறுங் [க்
காலாய்மடுவா யாறாயோடிக் கடல்புகவெதிரேறித்
துள்ளுமகரம் புயலினகடு துணித்தூச்சலமேவிச்
சுடர்வான்மகரஞ் சாடிக்கங்கை துளைந்துதிரும்பிவருந்
தெள்ளும்வளமுள தொண்டைநன்னாடா செங்கோசெங்கீ
சீரூர்போரூர் வீரமயூரா செங்கோசெங்கீரை. [ரை

ஓதிமசால மேதியினங்க ளுழக்கப்பேரி [த்
யொள்ளியகமலப் பள்ளியைவிண்டங் குயர்சண்டலையேற
தாதவிழ்தண்டலை யுமிழுங்கள்விளைசெறி நடமலர்மீதேறத்
தடநீராடிய மடவார்வெருவித் தண்ணந்திநீரேறக்
கோதறுநதியுறை வாளைகடாவிக் குளிர்வயன்மடையேறக்
குலவியமடைதவழ் குடவளைபதறிக் கொழுவியகமுகேறத்
தீதறவொளிர்தரு தொண்டைநன்னாடா செங்கோசெங்கீரை
சீரூர்போரூர் வீரமயூரா செங்கோசெங்கீரை. (௧0)

செங்கீரைப்பருவம் - முற்றியது.

---

## தாலப்பருவம்.

---

கறையின்றொளிரு மதிமுகத்துக்
கரும்பன்னாரு மாடவருங்
கலவித்தேற லயின்றயின்று
களித்துத்தருக்கி விளையாடு

நிறையுஞ்சோமச் சிலைத்தகடு
நிரப்பிக்குலிசத் தூணிறுத்து
நிலைகொண்டரிய நவமணிக
ணிகழுமாலைத் தசும்புநிரைப்
பொறைகொண்டிலங்கும் பலமாடப்
புனிதக்கொடிகள் கற்பகப்பூம்
பொங்கர்க்குறுந் தாணெறுமுகையிற்
புடைக்குந்தோறு மடலவிழ்ந்து
தறையினறையின் பெருக்கூறுஞ்
சமரபுரியாய் தாலேலோ
தமரக்கடலைக் கடைந்தமுதந்
தருவோன்மருகா தாலேலோ. (௧)

மகரப்பரவை யளறுபட
மாயைத்திறமார் கிரவுஞ்ச
வயமால்வரைசெந் தூளியெழ
மதமாமுகத்தூச் சினத்தவுண
ணகலக்குலிச வரைதகர
வரிமாமுகன்பே ராயிரவா
யருஞ்சோரிகணின் றலையெறிய
வண்டகூடந் தொடுஞ்சூத
மிகலற்றலறி வீழவசுர
ரெவரும்பதறிக் குடியோட
விலங்குமமரர் கலங்காம
லெழில்வானுலகங் குடியேறத்
தகைமைச்சுடர்நெட் டிலைவடிவேற்
றடக்கையெடுத்தோய் தாலேலோ
தமரக்கடலைக் கடைந்தமுதந்
தருவோன்மருகா தாலேலோ. (௨)

மூலநிலத்தி லதோமுகமாய்
முகிழ்த்துவிழியின் பொடுதுயிலு
மூரிப்பாம்பைக் காலனலை
மூட்டியெழுப்பி நிலமாறுஞ்
சிலமொடும்போய்த் தரிசித்துஞ்
செழுமாமதியி னமுதகட
றேக்கியகத்தங் கசைவறுமோர்
தெய்வத்தவத்தோ ருளவிழியிற்
காலுந்தீப மினல்பந்தங்
கடிகூர்விறிசு கதிர்மதிபோற்
காட்டுமொளியா யிவையாவுங்
கடந்தாங்கழிவில் பேரொளியாய்ச்
சாலவிளங்கும் விந்துவெளியுந்
தடமாமயிலோய் தாலேலோ
தமரக்கடலைக் கடைந்தமுதந்
தருவோன்மருகா தாலேலோ. (௩)

வேறு.

காரார்திசைமலி போரார்களிறு கலங்கிப் பிளிறிடவே
கனலுமிறந்துத் திருகுமருப்பிற் கனிசினமொடு மோதிப்
பேராயிரமுடி யுரகனெளிக்கப் பின்போய்முன்னோடிப்
பேசருவடவரை குலவரைதிசைவரை பெயரும்படிதாவிப்
பார்சூழேழ்கடல் குழுறத்துள்ளிப் பனிவானகமோதிப்
பகருகோளைச் சாடிப்பீடுறு படிவருதகருடையோய்
தாரார்பொழில்சூழ் பொருநிறையே தாலோ தாலேலோ
சண்முகமுக்கட் பண்ணவர்குருபர தாலோ தாலேலோ. ௪

அமரர்தமக்கன் றொருநாளிரணிய வணிவடவரைமீதே
யுறைதருமும்மா லையிலுமருவி யகண்டாகாரமதாய்த்

திமிரமகற்றிய முச்சுடருக்கொளி செய்காரணவொளியாய்த்
திகழ்கருபுவன சராசரமுழுதுஞ் செறிபூரணவெளியாய்க்
கமைபுரமனவா சகமொடுகாயங் கண்டளவிடவருமின்
காட்சியைமாட்சிமை பெறமுன்காட்டிய கண்ணேயாவர்க்
குமரனெனநிலவிய சமரபுராதிப தாலோ தாலேலோ [குங்
சண்முகமுக்கட் பண்ணவர்குருபர தாலோ தாலேலோ. (கு)

கோளகைதடவிக் குடைபலநீடக் கொடியெண்டிசைமூடக்
கோதறுபேரணி சூரியர்மறையக் கொழுவியவெயில்வீச
நீளியசாமரை வீசப்பேரிக ணீள்கடலேழெனவே
நின்றுமுழங்கத் தெய்வநகரி னிரம்புமரம்பையர்தாம்
வேளைமருட்டு விழித்தொழில்கைத்தொழில் வேறுகாநடனம்
மிட்டுவரப்புயலொத்தவன்முதலவர்மெச்சிவரச்சுரர்கைத்
தாளமதொத்தவெள் ளானையிலுற்றோய் தாலோ தாலேலோ
சண்முகமுக்கட் பண்ணவர்குருபர தாலோ தாலேலோ. (கூ)

தென்னங்காவைச்சூழப்பூகத் திரளைவைபுடைசூழத்
தேமாவினமற்றவைபுடைசூழச் செறிதருபலவினின
மின்னுமவைபுடைசூழப்பெருவா ழைக்காடவைசூழ
மிளிர்கன்னற்காடவைசூழப்புனன் மிகுநெற்பணைமருத
மன்னுஞ்சூழப்பொன்னம்பூமியில் வானவர்வந்திழிய
மலிசோபானம்போலவிளங்கிய வளநெடுமிளமாழைத்
தன்னந்திகழ்சாரற்போரூரா தாலோ தாலேலோ
சண்முகமுக்கட்பண்ணவர்குருபரதாலோ தாலேலோ. (எ)

செங்கட்சிறுமின்றொளிர்வனமேதிச் செழுமேகங்குழுமித்
திகழ்தருவளமிசைகனைகுரலொடுதீம்பால்சொரிவெள்ள
ருவி, வெங்கட்பணிமணியின்குவைகழைமணி வெண்குவை
[பொங்கொளிசேர்
வியனீலக்குவையொடுமுச்சங்கநல் வேணியெனும்படியே

துங்கப்பேரலைகொண்டுவரன்றித்துண்ணென்றிழியொலியா
றுடியடிவளைமுழைபுதோறுங்கண்படுசோலைச்சாரலெலாந் [ற்
தங்கப்பொடியேயிளிர்போரூரா தாலோதாலேலோ
சண்முகமுக்கட்பண்ணவர்குருபர தாலோதாலேலோ. அ

வேறு.

கஞ்சனையன்றுமுனிந்துசிவந்தருள்
கையாய்தாலேலோ
காமனைவென்றவர் தோளிலுலாவிய
காலா தாலேலோ
மஞ்சன்மகன்கனவின்சொல்வழங்கிய
வாயாய்தாலேலோ
மஞ்சள்வடஞ்செறி குஞ்சரிகொங்கைகொண்
மார்பா தாலேலோ
விஞ்சுறுமன்பினர் பந்தனைகொன்றொளிர்
விழியாய்தாலேலே
வேடுவர்மங்கை யுளங்குடிதங்கிய
மெய்யாய்தாலேலோ
தஞ்செனவந்தவ ருஞ்சிடுசமர
புராதிப தாலேலோ
சரவணபவனேகுரவணிதருசண்
முகனே தாலேலோ. (கூ)

குண்டைச்சமணக் கரிகளையடுகோ
ளரியே தாலேலோ
கும்பத்திடுமென் பைத்திருவிற்றரு
குழகா தாலேலோ
பண்டைத்தமிழ்நற் கீரன்சிறைவிடு
பண்பா தாலேலோ

பச்சைக்கொடிகச் சுப்பொருகலசப்
பாலா தாலேலோ
மண்டைத்தலையிற் பலிநசைகொண்டவன்
மைந்தா தாலேலோ
வாரணமைந்து கரங்கொடுதழுவிய
வாகா தாலேலோ
தண்டைத்தாளுந் தோள்களுமழகிய
சதுரா தாலேலோ
சரவணபவனே குரவணிதருசண்
முகனே தாலேலோ. (கo)

தாற்பருவம் - முற்றிற்று.

---

## சப்பாணிப்பருவம்.

—*—

பொருநைநதியிற்படிந்திளமரக்காவிற்
புகுந்துசந்தப்பொங்கரிற்
புக்குமணநாறுதென்றற்குழவிவிளையாடு
பொதியப்பொலங்குவட்டிற்
றிரையெறியுமணியாழியங்கையிலடக்கியஞ்
செந்தமிழ்க்கடல்விரித்துந்
திறமையுடனுறையுமொரு குறுமுனியகத்திருட்
டிமிரமறமறைமுடிவெனு
மருளொளிபரப்புஞானக்கொழுஞ்சுடர்வைத்த
வாறுனைக்கொண்டலே
யன்பர்வாய்வண்குமுதம்விண்டுதண்டமிழ்
நறவமாரவெழுமொருமதியமே

தருணவுமைமுககமலமலரவருபரிதியே
சப்பாணிகொட்டியருளே
தடமலையைநிகர்கரிக டிரிசமரபுரிமுருக
சப்பாணி கொட்டியருளே. (௧)

அலைகட லிடைப் பெரிய மகரமீனீர்கிழிய
வம்பிறக்கடிந்தேகுமா
றரவுயர்த்திடுகொடிக்குருகுலக்கோமக
னடற்படைக்கடலுடையவே
சிலைவலியவாருவலயப்புயப்பற்குனன்
றேர்கடவிவெற்றிவளைவாய்ச்
செம்மலரில்வைத்துமறு மன்னர்செவிசெவிடுறச்
செல்விடுத்தொனிமுழக்குந்
தொலைவறுபசங்கதி னொறிக்குமரகரதிறச்
சுந்தரப்புயன்மருகனே
சுருதிமுடிவாசனத்துறைபனைமுலைக்குடந்
சொரியமுதவாரிநாறுந்
தலைமைபெறுசெங்குமுதவாயனேதூயனே
சப்பாணிகொட்டியருளே
தடமலையைநிகர்கரிகடிரிசமரபுரிமுருக
சப்பாணிகொட்டியருளே. (௨)

ஈராறுபரிதியீராறுமேருதயந்
திருங்குழை சுமந்தபுயமு
மீரொட்டு வெண்கலைகண் மேவிக்கனங்கருடய
வின்றிச் செழுஞ்சுடர்விடு
மோராறு மதியமீ ராறுதெய்வக்கயல
வொண்மலர் மலர்ந்தபடியே
யொற்றுமை பெறக்கொண்டு நிற்றல்போலத்திக
மொளிவிழி திறந்தருளுந் (௩)

சீரார் படைக்கலக் கமலமுமார்பமுஞ்
செய்யதண் டைத்தாளுமென்
றிமிரமற வெனதகஞ் சுடிகொண்டுமீளாது
திகழ்வீடு தருகுரிசிலே
தாரார் சடைப்புனிதர் பாலாகுகக்கடவுள்
சப்பாணி கொட்டியருளே
தடமலையை கிர்கரிக டிரிசமரபுரிமுருக
சப்பாணி கொட்டியருளே. (ரு)

நனவில்வரு கனவிற் சுழுத்தியிற்
பொறிகரண நற்புருட னிற்பகுதியு
நவில்கால பரமநி லசுத்தமாயையும்விண்ணி
னண்ணுபூ ரணமாயதோ
ருனலருவி யோமத் திருஞ்சுத்தவித்தைதமுத
லொருமூ வகைக்கருவியு
மொருபரம ஞாரியத்து விந்துவுமினிர்விசவ
முண்டதிசை யுயர்நாதமும்
வினவலுறு முடசார்ந்த மதனின்மா மாயையு
மிகுமொருப மதனிலிருளும்
மின்றுமென வுளசெய்தெ னுள்ளமல மகலவரு
விழிவழிப் பொழிபுழுகிலே [ள்
தனபதியை யெழுவனென வுளமகிழு மரன்மதலை
சப்பாணி கொட்டியருளே
தடமலைய கிர்கரிச டிரிசமர புரிமுருக
சப்பாணி கொட்டியருளே. (சு)

குலிசக் குழுக்கலவு பூனதக்கிம்புரிக்
கோடுகொளுடைய வெள்ளைக்
குஞ்சரக் கும்பமிசை கொட்டல்போலச்சிவன்
குவவுப்புயங்கொட்டல்போன்

வேறு.

மரகதப் பந்திநிறை பைங்கிரண மண்டலம்
வழங்குகுழை முகமதிகளும்
மாணிக்க மணிராசி யிளவெயிற் றிசைவீசு
மகுடநீ டியமுடிகளுங்
கரகதிர்ப் பகலெனச் சுடர்விரித் தொளிர்வயிர
கடகநிரை செறிதோள்களுங்
கறையகலு மதிமண் டலங்களென நித்திலங்
கதிர்விடும தாணிமார்புந்
திரகதச் செக்கரி னிறந்தங்கு மருங்குலுந்
திப்பியத் தவளமணிந்
திரண்மண்டு தண்டையங் கமலமுந் திகழவிச்
சித்திரப் பசுஞ்சிறைமயிற்
குரகதத் திவர்ந்தவடி யடியவர்க் கருண்முருக
கொட்டியருள் சப்பாணியே
கூரு ரயிற்றிறைவ போரூர்நகர்க்கதிப
கொட்டியருள் சப்பாணியே. (எ)

வேறு.

உடலிற்குடர்நீ ளக்கொடிசென் றுவ
ணத்திரள்வட்டமிட
வொள்ளியசெல்வப் பிள்ளைகள்பற்பல
வுயர்பட்டம்விடல்போற்
கடலிற்படுகுரு திப்பெருவெள்ளங்
கட்குழி சிறுபலபேய்
கடியதண்மூடிய பேரிகைமுழவு
கரங்கொடு கனைகாண
மிடலுற்றிடுபிண மாமலைதோறும்
வியன்பேய் களியாட்ட

பிட்டாடத்தலை வட்டாடக்கடு
வெஞ்சூர்க் குலமுழுதுங்
கொடுமைத்திறமு மறவேல்விட்டவ
கொட்டுக சப்பாணி
கொற்றவ நற்சம ரப்பதியுத்தம
கொட்டுக சப்பாணி. (௮)

வேறு.

ஆடகத்திரண்மதிலு மேனிலைச்சிகரிகளு
மாணிமுத் தொளிர்மேடையு
மாழிதத் தலைபொருவு பீடுடைக்கொடிகள்பல
வாடுபொற் குடமாடமு
நீடுதெற் றிகளுமணி சூளிகைச்செழுமனையு
நேர்செலுத் தியதேர்களு
நீர்நிறைத் திடுகுடமும் வாழைநற் கமுகினமு
நீணிலைப் பலதேர்களுஞ்
சேடுறத் திகழ்மகர தோரணப் பலமறுகு
தோறுமுத் தமிழோர்களுஞ்
சீர்மறைத் தலைவர்பரி பூரணத்தவரளகை
யாளனுத் தவரியாவருங்
கூடிமொய்த் தொளிர்சமர மாநகர்க் கொருமுதல்வ
கொட்டியருள் சப்பாணியே
கூடலிற்செழியனழல் கூனறப்புரியுமிறை
கொட்டியருள் சப்பாணியே. (௯)

வேறு.

தீதறுகற்பக நற்றருவுற்ற
செயக்குலி சப்பாணி
சேடனுடற்றுயில் பச்சைசிறத்த
செருச்செய் வளைப்பாணி

போதிடையுற்றுல கத்தைதயளித்த
புதுக்கர சப்பாணி
பூசுரர்நற்றவர் கற்றவரோத்து
புவித்தல முற்றூர்கண்
மூதணிகைக்கம லத்தொர்வெப்பு
முகக்கம லப்போது
மூடவிரிக்க வுதித்தமதிக்கதி
ரொத்தெழு மெய்த்தேவே
கோதறுநற்சம ரப்பதியுத்தம
கொட்டுக சப்பாணி
கூர்கொளயிற்படை யுற்றகரத்திறை
கொட்டுக சப்பாணி. (௧0)

சப்பாணிப்பருவம் - முற்றியது.

---

## முத்தப்பருவம்.

---

கயல்கொக் குலம்பின் சிரசுகளுங்
கரிக்கோடேன முடக்கோடுங்
கழையுங் கரும்புங் கமுகினமுங்
கதலிசாலி கடிக்கமலம்
புயனத்தார்தி தருமுத்தம்
புனலிற்கனலிற் புடவியினிற்
பொன்றும் பொதியிற் கேழொளிபோம்
பொருந்தும் விலையுண் டவைவேண்டே
மியல்புற் றென்று மழிவிலதா
யென்றும்புதுமை தருமொளியா
யெவர்க்கு மதிக்க வரிதாகி
யிருந்துமிருக்க மதரமென்ன

முயல்வுற்றளிக்கு நின்கனிவாய்
முத்தந்தருக முத்தமே
முகுந்தன்மருகா சமரபுரி
முருகாமுத்தந் தருகவே. (௧)

சந்தங்கமழ்மந் தானிலத்தேர்
தருக்கோடிவர்ந்து பொறியளிகா
றளைக்குமுறுக்கு நாண்கணைக்கோ
தண்டங்குழைத்து வளைத்தேற்றி
யிந்தங்கவிகை யமுதமிழ
லீயக்குயில்கள் விருதூத
விசைவாரிதிப்பே ரிகைமுழங்க
விருண்மால்களிறுஞ் சுகப்பரியுங்
கந்தங்கமழுங் குழற்படையுங்
கடவுள்வசந்த னெடுகுழக்
களித்துவருவோ னெளித்தேகக்
காட்சிதருகட் டழகுடையோய்
முந்துந்தவத்தோர் பணிசரண
முதல்வாமுத்தந் தருகவே
முகுந்தன்மருகா சமரபுரி
முருகா முத்தந்தருகவே. (௨)

பெருகுங்கருணை சுரந்தொழுகும்
பிராட்டிபசும்பொற் குடத்தமுதும்
பிறங்குமறுவரீராறு பெரியகுரும்பை
யொழுக்கமுதுங்
கருகுஞ்சகரர்க் கருள்புரிந்து
கடலினகடு கிழித்தொழுகுங்
கங்கைப்பெருந்தாயாயிரமாங்
கனிவாய்முத்த மிடுமமுதுங்

குருகின்சிறையும் பிறைக்கொழுந்துங்
கூடத்திகழ்செஞ் சடைப்பெருமான்
குமுதத்திருவாய்முத்தமிடக்
கொழிக்குநறவுமோனசுக
முருகுந்ததும்புங் கனிவாயான்
முத்தந்தருக முத்தமே
முகுந்தன்மருகா சமரபுரி
முருகா முத்தந்தருகவே.

வேறு.

பனியிற்குறிய துளிதூற்றும்
பரவைத்தரங்க மெடுத்தெறிந்த
பணிலத்திரளு மிரசிதப்பூம்
பணிச்செப்பேய்ந்த முரணினமு
நணிமுற்றியகு லுளைந்துசொரி
நளிவெண்டரளத் திடர்தோறு
நவைதீர்பவள வண்டல்வளை
நடுவும்படவர் மடமகளி
ரினிதுற்றிவர்ந்து பனைப்பாளை
யிருந்தகலச மதுவருந்தி
யிணர்க்கேதகையும் புனைப்போது
மெடுத்துமுடித்துக் களித்தாடு
முனிவர்குழாங்கள் புகழ்போரூர்
முதல்வாமுத்தந் தருகவே
முத்தார்கொத்தே யனுதிவரு
முத்தாமுத்தந் தருகவே.

வேறு.

பூணதமாலைக் கிங்கிணிபலவும்
பொலிவொடுகணகணெனப்

புனிதத்தண்டையி னொலிகலகலெனப்
பொற்றொடி யிளையதிர
மேனகுமனைவட வோசை தழைந்திட
வியனவ மணிமாலை
விரவியலம்பக் குண்டலமொளிவிட
மிளிர மணிச்சுடிகை
யானமுடப்பட மாயிரமுந்தள்
ளாடத் தளர்நடையிட்
டம்மைசெவிக்கின் சுவைபெறமழலை
யரும்பிடுசி சொரிவாயான்
மோனசுகந்தரு ஞானப்பிள்ளாய்
முத்தந் தந்தருளே
முத்தமிழ்நற்சம ரப்பதிநாயக
முத்தந் தந்தருளே. (௩)

இருண்மைப்படலங் கெடநுங்குஞ்சுட
ரொழின்மா ணிக்கவனா
யிளைந்துடனக் கிரிவந்திரா
நிணைவுறு பரிசதெனக்
கருடத்துவசனு மறிவரியானணி
கடகத்தோ டழுவிக்
கறையறுமுழுமதி யொருபத்தொன்று
கலந்துமகிழ்ந் துறல்போ
லருண்மொய்த்தொழுகு முகத்தொடுமுகம்வைத்
தழகிய மழலைசொலி
யையனுளங்களி பொங்குறமுத்த
மடிக்கடி தருவாயான்
முருகுற்றெழுநீ பத்தொடையழகா
முத்தந் தந்தருளே

முத்தமிழ்நற்சம ரப்பதிநாயக
முத்தந் தந்தருளே. (௬)

பூவேபூவிற் பரியளமேயப்
பூநிறை சுவைநறவே
பொங்குங்கடலே கடலிலுதித்தெழு
புனிதத் தெள்ளமுதே
காவேகாவிற் கொஞ்சும்பஞ்ச
வனக்கடவுட் கிளியே
கண்ணேகண்ணுறு பாவாய்பூவாய்
கனியே கனிரசமே
தேவேதேவர் சிரோமணியேயென்
சீருயிரோ யுயிரிற்
செம்பொருளேயரு ளேமுழுமணியே
மணியிற் றேசிகமே
மூவாமறையே மறையின்பொருளே
முத்தந் தந்தருளே
முத்தமிழ்நற்சம ரப்பதிநாயக
முத்தந் தந்தருளே. (௭)

ஆடகனன்கத் தரியால்வேளுக்
கம்புதிருத் துவபோ
லலவன்குறுமுட் டாள்கொடுகுவளையொ
டம்புயவிதழ்கின்று
மோடையினிடுங் கவையடிமேதிக
ளூறுகுடமடியில்வரா
லுகளவடிக்கடி முட்டக்கன்றெண
வுள்ளிச்சொரிவெள்ளம்
பீடுறுமாலைச்சாடிகொளாதொழு
பிரசவெளர்த்துடனே

பெருகிக்கதலியின் மஞ்சளொடிஞ்சி
பெருங்கழைசெஞ்சாலி
முடிபிறைக்குந் தொண்டைநன்னாடா
முத்தந் தந்தருளே
முத்தமிழ்நற்சமரப்பதிநாயக
முத்தந் தந்தருளே. (அ)

மாலைப்பொழுதிற் பெடையொடுசிறையளி
வனசக்கோயில்புக
வளர்மதியமுதகரங்கொண்டிதழ்வா
சக்கதவுநுழைக்
காலைப்பரிதி கரந்தாலந்தக்
கதவுதிறந்துவிடுங்
கடிமலரேரிப் பெருமதகெழுநீர்
கதிர்வயல்புகவெதிர்போஞ்
சேலைச்சினைபடு கனிதுதாத்தச்
செழிகிளைவிழிசெனவே
சிதறிக்கன்னற் காடுமுறிப்பத்
தேன்முத்தொடுசொரியு
மூலிச்சுவைதகிர் பாலிநன்னாடா
முத்தந் தந்தருளே
முத்தமிழ்நற்சமரப்பதிநாயக
முத்தந் தந்தருளே. (௯)

வேறு.

இமயமொய்த்தொன் றிமயவெற்பன்
றவபலப்பைம் பிடியனுள்
செறிகளிப்பண் புறவுளாக்குந்
சிலசொல்கற்குஞ் சிறுகிளா

யமருக்கு முனிவருக்கு
மடியவர்க்கு மமுதமே
யவுணருக்குஞ் சமணருக்குங்
கொடியவர்க்கு மனலமே
குமுதநற்பங் கயமுருக்குங்
குலிசமிக்குஞ் சுதைநறுங்
குலவுகற்கண் டிவையிருக்கு
மிதழிளப்பைங் குழலியே
சமரநற்செம் பதியருக்கன்
றருகமுத்தந் தருகவே
தணிகைவெற்பன் சரவணத்தன்
றருகமுத்தந் தருகவே. (௧௦)

முத்தப்பருவம் முற்றியது.

---

## வருகைப்பருவம்.

---

விரைநறுங்குழலினர் கொங்கைப்பெருங்குவடு
மிகுதடக்கடலுழக்க
வெள்ளைவாளைக்களிறுகொள்ளுகுன்முகில்பிளிறி
விள்ளக்கிழித்தஃதுறு
சிறைதருங்கந்திக் குடக்கழுத்தறமோதி
செட்டிலைக்கதலிசாடி
நீடுகன்னற்கா டொடித்துப்பொறிச்சிறைய
நீலவண்டுதுஞ்சத்
திரளொடும்பணைமண்டு செற்றுறுநடைத்திடச்
செறிதாளமுகிலாதியிற்

சிந்தப்பெருஞ்சோதி யுடுமண்டலத்தினிற்
றிகழ்கின்றமருதவேலி
மருவியம்புகழ்கொண்ட சமரபுரிதனினிலவு
மஞ்ஞைவாகனன்வருகவே
மலிபுவனமுழுவதுங்கிடுகிடெனநொடியில்வலம்
வருகந்தவேள்வருகவே. (க)

பொன்னஞ்சிறைப்பேடை யன்னங்களிப்போடு
புனலாடல்கண்டுதன்
புகலாவியின்சேவ லூடனாடிமாலையம்
பொழுதிற்கரந்துறைதரத்
துன்னுறுமடற்கே தகைத்துணைவெள்ளிதழ்த்
தூயகஞ்சக்குழுவினை
சுரிமுகச்சங்கினைத் திரையெறியுகித்திலத்
தொகுதியைச்சூலிப்பியைப்
பண்ணுநாரைத்திரளை நாடிப்பசும்புனைப்
பஞ்சரத்திடைகண்டுதன்
பவளவாயதின்வாய் மடுத்தருகணைத்துப்
பரிந்ததனின்முனிவகற்றி
மன்னுந்தருக்கொடு திளைக்குநெய்தற்சமர
மாநகர்க்கிறைவருகவே
மலிபுவனமுழுவதுங் கிடுகிடெனநொடியில்வலம்
வருகந்தவேள்வருகவே. (உ)

குழையளவுதாவடி செலுங்கயற்கட்கவுரி
கொஞ்சிவிளையாடுகிளியைக்
குழகர்வேணிப்பிறைத் தோணிமிசைவைத்தலை
கொழித்தகங்கையில்விடுத்து
மழைவெருவியுகளெம் புலியதளையானனத்
துறவைத்துநகைகொட்டியு

மொளிர்மணிச்சுடிகைமுட வுப்படத்தரவத்தை
யுலர்தலைமுழைக்கணுய்த்து
மிழைபொருவுமாமையோ டிலறலைமொண்டெரி
யவித்தரிமருப்புவில்லுக்
கெண்டோடயங்குபுரி நூனுண்வளைத்திட்
டெழிற்கரத்திடைபிடித்து
மழைபொருவுகளன்மடியில் விளையாடுகுகசமர
மாநகர்க்கிறைவருகவே
மலிபுவனமுழுவதுங் கிடுகிடெனநொடியில்வலம்
வருகந்தவேள்வருகவே. (௫)

மேருப்பொருப்பையொரு தண்டெனக்கொண்டுமெழு
வேலையையுறிஞ்சிவிட்டும்
விரிசக்கரவாளகிரி யொருவாகுபுரியாக
வெவ்வலித்தோளிலிட்டும்
பேருற்றகயமெட்டு மெட்டுநாகங்கொடு
பிணித்துச்செவிக்கணிந்தும்
பெரியபுவனப்பொறைக் கமடமதெடுத்துப்
பிறங்குசில்லெனவிடுத்துஞ்
சீருற்றுவிளையாடு பூதக்கணத்தொடுஞ்
சென்றுசூர்வேட்டையாடுஞ்
சேவகப்பெருமா ளெனுவியுட்பெருமாள்
செயத்தேவர்முனிவர்பெருமாண்
மாரிப்புயற்கருணை பொழிகின்றபோரூர
மாயூரகுகவருகவே
மலிபுவனமுழுவதுங் கிடுகிடெனநொடியில்வலம்
வருகந்தவேள்வருகவே. (௬)

அளகுபலமுட்டைதன் சிறைகொண்டணைக்குமா
றண்டராசிகளனைத்து

மகலப்பெருஞ்சிறையில் விகலப்பொருட்போ
லடக்கிவைத்தும்விடுத்துங்
களவகலவருசுத்த மாயைவெளிமுழுதுங்
கடந்தொருகணத்தில்வந்துங்
கலிசுவேதத்திலெழு சலராசிதந்தூழி
காலவழல்வெருளிதந்தும்
புளகமெழுமெய்ச்சிறை யடித்துப்பிரசண்டப்
பொருங்காலளித்துநச்சுப்
புழையெயிற்றுரகன்மணி யிரவிதந்துஞ்சிறைப்
பொருவினிழன்மதியளித்தும்
வளைமையுடனடமிடு மாயூரபோரூர
மாவீரகுகவருகவே
மலிபுவனமுழுவதுங் கடுகிடெனநொடியில்வலம்
வருகந்தவேள்வருகவே. (௫)

பூதம்புலன்பொறிகள் கரணங்குணம்பகுதி
புகலருகலாதிசுத்தம்
பொருவிலிருமாயையுங் காணவருமாணவப்
பொங்கிருளுமூடுருவியே
பேதங்களொந்துயிர்ப் போதங்கலந்துகலை
பேசொணாநேர்மைவெளியாய்ப்
பேராயிரங்கோடி சூரியருமட்கப்
பிறங்கியெழுஞானவொளியா
யேதங்கடந்துட் புறம்பாகியாவைக்கு
மின்பபரிபூரணமதா
யிலகருட்சத்தியே சத்தியாகக்கையி
லெடுத்தஞானச்சேவகா
மாதங்கனங்கண்டும் மாரிபொழிபோரூர
மாயூரகுகவருகவே

மலிபுவனமுழுவதுங் கிடுகிடெனநொடியில்வலம்
வருகந்தவேள்வருகவே. (௬)

வேறு.

கருத்தேபுகுந்து கதிகாட்டுங்
கண்ணேவருக மெய்ஞ்ஞானக்
கரும்பேவருக கருணைபொழி
காரேவருக வானந்தப்
பெருக்கேவருக யாங்கள்பெறும்
பேறேவருக மறைசொல்கிளிப்
பிள்ளாய்வருக பிறங்குதெய்வப்
பெருமாள்வருக குறமடந்தை
தருக்கேவருக மிடியகற்றுந்
தருவேவருக மன்பதைக்கோர்
தஞ்சேவருக வெமையளிக்குந்
தாயேவருக பவப்பிணிக்கு
மருத்தேவருக சமரபுரி
வாழ்வேவருக வருகவே
மறையின்சிர மெய்ப்பொருளான
வள்ளல்வருக வருகவே. (௭)

வட்டாட்டாகு மெங்கள்பவ
மாற்றவருக பொறிவேழம்
வணக்கவருக மனமாவை
மாய்க்கவருக மலச்சிறையை
விட்டாட்கொண்டு மெய்ஞ்ஞானம்
விளக்கவருக வியனருளே
மேலீடாக்கி யெங்குமிறை
மினிர்பேரின்பந் தரவருக

தட்டாதிருந்த சிவமென்றுந்
தானென்றிலைக்கு மயலகற்றித்
தானேயதுவா யதுதானாய்த்
தயங்குமோனந் தரவருக
மட்டார்சோலைச் சமரபுரி
வாழ்வேவருக வருகவே
மறையின்சிர மெய்ப்பொருளான
வள்ளல்வருக வருகவே. (௮)

வேறு.

உயிருண்மருவு திமிரமிரிய வொளிருமளவில் பரிதியே
யுததிபொருவு கருணையமுதெ னுளமுவந்துதவு மதியமே
மியலின்மதுர முழுதுமறியு மிசைகொள்பெரிய புலவனே
யிரவுபகலு நினையுமடிய ரிதயகமல னேசனே
கயிலையிறைவர் மகிழவொருசொல் கழறுபரம குரவனே
ககனசார்கள் முடிகடவு கமலசரண கடவுளே
மயிலின்முதுகி லுறையுகுமரன் வருகவருக வருகவே
மகிமைதழுவு சமரபுரியன் வருகவருக வருகவே. (௯)

அறையவரிய கருவியடவி யருகவொழுகு நதியமே
யறிவில்சமய வரிகள்வெருவி யலறமுடுகு சரபமே
நிறைகொள்பரம சுகமெய்யடியர் நினைவிலுதவு பிரமமே
நிகழுமயலு மறியவரிய நிமலவொளியுண்மதுரமே
கறைகளிரிய வெனதுமனது கருவிநிலவு புணரியே
கலசநிலைவ லனலையகல் கருணைபொழியு மெழிலியே
மறைகள்குலவு கமலசரணன் வருகவருக வருகவே
மகிமைதழுவு சமரபுரியன் வருகவருக வருகவே. (௧௦)

வருகைப்பருவம் - முற்றியது.

## அம்புலிப்பருவம்.



மானையாகந் தழுவு வாயிவனுமுழை தந்த
மானையாகந் தழுவுவான்
வனைசடைக்கங்கையலை தவழ்குழவிநீயதின்
மடித்தலக் குழவியிவனுந்
தேனனையமொழியறுவர் மகிழவருவாயிவன்
றிகழுமவர் மகிழவருவான்
சிவனடியுமுடியுநீ யறிதிமற் றவையிவன்
சிறுவிரற்சுட்டி யறிவான்
சோனைமழையெனவமுது பொழிகிரணனீயிவன்
சுககருணை யமுதுபொழிவான்
றுன்னிருள்கிழித்தெழுஞ் சோதிநீயிவனடியர்
துகளிருள் கிழித்தசோதி
யானவிம்முறைமைகொடு நீசிகரியான்மகிழ்ந்
தம்புலி யாடவாவே
யருமறையின்றெளிவிலவு சமரபுரிமுருகனுட
னம்புலி யாடவாவே. (௧)

சுரர்சிலர்க்கமுதுதவி நீதேய்வைகதியமுது
தொல்லுயிர்க் குதவிநிறைவான்
ரேமுறுகளங்கனீ யிவனடியர்களவினுஞ்
சொல்லுறுகளங்கமறியா
குரவரவினுக்குநீ வெருவுவாயஃதுமிவ
னூர்பரிக்கொருகவளமா
முலைகவலம்வரவுனக்கொருதினஞ்செல்லுமிவ
னொருநொடியி லோடிவருவா
னிரவினுக்குரியவொளி நீயிவனகம்புறந்
தெக்காலுமிக்க வொளியா

னெய்துதண்ணளிசிலர்க் குடையைநீயனைவர்க்கு
மிவனென்று தண்ணளியினு
னான்முதலெவர்க்குமொரு குரவனிவனுதலா
லம்புலி யாடவாவே
யருமறையினொலிநிலவு சமரபுரிமுருகனுட
னம்புலி யாடவாவே. (௨)

மயிலுமயிலுங்கொண்டு வன்பகைதணிக்கலா
மலரடித்தோணி கொண்டின்
மாருதபவசலதி யேழுங்கடக்கலாம்
வாறுலகுதொழ வாழலாம்
வெயிலொளியுமிகால வெனப்புகலமெய்ஞ்ஞான
மிக்கவொளி பெற்றுய்யலாம்
வீடகத்துலையா திருந்தமுதருந்தலா
மிகுதுகட்சிறை கடியலாங்
குயிலனையமொழியார் முகத்திறுக்கொப்பெனக்
கூறுதபெருமையுறலாங்
கொடியகயனோயகன் றெப்பொழுதுமொல்காத
குலிசமென வடிவுபெறலா
மயிலைமுளரிக்கரங் கொண்டசேவகனுட
னம்புலி யாடவாவே
யருமறையினொலிநிலவு சமரபுரிமுருகனுட
னம்புலி யாடவாவே. (௩)

கஞ்சாதனைத்தனைச் சிறையிடுவன்முத்தமிழ்க்
கவிஞனைச் சிறையிடுப்பன்
கடியகுன்றடுவனிருள் கடியுங்குணக்குன்று
கனகும்பனுக் கருளுவ
னெஞ்சாதகடலழித் தரிவைமுருகாவென்
றிசைக்கவருள் வாரிதருவ

ளிகலவுணர்களைகட் டடைந்தகடவுளொடு
மிரும்பயிர்தழைப்ப வைப்ப
னஞ்சாயசமணர்கழு வேறவிட்டடியர்நா
டோறுமீ டேறவுருவ
ணைவதழுவுபுத்தன்முடி யிடறியமூலமென்னை
நளினமங்கைக் கிணைசெய்வ
னஞ்சாதிருந்திடே லிவன்வெகுளிகொளுமுன
மம்புலி யாடவாவே
யருமறையினொலிநிலவு சமரபுரிமுருகனுட
னம்புலி யாடவாவே. (௪)

முக்கணாயகனரிய திருநுதற்குறுவியர்வின்
னெரிவடவையி னுதித்தோன்
மூதண்டகோளகை கிழித்தெழுந்தாயிர
முகந்தொறும் வெகுளிபொழியத்
தக்கன்மகசாலையுட் புக்கியங்குறைகின்ற
சதகோடிதேவரை யெலாஞ்
சாடிக்கொழுங்குருதி யாடிப்பெருந்தூளி
யாடித்தருக்கி யாடி
மிக்கவுனதுடலமொரு கறியாகமாநில
மிகுத்தபேரம்மி யாக
மேன்மைதருபாதவெங் குழலிகொடளாத்தனன்
வியர்வினலவணை யுதவு
மக்கடவுள்கட்கனல மிக்குழலிநீவிளாங்
தம்புலி யாடவாவே
யருமறையினொலிநிலவு சமரபுரிமுருகனுட
னம்புலியாடவாவே. (௫)

விரவுபலவண்டங்க ளிவனுட்டையெனவைத்து
விளையாடு பைங்கழற்காய்

விரிகருவியாறு மிவனைவறலைகொண்ட
வீறாழியக்கார ராம்
பொருவரியவிருமாயை யிவனுளாதினைத்தபடி
புரிகின்ற தாதியர்களாம்
பூரணத்திரஞான வாரியெழுசுவையமுது
போசனமிவன்றனக்கே
கருதரியமறைநாலு மிவனாசிருக்குமொரு
கதிர்மணிச்சிங்க வணையாங்
ககனசுரரனைவரு மிவனைப்பணிந்துகை
கட்டும்பெருஞ்சேனையா
மரிபிரமரிவனுக் கமைச்சராமாதலா
லம்புலியாடவாவே
யருமறையிறைஞ்சிலவு சமரபுரிமுருகனுட
னம்புலி யாடவாவே. (௩)

மேகசாலங்களென நீலக்கலாபம்
விரித்துவிச்சித்திர கிரிபோல்
விண்டுவினைமேவியோர் சண்டநாகத்தினை
விடுத்தவனை வேலைமூழ்கப்
பாருவாரிதியளாறு படமொன்டுசிவலோக
பரியந்தமேவிநின்று
பரமனுலகும்பரந் தாமனுலகும்பரி
மளிக்கின்றகமல னுலகும்
போகமலிகற்பகா டவிநிழல்வாழ்வே
பொலிந்தபுரு கூதனுலகும்
புகருலகுமதியுலகு கதிருலகுபூவுலகு
பொங்கப்பொழிந்து மீளு
மாகிறைவர்பின்வருந் தோகையிறைதன்னுட
னம்புலியாடவாவே

யருமறையிமொழிவிதிலவு சமரபுரிமுருகனுட
னம்புலியாடவாவே. (எ)

புலன்மறுகுபொறியையுறு கமடமெனவுட்கொண்டு
பொருமுக்குணங்கள்வென்று
பூரகமிரேசகந் தாரகமெனுந்தொழில்
புகன்றகாலிற் பயின்று
கலகமறுநடுநாடி சென்றுமுச்சுடர்களின்
கதிர்மண்டலங் கடந்து
கணபணுடவியுரகன் முடியிற்றுளக்கமறு
கம்பத்திலசை வற்றுளோர்
மலவிரவுவிடியமிகு தூறவுணர்வுநசையறுதன்
மலிகுணக் குன்றின்முடிமேன்
மன்னுஞானக்கதி ரெழுந்தொளிபரப்பமா
மூதுரசநாத முழுது
மலகில்பவதுயிலறக் கூவுசேவலனுட
னம்புலி யாடவாவே
யருமறையிமொழிவிதிலவு சமரபுரிமுருகனுட
னம்புலி யாடவாவே. (அ)

## வேறு.

கானவர்குலமட மானைமணந்த கடம்பன்சுனை பொருநிர்க்
கஞ்சச்சரவண வணைமிசைதனினனி கண்டுயில்சிறுகுழவி
யானவுன்மனைவி வளர்த்திடுமகனிவ னம்மானுரலோடே
யன்றனைதிருடிக் கட்டுணியிடைய னனையுஞ்சிறுவாலை
யூனமிலத்தன் பித்தனிவற்கென் றுன்னியிருந்து விடே
லுலகசராசரமிவன்முத்தொழில்விடவுண்டோகண்டிகொ
வானவர்சேனை பதியுடனுடிட வாவம்புலி வாவே [லோ
மலிசமராபுரி முருகனருகே வாவம்புலி வாவே. (௯)

குறுமுட்டாணெட் டிதழ்வெண்கமலக் கோயிலிருந்தவடன்
கொழுநன்றெழிறந் திடவோபச்சைக் கொண்டற்கிணை
[செயவோ
தறுகட்சிறுகட் டழைசெவிவெள்ளைத் தந்திக்கர சுறையுந்
தருகிழறரவோ துருவனிருக்குந் தங்கக்கிரி தரவோ
பிறவிப்பகையைத் தெறவோதண்கலை பிரியாதருடரவோ
பேசருமறுவில ரியாவருநிற்கப் பேரருளே தறியே
மறுவுற்றுளாகினை வாவாவென்றனன் வாவம்புலி வாவே
மலிசமராபுரி முருகனைதருகே வாவம்புலி வாவே. (௧௦)

அம்புலிப்பருவம் - முற்றியது.

---

# சிற்றிற்பருவம்.

---

தேமாங்கனியி னடுப்பமைத்துத்
திகழுங்கழிந்த வலம்புரியிற்
செந்தேனுலைப்பெய் தரவீன்ற
செழுமாமணிவெங் கனன்மூட்டிப்
பூமாதலையின் விதையரிசி
புகட்டிச்சமைத்துக் கதலிமடற்
பொங்கப்பிழியு மதன்கனியும்
பொருந்தவளாவிக் கறியட்டுக்
காமாதவிப்பூம் பந்தரிடைக்
கயற்கண்ணுய மிழைத்தவண்டல்
கருதுப்புவன கோடியெல்லாங்
கரந்தும்படைத்துங் காக்குமொரு

சீமானுனக்கோ ரிலக்கோசொல்
சிறியேஞ்சிற்றில் சிதையேலே
தேரூர்வீதிப் போரூரா
சிறியேஞ்சிற்றில் சிதையேலே. (௧)

அங்கைத்தலத்திற் குண்டகழ்ந்தீ
ரடக்குழலிவ ரேறனையா
ளகத்தின்ஞான விளக்கேற்று
மடிகேள்பவள விளக்கவியேல்
செங்கட்டிரண்மெய் யுடையோற்குச்
செழுங்கற்பகத்தி னிழறருவோய்
செந்தேன் றுளிக்குங் குருந்தடிழ
நீர்க்கேன்மேன்மேற் புடைத்தெழுந்த
கொங்கைச்சுமையோ டருங்களபங்
கூடச்சுமந்து வாடுமிடைக்
கொம்பரரம்பை மடமாளிர்
குலவச்சிதையா விடளித்தோய்
திங்கட்கிரண சித்திலப்பூஞ்
சிற்றில்சிதையேல் சிதையேலே
தேரூர்வீதிப் போரூரா
சிறியேஞ்சிற்றில் சிதையேலே. (௨)

விதையாயிருக்கு மைந்தெழுத்தும்
வேதாகமமு முத்தமிழும்
விளங்குஞ்சரிதா திகளென்றும்
வீறுகியமெய்ச் சிவமதமுஞ்
சதையாதரிக்குந் திருநீறுஞ்
சோதிமயனத் திருமணியுந்
தூசடர்பத்தி விதிநெறியின்
றொடர்புஞ்செடிதீர் மெய்யடியா

ரிறையாலயத்தைப் பிரியாதங்
கிருடீர்ஞான மணிவிளக்கு
மிலங்குமவுணர் துளும்பாத
வின்பவளனுஞ் சந்ததமுஞ்
சிதையாதளிக்கு மோரிறையே
சிறியேஞ்சிற்றில் சிதையேலே
தேரூர்வீதிப் போரூரா
சிறியேஞ்சிற்றில் சிதையேலே. (௩)

மறையின்சிரமெய் வாச்சியமு
மருவுங்கருவி யாறுறின்
வயங்குமுடியிற் பேரருளும்
வானோர்முடியி னறுந்தொடையுங்
கறைகொண்மிடற்றோன் றிருப்புயத்துக்
கடியாரிதழிச் செழுந்தாருங்
கவரிசுருணை நறவுபொழி
கண்ணொண்கமலத் தண்மலரு
மறையுந்தணிகை மலைச்சுனைக்கு
ளலருமலரு மணக்குமுன
தருஞ்சீமடிசிற் றிலிற்புழுதி
யளவிமணப்பத் தகுமோதான்
சிறைவண்டோகைக் கிறையோனே
சிறியேஞ்சிற்றில் சிதையேலே
தேரூர்வீதிப் போரூரா
சிறியேஞ்சிற்றில் சிதையேலே. (௪)

அடியார்விமலத் திருவகத்து
ளன்புகொபாறுமை யவாவறுத்த
லடிப்பாங்கமைத்து மலக்காட்டத்
ததிஞானக் கனன்மூட்டி.

மடியாதிருந்த வுயிர்க்கலசம்
வழியவருட்பே ருலைவார்த்து
மாறுப்பெருமைச் சிவானந்த
மதுரச்சோறு தினம்பொங்கி
விடியாச்சிவ போதவிருள்
வீயமவுனச் சுடர்விளக்கு
விளக்கியிருந்த படியிருந்து
மேலாஞ்சிற்றில் விளையாடுஞ்
செடிதீரகத்தோர் புகழ்வாலை
சிறுவாசிற்றில் சிதையேலே
தேரூர்வீதிப் போரூரா
சிறியேஞ்சிற்றில் சிதையேலே. (௫)

ஆறுவதனை தாமரைக
ளலருமதுரச் சுதைமடுவே
யடியாரிதய தாமரையு
ளரும்பிமாறுப் பரிமளமே
வீறுமமரர் கணஞ்சூழ்ந்து
வியப்பமுளைத்த முழுமதியே
வெவ்வாளவுணக் கருங்கடலை
விழுங்கியெழுந்த வடவனலே
மாறுபடுபுன் சமயவன
மலைத்துமுறித்த மதகளிறே
மாயாப்பிறவிக் கனலவிய
வளருங்கருணை பொழிகாரே
தேறுமுயிருட் பூரணமே
சிறியேஞ்சிற்றில் சிதையேலே
தேரூர்வீதிப் போரூரா
சிறியேஞ்சிற்றில் சிதையேலே. (௬)

கரியின்கோடு மகிற்றிரளுங்
கடிச்சந்தனமுங் கழைமணியுங்
கடுவூற்றிருந்த துளையெயிற்றுக்
கடுங்கணரவின் முழுமணியும்
விரியுந்தரங்கக் கரங்கள்கொடு
விரவிக்கொழித்து நிலங்கிழித்து
வேலைபுகுதப் பாதலத்தின்
மிளிருமிராச வுரகபடம்
பரியுமணிக ணீர்கதுவல்
பரிதியுருவம் பலவெடுத்துப்
பரமானந்தக் கடல்படிவான்
பரிந்துமூழ்கித் தவஞ்செயல்போற்
றெரியும்பாலித் திருநாடா
சிறியேஞ்சிற்றில் சிதையேலே
தேருர்வீதிப் போரூரா
சிறியேஞ்சிற்றில் சிதையேலே. (௭)

தருவிற்படரும் வல்லியெனத்
தகுமாடவரை மடவார்க
டழுவப்புயத்தின் மூலக்கோடு
தைப்பத்தெரியன் முகையுடைந்து
முருகுற்றெழுந்து துளிகணைக்கு
மூரிச்சுதைமா ளிகையிழைத்த
முதிரும்பதும ராகவொளி
முழுமீன்றிகழு மகல்வானப்
பருதித்திலவெண் பந்தருக்குப்
பவளநெடுங்கால் பலநாட்டும்
பண்பாமதியம் பந்தர்நடுப்
பால்வெண்டரளப் புஞ்சமெனத்

தெரியும்பாலித் திருநாடா
சிறியேஞ்சிற்றில் சிதையேலே
தேரூர்வீதிப் போரூரா
சிறியேஞ்சிற்றில் சிதையேலே. (அ)

கமலக்கனைசெங் நெலிற்களையுங்
கடைச்சிமகளிர் வளையொலியாற்
கயல்போய்க் கரும்பைவளைத்தொடிப்பக்
கலித்தகொழுஞ்சா றொழுகுவழித்
தமரக்களிவண் டொழுங்கேறல்
சம்பராரி நாணேற்றுந்
தனுவைப்பொருவ மலரோடை
தருக்குமவன்றூ ணியைநிகர்ப்ப
நிமலக்கமுகின் குடப்பாளை
நிலவுக்கவிகை தனையேய்ப்ப
நெடுமாளிகையின் மகளிரவ
னேருஞாயிற் படையேய்க்குந்
திமிலப்பாலித் திருநாடா
சிறியேஞ்சிற்றில் சிதையேலே
தேரூர்வீதிப் போரூரா
சிறியேஞ்சிற்றில் சிதையேலே. (கூ)

அருணன்றபனஞ் செவ்விளநீ
ரகற்றப்பசும்பொற் புரவியினைப்
பரும்பும்பொதும்பிற் றுயின்முகினீ
ராற்றக்கமுகு குடைநிழற்றக்
கருவினிருந்து நிமிர்ந்துதலை
கவிழ்க்குஞ்சாலிக் கதிர்க்கற்றைக்
கவரிமருங்கின் காலசைப்பக்
கடிச்சண்பகங்கள் மணம்வீசத்

தருணவாழை யாலவட்டஞ்
சந்தப்பொதியக் காலெறியத்
தரணியிதயங் களிசிறப்பத்
தயங்குமணித்தேர் மெலச்செலுத்துந்
திருவண்பாலிச் செழுநாடா
சிறியேஞ்சிற்றில் சிதையேலே
தேரூர்வீதிப் போரூரா
சிறியேஞ்சிற்றில் சிதையேலே. (௧௦)

சிற்றிற்பருவ முற்றியது.

---

## சிறுபறைப்பருவம்.

—*—

கனகருவ டனகிலவு வீரவாகுத்தலைவர்
ககனமுக டளவுமிரதக்
கணமணிமுழக்குங் கவுட்குழிதிறந்துபாய்
கலுழிமத கரிமுழக்கு
மனகதியினைப்பொருவு துரகதமுழக்கொடு
வயப்பூதகண முழக்கும்
வால்வளைமுழக்குமதி பேரிகைமுழக்குமகல்
வானவர்கண் முடிமுழக்கும்
பனகவணைதுயிலுமவன் முதலினோருபயதிசை
பல்லாண்டுசொலு முழக்கும்
படிறவுணமாசுணக் குருமெனச்செவிபுகப்
பண்டுசூர்வென்ற சதுரா
தினகரனை நிகர்சமர புரியிலுறைகுமரவேள்
சிறுபறை முழக்கியருளே
செறிகலபமயின்முதுகி னுதயசின்மயதூய
சிறுபறைமுழக்கி யருளே. (௧)

குடமுழாவாணனீ ராயிரகரங்கொண்டு
குமுகுமெனவே முழக்கக்
கொண்டலினிறக்கடவுண் முழவொலிமுழக்கவிரி
கோகனக மாளிகையிறைன்
றடமருவுகைத்தாள நற்றெறிமுழக்கவந்
தமருகத்தொனி முழக்கத்
தாரளிமுழக்கமறை நூபுரமுழக்கவிரு
தாளகடா ளம்முழக்க
வடனதியிரைக்கமணி யரவுகளிரைக்கவுழை
யலறமுய லகனெளிவுற
வாடகமணிச்சபையி னடமிழைத் துமைக்
கன்புசெயு மின்பவடிவோன்
றிடமருவுகுமரனே சமரபுரிமுருகனே
சிறுபறைமுழக்கி யருளே
செறிகலபமயின்முது கினி னுதயசின்மயதூய
சிறுபறைமுழக்கி யருளே. (உ)

ஆறுசமயக்கடவுள் வேறுவேறின்றியா
ளொருவனேயங்கங் கிருந்
தன்பர்க்குமுத்திதரு வித்தென்றியாவர்க்கு
மறிவித்த வதனமணியே
வீறசுரர் துஞ்சவெஞ் சிறைவிண்டுவானவர்கள்
விண்ணகத்தமு தருந்த
வெற்றிமுரசன்றனைத்து சேனைவாரிதியிடை
வியப்புறமுழங்கு முறைபோன்
மாறுபடுகாமாதி வெம்படைகடுஞ்சிட
மலச்சிறைகழன்று ஞான
மாவிண்ணகத்திருந் தானந்தவமுதெனது
வாய்மடுத் துண்ண வறிவிற்

றேறுமறைநாதமெனு நினதுமுளரிக்கரச்
சிறுபறைமுழக்கி யருளே
செறிகலபமயின்முதுகி னுதயசின்மயதூய
சிறுபறைமுழக்கியருளே. (கூ)

கட்டைமுட்டமுவுதா ணெட்டிதழுடுத்தசெங்
கமலநான்முக னெகினமுங்
கவுத்துவமணிப்பணியொ டம்போருகாடவி
கலித்தபச்சைப் பன்றியு
மட்டிலவுசீர்பாத மின்றளவுகண்டிலா
வானவனுமோ ரொருவனை
வழிவருஞ்சரிதாதி வருவித்துவீடுதரும்
வணைதமிழ்க் காழிமேவி
யெட்டுணையுமறிவரு மனந்தசிவனைவருவை
யென்றுபெய ரிட்டழைத்தங்
கிரும்புண்டநீரிற் றிரும்பாதவீடுதரு
மிளரியகவு ணியர்விளக்கே
இட்டமொடுவாமுதவு சமாபுரிமுருகவேள்
சிறுபறைமுழக்கி யருளே
செறிகலபமயின்முதுகி னுதயசின்மயதூய
சிறுபறைமுழக்கி யருளே. (சும)

வெளியில்வளியசைவற்று நின்றவாறமலவுள
மிளிர்பரத் திலயமாகி
மெய்த்தவமிழைப்பவர்க் கைல்வானநதிநீர்
வியன்றுளிக் கரமிர்த்தங்
களியொடுங்கரிமொண்டு குண்டிகைநிறைப்பவல
வழ்பகைக் கவிகடாவி
யங்கற்பகக்கனி கொணர்ந்துவந்திக்கவனு
தினமுமவரனையு மறைநால்

கிளிகள்பயிலக்ககன கந்தருவர்வந்தமுத
கீதநாதம் முழக்குங்
கிளர்சந்தனப்பொங்கர் மலிசாரல்கயிலையங்
கிரிவாரவளை நிகர்க்குந்
தெளிவுதருசமரபுரி தனினிலவுகுமரவேள்
சிறுபறைமுழக்கி யருளே
செறிகலபமயின்முதுகி லுதயசின்மயனாய
சிறுபறைமுழக்கி யருளே. (௫)

வேறு.

புகர்படுதொண்டை நிமிர்த்துச்சிகிவாய்
பொருவக்கரி மதியிற்
பொங்கமுதள்ளிப் பிடிகளிபெருகப்
போழ்வாய் வழியூற்றி
மகவுடுநடவும் பொழில்படுமுகில்வாய்
மணிநீர்திணி தரளம்
வாரியிறைத்துக் கற்பகநற்குழை
மலர்நறை சொரிதரவே
தகரமுறித்துக் கயமுனிபகுவாய்
தந்தப்பிடி நுதலைத்
தைவந்தருகி லணைத்துமணத்திடு
சண்பகமலர் துயிலுங்
குகைபடுசாரற் போரூரிறையே
கொட்டுகசிறு பறையே
கொத்துறுமுத்தமிழ் மெத்தவளர்த்தவ
கொட்டுக சிறுபறையே. (௬)

அலைகடைமுடைகதுவிய தளிர்வடிவத்
தாய்ச்சியர் மத்தொலியு

மங்குடமடிமூலை விம்மிக்கன்றுளி
யாணிரைகத் தொலியுங்
இலைபடு தூலைவழி விரல்விடு
தொறுவர்கள் இதக்குழலொலியுங்
கேழ்செறிகானக் கோழிகண்முறைமுறை
இட்டிக் கூவொலியும்
வினைதருதாவத் தனிபலவினாரி
விளக்கிய இரொலியும்
விடியற்காலைக் கடலைப்பொருவ
மிகுந்தெழுமா முல்லைக்
குளமலிகன்னன் றருபோரூரிறை
கொட்டுகசிறு பறையே
கொந்துறுமுத்தமிழ் மெத்தவளர்த்தவ
கொட்டுகசிறு பறையே. (௭)

இனிமொழிபுகல்வார் இதம்பயில்வார்
இன்னரி வாசிப்பார்
கேழ்கலணணிவார் மாலைகள்புனைவார்
இளர்மயினைடமிடுவா
ரளிசூழ்பூம்பந் தெறிவார்குங்கும
மள்ளியிறைத் திடுவா
ராடவர்புயவிணை மீதிற்றுயில்வா
ரழகுபணிக் கருள்வார்
களிறிடைவருவார் சிவிகையில்வருவார்
கவனப்பரி வருவார்
காமனில்வருவார் மாமனில்வருவார்
கஞ்சனில்வர தருள்வார்
குளிர்தமிழ்புனைவார் திகழ்போரூரிறை
கொட்டுக சிறுபறையே

கொத்தாறுமுத்தமிழ் மெத்தவளர்த்தவ
கொட்டுக சிறுபறையே. (௮)

உததிகடந்த நெடும்பலுமுட்குழி
கணுமெக்கிய வயிறு
மூராவங்க ணொளிந்திடுசெவிகளு
முளநெட்டைப்பலபேய்
கதழெரிவெம்பசி யற்றனமென்று
களிப்பொடுகை கொட்டக்
ககனர்க்காசிக லற்றனமென்றணி
கடகத்தோள் கொட்ட
மதமலியவுணரு ளம்பறைகொட்டிட
வானவர் நகரியெலா
மன்னியவீரப் பேரிகைகொட்ட
மணிக்குட ருதிரமனாங்
குதிகொளும்வெற்றிச் சத்திதரித்தோய்
கொட்டுக சிறுபறையே
கொத்தாறுமுத்தமிழ் மெத்தவளர்த்தவ
கொட்டுக சிறுபறையே. (௯)

மரகதமணிக்குவடு தழைசிறைவிரித்தாகன்
மணிமுடிநெளிக்க விருமூ
வளமுளமுடிப்பவள வரையிணையெடுத்துநட
மிடமெனமயிற் பரியின்மே
லருள்விழிகொழிக்கமுக மதிநிலவெறிக்கவினை
யடியவர்களிக்க வருவோ
யம்மனர்கள்பிதற்றுகலை யலைகடன்முழக்கமற
வருமறைமுழக்கமுறையே
யிருமதுணையிற்பெரிய நதிவிடுதிருப்பதிக
மெதிர்செலவெடுத்த பெருமா

ணிருளைமலைக்குமல மறவுனதடிக்கமல
மெனதுபுன்முடிக்க ணருள்வோய்
செருவலிமுழக்குநிசி சரர்கெட வுருத்தவிறை
சிறுபறைமுழக்கி யருளே
செழுமணிமதிற்சமர புரியிலுறைசிற்பரம
சிறுபறைமுழக்கியருளே. (௧0)

சிறுபறைப்பருவம் - முற்றியது.

---

## சிறுதேர்ப்பருவம்.

—————※—————

மதுகரம்புக்கிடற விரைகமழுங்குறியமுகை
வாய்விண்டுமடன் மடக்கி
மதுமாரிபொழிகின்ற தொங்கலாகண்டலன்
வயத்தொடுந் தேருருட்ட
விதுகரமுமட்கவோ ராயிரகரங்கொண்டு
வேலையிருளள்ளி யுண்டு
வெற்பின்முடியெழுகடவுள் சூர்மகற்கஞ்சாது
வியன்மணித் தேருருட்டக்
கதமெழரிச்செங்குஞ் சிவெண்பற்பகங்கட்
கரும்பேய்களவுண ருடலக்
கார்வரையுருட்டமா லட்டதிசைதனதாணை
கைக்கொள்சக் கரமுருட்டச்
சிறுதவறுபெருந்தே ருருட்டுபோரூரிறைவ
சிறுதேருருட்டி யருளே
சிமயமொய்த்துமிமய மயில்வயிற்றுதயமணி
சிறுதேருருட்டி யருளே. (௧)

மறுகுவளியெறியுங் கடுஞ்சிறைப்புளிநக
வளைந்துண்ட வெண்டலைச்செம்
மாமுதுகுடைக்கருடன் மீதிவர்ந்தொளிபெருகு
மரகதநிறக் கடவுளு
முறுகெரிகடுக்குஞ் சிகைப்பவளவாய்வெண்மை
மொய்த்தசிறை விள்ளாவடி
மூதோதிமத்திவர்ந் தாரணமுழக்குநா
முண்டகமனைக் கடவுளுங்
குறுகியிருபுறனும்வர நடுவிடைப்பைஞ்சிறைக்
குரகதங்கடவி யடியார்
குறைகளைந்தாறுமதி வதனவழிகருணைபொழி
கொண்டலே யண்டரரசே
சிறுஇடைப்பெருமுலைத் தேவகுஞ்சரிகணவ
சிறுதேருருட்டி யருளே
சிமயமொய்த்தடமிமய மயில்வயிற்றுதயமணி
சிறுதேருருட்டி யருளே. (௨)

பாதகிண்கிணியுமெலும் புப்பெரும்பலகையும்
பகர்நாடி யுருவாணியும்
பரியமருமத்தட்டி மரியசீர்க்கூவிரம்
படிறுசெறி பொறியாடியுங்
காதரருகுஞ்சிக் கொடிஞ்சியும்பலமொழி
கலித்தபல் லியராசியுங்
கணமொடுமலிந்தவுட லெனவுளதரும்பெரிய
கடுவேக முடையநாளு
பேதமுறுதேர்கண்மீ தாருயிர்ப்பிள்ளையைப்
பிறங்கிட விருத்திவெற்றிப்
பேசருமணப்புரவி கட்டிவினைவடவழிப்
பெருமநின்னருள் வலவனூ

நீதநடத்திடச் செய்தருமரோசனே
சிறுதேருருட்டி யருளே
சிமயமொய்த்திடுமிமய மயில்வயிற்றுதயமணி
சிறுதேருருட்டி யருளே. (௮)

உலகினொடுசராசர மெவையுமாயொன்றினொடு
மொருபற்றிலாத பொருளா
யுறுமறிவையறிவிடத் தெழுகின்றசிற்றசைவி
லுயிருலகுமயலில் பரமு
மிலகுமவையெங்ஙன மெனிற்கருதுமறிவொன்ற
தெழுநினைவுசுட்டு பொருளொன்
றிவையோரிரண்டையு மிணைத்தும்பிரித்து
மியக்கிவரு பொருளொன்றுமாங்
கலகமுறுமந்நினை வின்றுநின்றப்பொருளு
மின்றுபரகதியு மிதுவே
காணென்றுகடையேனை வாவென்றுமுடிமீது
கஞ்சமலரடி தரித்தென்
சிலைமனங்கனிசெய்த குமரசற்குரவனே
சிறுதேருருட்டி யருளே
சிமயமொய்த்திடுமிமய மயில்வயிற்றுதயமணி
சிறுதேருருட்டி யருளே. (௯)

ஒருபொருளிடத்தினிற் சச்சிதானந்தமுட
னுருவநாமமு முள்ளதென்
றுளைதந்துமுன்னர்பி னருண்டாய்விளங்கியுறு
பிரியமா யுளமூன்றுமே
மருளிரியவருமெய்ம்மை யுருவநாமம்பொய்மை
யன்பமுறைதயுரக வுருவின்
மாறுதலிந்நிடுநி பின்பமுமை தநன்று
மதித்துவர்க் கரவினமைபி

ளிருளறும்பிரமமே நிகழுமற்றொருபொரு
மெதிரிட்டிலங்கா தெனை
வேழ்பிறவிவாரிதி யிலாழுமெனைவா
றெடுத்தருள ளித்தகுரவா
தெருளுறுங்கலைமுனிவர் பரவுபோரூர்மு
சிறுதேருருட்டி யருளே
சிமயமொய்த்திடுமிமய மயில்வயிற்று
சிறுதேருருட்டி யருளே.

வேறு.

வடவைக்கனலென வுதரக்கனன்மிக
மண்டப் பசிவிஞ்சி
மண்டையின்மூளையை யளையெனமு
வாரிவிழுங்க வதின்
புடையிற்சிறுபேய் கெஞ்சிக் கெஞ்சிப்
பொருமியழத் தேர்கள்
புணரிக்கலனிற் குருதிக்கடலிற்
போகக் காகமிற
மிடறற்றுகெ வந்தக்குழுவினை
விரிதலை முதுகூளி
வெங்களநாடக சாலையிலாட்ட
வெகுண்டெழு மவுணர்களைத்
துடலைக்கறியி னளைத்தெழுதேர
னுருட்டுக சிறுதேரோ
யுமையொருபாகற் கருமைக்குமர
னுருட்டுக சிறுதேரோ.

கலைதருகுறுமுட் டாண்டெண்டருகுறு
கண்டற்கரி யெயிறு

காணெனவெண்முகை யுண்டாய்விண்டது
காலுந்தூக ளள்ளி
நவையறுபெடைஞெண் டெக்குதவிப்பக
னள்ளிருளனை மனைவாய்
நண்புறுமஃதொடு புக்குக்கொண்ட
னறுங்குறு தூளிவீசத்
தவநனிகுளிரா னுளையக்கடறன்
றண்டிடனவண் கையாற்
றாளக்கதவும் பவளக்கதவுந்
தந்நம்மனை மூடு
முவமையினெய்தற் போரூரிறைவ
வுருட்டுக சிறுதேரோ
யுமையொருபாகற் கருமைக்குமர
வுருட்டுக சிறுதேரோ. (எ)

பசுமைப்புல்லிச் செங்கிறவல்லிப்
பங்கே ருகமீதும்
பால்பாய்தாரு டெக்குமடற்குலை
பரியுங் கதலியினு
நசையுற்றிடுகட் டேறற்பானை
நறும்பூகத் திடையு
நவைதீர்வா ணெட்டிலைமுண்டக
நகுவெண்டுனர் தோறுந்
திசையுற்றருமணம் வீசுபுன்ஞைகஞ்
செறிபுளி னத்திடையுஞ்
சினைவளைமந்திய முதத்திரள்சிந்துஞ்
செய்தியின்மணி சொரியு
முசிதக்கல்வியர் சூழ்போரூர
வுருட்டுக சிறுதேரோ

யுமையொருபாகற் கருமைக்குமர
னுருட்டுக சிறுதேரோ. (அ)

தரளவெண்மணியுஞ் சங்குந்துகிருந்
தடவாள்வாய் முரணுந்
தண்டிரையெறியும் வண்கடலிடையே
தந்திக்கண கோடு
நளாதருகவரியு நாவியுமகிலு
நற்சந்தக் குறடு
நாடருதிரையா லுந்திப்பலநதி
நண்ணுறல் பண்ணுறவே
யிருநிலமுழுதா ளரையர்க்கங்கங்
கெய்தியதிரூப மெலா
மேர்திறையிட்டங் கவனுளாடங்கி
யிருந்திடு முறைமாறு
முருமலிசெய்தற் போரூரிறைவ
னுருட்டுக சிறுதேரோ
யுமையொருபாகற் கருமைக்குமர
னுருட்டுக சிறுதேரோ. (கூ)

வடவரையோரா யிரமுழைதோறும்
வருங்கொடி மினலெனவே
வாடருகவர்நா நீளவிதிர்த்திடு
மாசுண ராசனையே
கடகரியெட்டுஞ் சென்னிகவிழ்ந்துக்
கால்கண் மடித்திடவெங்
கடுவேகத்துட னோடிக்குதித்துக்
கதிர்செறிபுஞ்ச மெனப்
படமுடிதாழ வெடுத்துதறிப்ப
ரதத்தினடித்திடு மோர்

பருமயில்கடவும் பவளக்குன்றே
பாலசமுத்திரமே
யுடலுறுமுயிர்கட் கினிதருளமுத
முருட்டுக சிறுதேரோ
யுமையொருபாகற் கருமைக்குமார
னுருட்டுக சிறுதேரோ. (௧௦)

சிறுதேர்ப்பருவம் - முற்றியது.

---

திருப்போரூர் முருகர்பிள்ளைத்தமிழ்

முற்றுப்பெற்றது.

ஆகப்பருவம் - ௧௦-க்கு - திருவிருத்தம் ௧௦௦.



உ

வேலுமயிலுந் துணை.

## ஆண்பாற்பிள்ளைக்கவியின் பருவம்பத்துக்கும்விபரம்.

காப்பு... ... ... ... இரண்டாமாதம்
செங்கீரை ... ... ... ஐந்தாமாதம்
தால் ... ... ... ... ... ஏழாமாதம்
சப்பாணி... ... ... ...ஒன்பதாமாதம்
முத்தம் ... ... ... பத்தாமாதம்
வருகை ... ... ...பன்னிரண்டாமாதம்
அம்புலி ... ... ... பதினாறுமாதம்
சிறுபறை ... ... இரண்டாம்வருஷம்
சிற்றில் ... ... ... மூன்றாம்வருஷம்
சிறுதேருருட்டல் ... நான்காம்வருஷம்

## செங்கீரைப்பருவத்தின் விபரம்.

ஒருகாலைமடக்கி யொருகாலைநீட்டி யிருகைகளையும் நிலத்திலூன்றிக்கொண்டு தலைநிமிர்ந்து முகமசைய ஆடுதல்.

உ

வேலுமயிலுந்துணை.

---

திருப்போரூர்ச்சன்னிதிமுறை.

# அலங்காரம்.

---

காப்பு.

முக்கட்பவள மலைவந்ததேனை முராரிதங்கை
பக்கத்தெடுக் கும்பரிமளப்பூவைப் பருமயிலோற்
கொக்கத் துணைவந்த வுத்தமதேசை யுயர்பொருளைச்
செக்கச்சிவந்தனன் மாலியானையைச் சிந்தைசேர்க்குதுமே.

பூமேவுநாபனு நான்முகத் தோனும் புரந்தரனுந்
தாமேவுவாழ்வு மதிகாரமும்பெறத் தார்புனைந்த
கோமேவு வேல்கொண்டவுணனைமாய்த்த குமரனெங்கோன்
றூமேவுதாண்மலர் போரூரிலென்முடி சூட்டினனே. (க)

தெய்வப்பிடிவந்து சேருந்துணைக்கிரி செந்தளிர்போன்
மெய்வைத்தவள்ளிக் கொடிபடர்தாரு வியனுலகிற்
சைவப்பயிரை வளர்க்குந் தண்மேகந் தகைமைசெறி
நெய்வைத்த வேல்கொண்டு போரூரிலென்று நிகழ்தெய்வமே.

கருதார் புரங்கொன்ற சேவகனார்க்குங் கரிப்புறவே
யொருதாரகப்பொரு ளோதியவாவுன தன்பனைப்போற்
றருதாரணிசொலு நாயேனையன்புறாந் தானுளனோ
விருதாசெஞ்சேவற் சமராபுரிவரு வேலவனே. (௩)

சிற்றறிவொன்று நினைப்பொடு சித்தினைசேர்ந் தியங்கு
மற்றிவைநீங்கி லதுதா னவைகளு மாகிநின்ற
வற்றமில்பேரறி வூடேகலந்திடு மாயவிதே
பற்றறுமுத்தியென் றுன்சமராபுரிப் பண்ணவனே. (௪)

எல்லார்க்குமேலவ னீயென் றறிந்துனை யேத்தியன்பாய்ப்
பொல்லாக்கருமலந் தீர்ந்தான்பொதியப் புகழ்முனிவன்
சொல்லாற் புனைதொங்க னக்கீரன்சாற்றித் துனிகடந்தா
னல்லார்க்குநல்லவ னேசமராபுரி நாயகனே. (௫)

தோட்குங்குமக்குங் கோக்குழைமாதர்க்குந் தொல்லைமத
வேட்குமுளங்குலைந் தேனைவிடேல்விண்டு மாமலர்க்கை
வாட்குங்கொடிய மருப்பார்மகிடன் வளைப்பிலுறு
தாட்கொண் டருளுகண்டாய் போரிவாழு மயிலவனே. (௬)

அண்டஞ்சராசர மெண்டிசையாவு மளித்தவருங்
கண்டங் கரியசிவனுந் தமவங்கரங் களின்மேன்
மண்டன்பினோங்கி முறைமுறை தந்துமகிழ் மதலாய்
தொண்டன்பெனக்கு முளதோதென்போரிச் சுராதிபனே. ௭

கொங்கணராரிய ரொட்டியர் கோசலர் குச்சராஞ்
சிங்களர் சோனகர் வங்காளரீழர் தெலுங்கர் கொங்க

ரங்கர்கலிங்கர் கன்னடர் தூருக்க ரனைவருமே
தங்கடங்கட் கிறைநீயென்பர் போரிச் சரவணனே. (௮)

மான்சூட்டிறைச்சி செந்தேன்றோய்த் தருந்தும் வன
சரர்மான், கூன்கோட்டிளம்பிறை நெற்றிக்கும் வேலிணைக்
கூர்விழிக்குங், கான்கூட்டமா மலர்க்கூந்தற்குங் கொங்கைக்
குங்காதல் கொண்டோன், றேன்கூட்டம் வாழ்பொழிற்
போரூரனென்குரு தேசிகனே. (௯)

கோக்குஞ்சர மதநாற்றந் தவிர்த்துக் குலநரந்தந்
தேக்கும்புழுகு மணம்வீசும் போரியெந் தேவன்செவ்வே
ளூக்கும்விழி யருள்போக்கும் பிணியினை நூபுரத்தாள்
காக்கும்பவம்புக வொட்டாதெமக் கென்கவலை நெஞ்சே.(௧0)

ஆயன்குழ லிசைகேட்கும் பணமுடி யாடரவம்
வாயையங்காந்து மணிகாலுதல் வள்ளல் பாடல்கொண்டு
தூயகொடை கொடுத்தாங் குறும்போரிச் சுராதிபனை
நாயகனைக் குருமோசனை நாடுவர் ஞானிகளே. (௧௧)

இடமுறச் சூழு முழைதொறு நாகமெரி புனையும்
படமணிச் சென்னியெடுத் தாடன்மங்கலப் பந்தரிலே
சுடர்மணித் தண்டினைச் சூழவிளக்கிட்ட சோதியொக்குந்
தடவரைப் போரிச்சரவண நாயகன் றஞ்செனகே. (௧௨)

பிடிபார்த்தலற வெயினச் சிறார்கள் பிரிந்தகன்றைக்
கொடியாற்பிணித் ததன்மேலேறி யாடுங் குளிர்பொழில்சூ

முடிவாரப்போ ரிப்பதிவேலவனை வந்தண் டினனென்
குடியார்க்குநல் லகதிவாய்த்த தென்றுளங்கொண் டனனே.

தோகைநடித்திட வேடச்சிறு ருமுழத்தோற் பறையை
நாகம்பறித்துலர்வாகைநெற்றூற் கொட்ட நாடியளி [ழும்
யோகைதரும் பண்ணிசை பாடுஞ்சந்தன வொண்பொழில்சூ
மாகர்தொழுந் திருப்போரூரன் றுளென்மதி விழியே. (௧௪)

மேகங்கள்சூழ் கொண்டுசோரற் படிந்து மிகக்குமுற
நாகங்கள்கோ டிறப்பாயத் தெறித்த நகைத்தரள
மோகந்தருங்குற மின்னார்கண் மேலுறமொய்த் தெதிர்பார்த்
தாகந்தடவிய போரூர்க்குக னென்னருட் டந்தையே. (௧௫)

வளாமுத் தொளிரும் பளிக்காடரங்கின் மயினடித்தல்
புனையில்சசிமண் டலத்தாடன் மாதர்புரிவ தொக்கும்
விரவுற்றசாரலம் போரூர்விசாகன் வினைமலர்த்தா
ளுணையற் றுணர்வற் றுயரின்பமாகிய வுள்ளொளியே. (௧௬)

பளிக்கறையூடு தருக்குழைப் பாயலிற் பள்ளிகொண்டே
களிக்குறு மாகந்தருவர் தங்கீதமுங் காளையினல்
விளக்குறுமே னிலத்தோகையர் கீதமும் வேறறவே
கிளக்கலுறுந் திருப்போரூர னன்பர்தங் கேண்மையினே. ௧௭

கருநாகத்தொண் டைக்கயமுனிக் கூட்டங்கள் கல்லுச்சில்லு
பொருநாசிக்கே முதுடனுறுஞ் சாரலம் போரிச்செவ்வே [ப்
ளிருபாத தாமரையேத்தி வணங்கியெந் நாளுநினைந்
தொருவாதிருந் திலைநெஞ்சே யென்வினையி லுழன்றனையே. ௧௮

அகிலேந்து நல்முகிலேய்ந்த கூந்தலரி வையர்த
நகிலேந்து மாரவடம்போ லருவி நகந்திகழு
முகிலேந்துமாடநம் போரூர்க்கு கண்பத முண்டகத்தைத்
தகிலேந்து நெஞ்சினர்மேன் மதவேளெய்யத் தானஞ்சுமே.

மதுவார்த்திடு கடம்போலே மயக்குறு மாதரையோர்
கொதுகாக் கருதுறுங்கால முண்டோகொடி யேன்றனக்கே
விதுவாற் சலந்தருங் கற்சுனையூடு விளங்குபிடி
சதுராக் குடைந்துவிளை யாடும்போரிச் சரவணனே. (உ0)

அள்ளித்தெளித்தன் னகள்ளிவெண் கீழலனுறு குழைதா
னள்ளிப்புனலெனப் பேய்த்தேரை நாடிநலி வதுபோ [யான்
லுள்ளிப்பொய்வாழ் வினையூர்தொறுஞ் சென்றுழலா தெனை
வெள்ளிப்பொருப்பினன் மைந்தாதென்போரியில்வேலவனே.

முடைமாறமுல்லை குழல்சூடி மாய்ச்சியர் மூதளைநான்
கடைதோறு மாரத்தின் மார்பிற்றெறித்திடக் கன்றுதாள்தோறும்
புடைபாயுமூழ வைகுமுறு மென்றிங்கிலப் போரியெங்கோன்
படைவே றுணையுண்டெமக் கொருநாளும் பயமில்லையே. உஉ

பூவையுங்கோவு மசுணமு நாகமும் பூம்பொறிக்கான்
சேவலுஞ்சித்திரம் போற்கேட் டிறங்கச்சிருர்ப் பொதுவர்
ஆவருந்திங் குழலோசை வளர்க்கின்ற தொல்லைமுல்லைத்
தேவருந் தேடும்பொருள் போரிவேலன் றிருவடியே. (உங)

கட்டாணிரம்பி யகவிதழ் வின்றெழு கஞ்சமுடன்
முட்டாடு வைரந் தடையோகை தெறித்தொளிர் முத்தையன்னப்

புட்டான்சினையென் றணைக்கின் றபோரிப்புனிதச்செவ்வேண்
மட்டாருஞ்சேவடிதொட்டாலெமக்குநல்வாழ்வுள்ளமே.

மடிப்பமயக்கிடை கொண்டேகு நெஞ்சினை மாற்றியென்னை
யெடுப்பதுனக்குக் கடனையனே யெழில்கூர் பழனத்
துடிப்புமுகக் கொழுச் செல்கின்ற சீதையிலூறியநீர்
கடுப்பவ னசப்பிழி யூறும்போரியங் காங்கெயனே. (௨௫)

பச்சைக் குடைதிருப் புந்தலைப்பா சடையூடுருவ
மெச்சக்கடைசியர் சேல்பாயும் போரிவிசாக னெங்கோன்
கொச்சைச்சிறியனை யிந்நாளும் பண்ணிய கோகனகத்
தச்சற்கினியெனைப் பண்ணக் கொடா னிதுசத்தியமே. (௨௬)

விருந்துண்டு பின்னைக் குபசாரஞ்செய்யும் விதத்தினைத்தப்
பொருந்துஞ் சரோருகத்தேனுண்டுமுத் துமிழ்போரியிலோர்
மருந்துண் டதன்பெயர் செவ்வேளஃதென் மலப்பிணியுந்
திருந்துமுடற்பிணி தன்னையும் போக்கிடுஞ் சித்தமிதே. (௨௭)

தண்டாமரையி லனப்பே டுறவது தன்னருகே
வெண்டாமரை யிரண்டாலு தல்வாணிக்கு வெண்கவரி
கொண்டார வீசுதல்போ லுறும்போரிக் குகனிருதாள்
கண்டாலுமின்பக் கடல்வந்து கோக்குங் கருத்தினையே. (௨௮)

வண்டுகிண் டக்கஞ்சம்விண்டு தண்டேன்சிந்த வாள்வளைகள்
கண்டயின் றின்புறும் போரூர்முருகன் கழலிணைக்கே
தொண்டுசெய்தின்புறுவோர் பாததாமரைத் தூளொன்று சென்னி
கொண்டுவந் தேன்மலம் விண்டேன்பரகதி [illegible]. (௨௯)

கன்னியராடிக் கழித்தகத் தாரியன் மணக்கு
மன்னிய வாவிதிகழ் சமராபுரி மாமயிலோன்
பொன்னியல்கிங் கிணித்தாளை யுந்தோளையும்போற்றுவைமே
னுன்னியயாவுமுறு நெஞ்சமே யுண்மை யுண்மையிதே.(௬௦)

வள்ளைக்கொ டிச்செவிசை வலக்கூந்தல் வனசமுகங்
தெள்ளூற்ற நீலக்கண்ணும் பற்செவ்வாய் திகழுந்திகிரிப்
புள்ளுக் குயமன்னப் பேட்டுநடையுடைப் பொய்கைமங்கை
நள்ளத்திகழ்கின்ற போரூர் விசாகனை நாடுள்ளமே. (௬௧)

கருப்புத்திரளை யறுத்துச் செறித்த கனைசகட
மருப்புப் பகட்டைக் கழையாலுழவர் கண்மாறுதொறும்
விருப்புற்ற முத்துந்தெறித் தொளிர்சாளர வீடுபுகுந்
திருப்பெற்ற போரிக்கு கன்றுளறிஞர்க்குத்தித்திக்குமே.௬௨

கரண்டமடிக்கடி நீர்மூழ்கி யாங்குக்கய லெடுத்தே
மருண்டமென்னோக்கியர் முன்காட்டலுங்கண்மலர்விழிக்கு
வெருண்ட கயலன்றி துபார்மினென்று விளம்பலொக்குந்
தெருண்டவர் சூழ்திருப் போரூரன் தேவர் சிரோமணியே.()

காளைச் சலப்பெயர் நாயினமூழ்கக் கயமடுவி
லாளைப்பகட் டுறும்வாளைப் பகட்டினமம் பினிற்போய்ப்
பாளைக்கமுகின் மிடறறப் பாய்ந்துநெற் பண்ணைபுகுங்
கேளொந்தபோரிக் குகனன்பரோ யென்கிளை ஞர்களே. (௬௪)

கருக்கட லையடியேன் புகுதாவகைகாத் தமூர்கிப், பெருங்
குறும்பின்பத்திருத் துக்கண்டாய் பெருநீர்க்கணையின், வருக்கை

வெடித்தெழு செஞ்சாற்றுச் சேற்றில்வழுக்கிநத்துக், குருக்
கொளுமுத்தமிழ் போரூர்ச் சடானனக்கோக் கொண்டலே.

வீட்டின்ப நாடியிருப்போர் தமக்கும் விடயசுக
நாட்டங் கொண்டாங்கவர் போலிருப்போர்க்கு நலனுறவே
காட்டுமு வமையதாக் கொக்குநீர்மடைக் கண்ணிலகுந்
தீட்டும்புகழ்கொண்டபோரூரண்வேல் கரர்தேவதையே. ௧௬

வாவிக்கரைக்கமுகேகொக்குநீழல்வயங்கத்தெண்ணீர்
தாவிக்கயலதைக்கண்டேவெருவுதறன்கனவின்
மேவுற்றகாட்சிநனவிற்கண்டாரின்விளங்கவுறும்
பூவிற்றிருத்திகழ்போரூர்க்குகன்பதம்போற்றுள்ளமே. (௧௭)

பச்சைநிறத்தநிறைநீர்க்குடங்கள்பலசுமந்தே
யுச்சியிலுற்றகதிரோனுக்கீயுமுயர்ந்துளதெங்
கெச்சமறச்செறிபோரூர்ச்செவ்வேளையிறைஞ்சிபினைப்
பிச்சநெஞ்சேயடுகின்றனன்பாரென்பிரதாபத்தையே. (௧௮)

சாறூற்றெழுந்துகணுவுடைத்தோடுந்தழைக்கரும்பை
வீறேற்றவாழைக்குலையொடுமாசினிவீழ்ந்தொடித்துச்
சேறுக்கியவயற்போரூர்முருகனெந்தீதகற்றிப்
பேறுக்கருணைசெய்தேநெஞ்சமேதரும்பேரின்பமே. (௧௯)

பவளக்கொடியிற் பிணித்தூசல் புன்னையிற் பார்வையுயற்
குவளைக்கண் கற்குமடமாத ராடவக்கோ டரும்பைத்
தவளத்தரள மழைபோலவர் மெய்நனிற் சொரியுந்
திவளுற்றபோ ரிக்குமரேச னென்குலதே வதையே. (௨௦)

வல்லைத் துரந்துழலை நுளைமாதர் வலையெறியப
பல்லைத் திறந்துறுமிக் கவிதாலப் பழமிருக்குந்
தொல்லைத்திருத் திகழ்போரூர்க் குகன்பதஞ்சூடுஞ்சென்னிக்
கில்லைப்பிர மன்றுயருறக் கீறுமெழுத் துக்களே. (௬௧)

வாளைக்கொதுங்கிடப்பார்ப்புகள்வெள்ளைவளைசங்கண்மேற்
றேடிப்பெடை யணைந்தன்பா லணைத்துறங் கிடுநெய்த
னீடத்திகழ் கின்றபோரூர் விசாக னிமலபத
நாடிக்களிப் பவர்க்குண்டோ துயரொடு காமங்களே. (௬௨)

செக்கர்க்கிடையி னுடுக்கூட்ட மென்னத் திரைகளினாற்
றொக்கப்படுந் துகிர்வண்ட லின்மீது சுரி முகங்கள்
கக்கப்படு முத்தொளிருந் தென்போரியிற் காங்கெயனைப்
பக்கத்துடன் பணிவா ரவரோசுக பாரணரே. (௬௩)

வண்டணையாக் கொண்டுகண்டுங் கும்பூங்குழன் மாதரையே
கண்டணையா யுறுங்கால முண்டோகடை யென்றனக்கே
றெண்டினங்கே தகைத்தாதரித் துண்ட றனிடு பொய்கைத்
தண்டுறை ஞெண்டுடை யுடும்போரிச் சரவணனே. (௬௪)

சந்திரகாந்தமணிமாடத்தூடுதன் சாயைகண்டோர்
பைந்தொடிமாதுதலைவனென்றேடப் பரிந்தவனே
சுந்தரவாடிபிழக்காட்டியின்புறு சொற்புகலுஞ்
செந்திருப்போரிக்குகனைக்கண்டார்க்குண்டு சித்திகளே. (௬௫)

ஏதங்கருதினர்சென்மினென்றேயு மிதங்கருதும்
போதந்திறந்தவர் வம்மினென்றேயும் புகல்வனபோல்

வாதஞ்செறியக்கொடியாடும்போரி வரதன்றண்டை.
நாதங்களியோஙியரியோஙினிற்காண்குறு நாதங்களே. (௬௬)

தேரூரிரவிவலவன்கைமீது செழுங்கொடிக
ளோராகத்தாக்குதலெங்கோனயிலொளிக் கெய்துமுன்கோ
னேரோசொனில்லென்றுபோரூர்கைகொண்டு நிறுத்தலொக்
குந், சீருருமிங்ககோகயிலாயந் தெளிந்தவர்க்கே. (௬௭)

மனப்பரிசோரவிறுமாந்துநாவி மதம்பொழியுந்
தனக்களிற்றன்னமுருகாகுகாவென்று தானுரைப்பப்
புனக்கிளிகற்கின்றபோரூரிறையைப் புகழ்ந்தவரைச்
சினக்கனல்காமக்கனலும்விட்டோடுந் திசைப்புறனே. (௬௮)

மதிகொண்டபூச்சக்கிரவாளக்குடையின் வருநிழற்கீழ்த்
துதிகொண்டயானைப்பிடர்மேல்வருமச் சுகந்தனிலு
நதிகொண்டபேரன்பினூற்போரிவேலனை நண்ணியின்பக்
கதிகொண்டமேலவர்காதலைதாங்கல் கனசுகமே. (௬௯)

அளகாபுரியன்னபட்டணத்தேசுதை யால்வனைந்த
களவார்முகில்படி மாடத்தினூடு களித்தலினும்
புளகாடவியெழமெய்ப்போரிவேலனைப் போற்றியுய்வார்
வளவார்புறந்திண்ணைவைகுதலேநமின் மாசுகமே. (௭௰)

உள்ளக்கவலையெலாமொழிந்தேதெழி யாறுசெய்யுங்
கள்ளக்கருமங்களியாவும்விண்டேன் கலைவாணியுடன்
வள்ளக்கமலமலர்மாதுதந்தருள் வாழ்வடைந்தேன்
றெள்ளத்தெளிந்தனன்போரூர்முருகனைச் சேவைசெய்தே

பூதரவிற்கொண்டவுணைமாய்த்த புராரிமைந்த
னூதரவாலணிப்போரூரிருந்திங் கவனருளாற்
சீதரனன்மருகாமுருகாவென்று செப்பினன்பின்
ரூதரம்போலுறுந்தீவினையாவுந் தணந்தனவே. (௫௨)

வட்டாடல்போலப்பிழைப்பதுஞ்சாவது மாக்கியென்று
மொட்டாரஞ்செய்கின்றமாயையுணர்ந்து முணரவொட்டா
தட்டாவதானஞ்செயுஞ்சிவனைப்பொய்மை யாயிருந்துங்
கட்டாணியானமுத்தேசமராபுரிக காங்கெயனே. (௫௩)

ஆள்வேட்டமாடுமயில்விழிமாத ரமைகடந்து
தோள்வேட்டபுன்னெஞ்சமேயதுசிவனைச் சூழ்ந்துகொண்
வேள்வேட்டமாடுவதாங்கேகல்போரி விசாகனிரு [டே
தாள்வேட்டுநாடுதிமேல்வீட்டிலின்பந் தழைத்துறுமே. ௫௪

ஆறுசமயருந்தம்மிலொவ்வாதிங் கலைவதென்னே
தேறுமறிவினரெல்லாமறிந்துந் தெளிந்திலரோ
பேறுதருந்தெய்வமியாவைக்கு மியான்பெருந்தேவனென்றே
வீறுமுகங்கொண்டுபோரூர்முருகன்விளக்கியதே. (௫௫)

மற்றவர்நிற்கமெய்ஞ்ஞானிகள்வம்மின்வகுத்துரைக்கே
னுற்றதுகேண்மினெம்போரூர்முருகனுயர்கதியை
நற்றமிழ்க்காழிவந்தெண்ணிலிப்பேர்க்குநயந்தளித்தான்
கொற்றமவனதலாலெவர்க்குண்டினிக்கூறுமினே. (௫௬)

கரும்பாற்செய் வேலிசுரும்பார்க்கும் போரியங்காங் கெயன்
றிரும்பாச்சுகந்தருவீடுவதற்குஞ்சிறப்புடனே [போற்

பெரும்பாற்றிருத்தருபெற்றிக்குந்தேவர்பிறரிலையென்
றிரும்பாற்கடற்றுயின்றோனெய்யினு மொகையிட்டனனே. ௫௭

வேதனெங்கேயவன்றாதையெங்கேவிண்ணினண்ணுறுபுரு
கூதனெங்கேமிகுதேவனெங்கேகுறையாததவப்
போதனெங்கேயறமாதியெங்கேதிருப்போரியில்வாழ்
நாதனெங்கோனவனைப்போலச்சொலாயுநாடிடிலே. (௫௮)

திருநீலகண்டம்வெந்தீவினைதீண்டப்பெறுவெனவே
கருநீலகண்டனைப்பாடியடியரைக்காத்தவனெம்
முருமேலிருந்தபிணியையுமாற்றுவனுண்மைநெஞ்சே
யிருநீலவாவிநம்போரூரனைப்பணிந்தேத்துவையே. (௫௯)

அஞ்ஞானத்தாலடியேன்பிழைசெய்யினுமாரருள்சேர்
மெய்ஞ்ஞானத்தாய்பொறுத்தாட்கொள்ளவேண்டும்வியன்ம
செஞ்ஞானத்தார்புகழ்போரூர்முருகசெகமுயிராம் [றைதேர்
பொய்ஞ்ஞானக்கூட்டத்துக்குட்புறனாகியபூரணனே. (௬௦)

புரங்கொன்றதேவெள்ளிமாமலைநீலப்புயமலைமே
லுரங்கொண்டெடுத்தவனீரைந்துசென்னியுமூடுறவே
கரங்கொண்டவாளியினாலெய்தமாயன்கனமருகா
திரங்கொண்டபோரிமுருகாவென்றீவினைதீர்த்தருளே. (௬௧)

நெஞ்சைக்கலக்குறுஞ்சேலோரிரண்டுடைநேரிழையார்
வஞ்சக்கலவிமெய்யென்றேமயங்கினைவன்னெஞ்சமே
துஞ்சற்கும்வந்துபிறத்தற்குமேதுசொற்கதிசேர்ந்
தஞ்சற்குநீதிருப்போரூர்க்குகனையுறப்பணியே. (௬௨)

கொலையாதிசெய்தவராயினுமன்புகுணம்பொறுமை
யிலையாமுளத்தினராயினும்போரியிசைந்துகுண
மலைபோலிருந்தவடிவேலனைவந்துவாழ்த்தினரேற்
றொலையாமெய்ஞ்ஞானமடைவார்முன்யேவுந்துயரிலரே. சுங

இமையாக்கருங்கண்முலையாளைமாதணையெண்ணியெண்ணிச்
சுமையாகப்பாவஞ்சுமக்குநெஞ்சேயிதுதுன்புகண்டாய்
சமையாதியாறுமுடையோர்க்குவீடுதரும்பெருமா
னமையாட்கொள்போரிக்குமரேசன்சேவடிநாடின்பமே. சுச

சடையாம்பவளக்கொடிபடர்பேரின்பசாகரத்தே
கடையாதெழுந்தசுகவாரமுதினைக்கஞ்சமொன்று
புடைதோன்றுமுந்திப்புணரிமருகனைப்புண்ணியனை
மிடைதீரப்போரியிற்கண்டேன்கதியின்பமேவினனே. (சுரு)

மேருப்பொருப்பினைச்சென்றேவியனண்டகூடமுட்டுஞ்
சூரப்பொருப்பைத்துளைத்தவைவேலவன்றுங்கனெங்கோன்
போரிப்பிரானெம்பிழைபொறுத்தாலன்னபூதலத்தே
யாரிப்படிபொறுப்பார்சொல்கநீயிங்கறிந்துள்ளமே. (சுசு)

அண்டப்பரப்பினைக்கண்டோர்நொடிவருமாயர்தபச்சைக்
கொண்டற்சிறைப்பெருமாமயிலோன்குகனெங்கோயான்
றண்டைத்திருப்பதம்போரூரில்வானவர்தம்முடிமேற்
றெண்டுற்றபேர்முடிமேன்மறையேலென்றுந்தோன்றிடுமே

தாபசக்தித்துத்திசையதிரச்சிறைதான்புடைத்தே
வெளிதிறச்செஞ்சிலிர்த்துவலைத்திகழ்ப்புலிநகவாய்

விரைவுறத்தோன்றத்திமந்தாழிமேகமெனத்தொனிக்கும்
பொருகொடிச்சேவலன்போரூரனூரினும்புண்ணியனே (௬அ)

நதிபிறைகொன்றைசெறிசென்னிமூன்றுகனோன்குபுயந்
துதியிருநாணிகழ்மாணிக்கவெற்பைத்தொடர்ந்துபடர்
கதிதருபச்சைக்கொடிதோன்றுமின்பக்கனியளகை
யதிவளமேவியபோரூரில்வந்தெனையாட்கொண்டதே (௬௯)

நன்மைவினைத்துன்றிருவடிசேரநயக்குமென்னைப்
புன்மைவினைத்துளங்கொண்டேகநொந்தனன் பொய்ம்மையி
மும்மையளிக்குறுமின்பனம்போரிமுருகப்பிரான் [னேன்
செம்மையளிக்குவினிவேண்டுஞ்சிறியனுக்கே (எ0)

அவுணக்கருநகடல்செங்கடலாக்குமணிநெடுவேற்
சிவனுற்றதோட்கிரிச்சேவகன்றன்னைச் செழுங்கொடிக்காற்
கவனுற்றகைக்குறமானைத்திருடியகள்வன்றன்னைக்
குவடுற்றசாரலம்போரியிலேகண்டுகொண்டனனே. (எக)

கோலக்கருங்குயிலேமயிலேயென்றுகொஞ்சுமலை
வாலப்பருவமின்றந்தருளானந்தமாமுகிலைச்
சோலைப்புயன்மலர்த்தேன்பொழிபோரிச்சுராதிபனை
மாலைக்கடந்மனத்திற்கண்டார்க்குண்டுவாழ்வுகளே (எ௨)

நீரிற்கயலெனக்கண்ணீர்துலங்கிநெஞ்சைக்கவற்று
நாரிச்சமனையுநம்புவரோநலனேகொடுக்கும்
போரிப்பதியெங்குமரேசன்றுட்கன்புபூண்டுபித்தர்
சீரிற்பெரியகதிமேவியின்பஞ்செழிபவரே (எ௩)

சூரன்கிளைகளைந்தெண்ணிலிதேவர் துயர்களைந்து
வீரஞ்சிறந்தநவவீரர்முன்னவன்வேலையின்மேய்ந்
தாரம்புயறுயில்போரூர்முருகனருளெனக்குச்
சீருங்குணமுமருவுந்தவமுநற்செல்வமுமே. (௭௪)

இருகோட்டொருமதிசூடும்பிரான்மகிழ்ந்தின்புறவே
திருகோட்டுபோதமுரைசெய்ததேசிகன்செங்குழையாற்
குருகோட்டிமாதர்விளையாடும்போரிகைக்கூப்பினைப் [மே
பொருகோட்டொரு மையன்கண்டாலு மஞ்சிப்புறஞ்செல்லு

ஆரணனாரணனின்னமுங்காண்டற்கரியபரி
பூரணந்தோன்றியபூரணனேதிருப்போரியில்வாழ்
காரணனேயொருநாணியளித்தகரையில்சுக
பாரணமென்றருள்வாய்கடையேற்கெம்பரம்பொருளே. ௭௬

மெய்வேடம்பூண்டவர்க்குள்ளும்புறனும்விளங்கும்பிரான்
பொய்வேடம்பூண்டனனென்றுலுங்காத்தனைபூங்கலையா
லெய்வேடனல்வருந்தாதெனையாளினியேய்ந்ததினை [லே
கொய்வேடமானைமணந்தோய்தென் போரிக்குணக்கொண்ட

அருணகிரிப்பெயர்மெய்ஞ்ஞானநாதன்சொல்லால்வனைந்த
பொருணைநதிக்கிரியான்புகழ்மாலைபுனைபுயனே
கருணைமிகுத்தெனையாண்டாய்க்குமீண்டுகைமாறுளதோ
தருணவளத்தினனேசமராபுரிச்சண்முகனே. (௭௭)

மாலோன்விருந்தையுண்டாக்கிக்கொண்டிலன்மாமலரோ
மேலோனகன்றிடமொன்றாக்கிக்கொண்டிலன்மீதுயர்ந்த [ன்

நாலாமறைபுகழ்போரூரன்சம்பந்தநாமங்கொண்டே
நூலாமிடைமயிலாக்கினனென்னைநொடியினிலே. (எகூ)

சகலமதங்களையெல்லாமுணர்ந்ததவமுனிவோர்
புகலுமிலக்கமெண்ணாயிரம்பேரைப்பொருகழுவி
விகலுறவைத்தும்வருமேதமொன்றின்றியேயிருந்தான்
றிகழுறும்போரியன்சம்பந்தநாமஞ்சிறந்துகொண்டே. (அ0)

எண்ணற்கரியசமணக்களைகளைந்தேதமிலாத்
தண்ணுற்றபேரருணீர்பாய்ச்சிச்சைவப்பயிர்வளர்த்து
நண்ணச்சிவானந்தபோகம்விளைவிக்குநல்லுழவன்
விண்ணுற்றதேவருஞ்சூழ்போரிவாழ்கின்றவேலவனே. (அக)

தாருகன்கோளரிமாமுகன்கொக்கின்றனதுபெயர்க்
காருறுமால்வரைசூதம்வெஞ்சூரகங்காய்ந்தவைவேற்
பேருறுவோர்தமைக்காலனுந்தீண்டப்பெறானெனிலே
போரியென்னையகன்றாட்கேசரணம்புகுநெஞ்சமே. (அஉ)

ஆருயிரியாவைக்குமானந்தத்தேனையளிக்குமுக்கட்
டாருவினாற்கவிமாமழையேபொழிதண்முகிலே
காரிருண்மாமலந்தீர்த்தெனையாளக்கடனுனக்கே
சீருறுதேசிகனேபோரிமாநகர்ச்சிற்பரனே. (அங)

வீரத்தவுணருயிர்களைமேய்ந்துவிளைவினவர்
சோரிக்கடலிடையாடிக்குடர்த்தொங்கல்சூடிவெற்றி [மேற்
கூருற்றவேல்கரங் கொண்டோன்றன் போரிக்குமரனென்
சீருற்றபேரருள்வைத்தானிஃதென்றெளிந்திலனே. (அச)

தேவருநாகருமியாவருமும்முறைநடுதேண்டனிட
மேவருமாமகுடத்தினிராசிகண்மீதொளிருந்
தூவருமாமணிராசிகண்மேவித்தொடச்சிவந்த
பூவருதாளினன்போரூர்க்குகனெனும்புங்கவனே. (௭௫)

கொக்கரித்தேவருந்தானவர்சேனையைக்கொன்றுழக்கி
மிக்காரத்தக்கடலாடிப்பிணைமலைமீதிவர்ந்து
செக்கரிற்றோன்றுங்கணநாதர்சேவிக்குஞ்சேவடியா
விக்கரிக்குஞ்சுரும்பார்க்கின்றபோரிக்கிறையவனே. (௭௬)

மணிகொண்டசேடன்படர்முடிதூக்கிமணியுதறித்
திணிகொண்டமால்வரைமாடேபறந்தறச்சேண்பறந்தங்
கணிகொண்டதேவர்தொழச்சென்றுமீண்டிங்ககவுமுமைக்
குணில்கொண்டபேரிகையார்க்கின்றபோரிக்குகன்மயிலே. ௭௭

வாரிசுழலவடவரையாதிவரைசுழலக்
காரொடுசந்திரசூரியர்மீன்கறங்காச்சுழலக்
கூரிருளியாக்கையரக்கர்சுழன்றிடக்கோதில்பச்சைத்
தேரொனவட்டம்வரும்போரிவேலன்சிறைமயிலே. (௭௮)

மின்னற்சுடர்விழுதோட்டுமணிக்குழைமெல்லியலார்
பொன்னுற்றபூண்முலைவேட்டநெஞ்சேயிதுபொய்மயக்கே
நன்னைத்தலைவனையாராய்ந்தடையுந்தகைமையின்புக்
கென்னப்பனுகியபோரூர்ச்செவ்வேளையிறைஞ்சுவையே. ௭௯

முகடிடித்துச்சக்ரவாளத்தைமுட்டிவெம்மூரியெட்டுப்
பகடுகுத்திக்கனல்சிந்திடப்பார்த்தப்பாவையெல்லா

மகடுறத்தேக்கிவிடுத்துறத்தாவியனைக்கணம்போய்க்
ககனமுற்றும்வரும்போரூரனேறுங்கனதகரோ. (௯0)
மகுடங்களாறுங்குழையோர்பனிரண்டும்வானவரும்
புகழுங்கடகங்களீராறுமாழியும்பூணதப்பொன்
றிகழுமதாணியுஞ்செந்துகிராடையுஞ்செஞ்சிலம்பு
நிகழும்படிதரித்தோர்தெய்வம்போரினிலாவியதே. (௯௧)
நின்பாததாமரைக்கன்பேதுமின்றியநீசன்பொல்லேன்
புன்போதமேலிட்டபொய்யேன்பிழையைப்பொறுத்தருளா
யம்போருகமலரோராறலர்ந்தவருட்கடலே
செம்போரிவேலவனேயிமையோர்கள்சிகாமணியே. (௯௨)
செப்புக்கவித்தனன்வன்குரத்தான்மண்சிதைத்தெறியுந்
துப்புற்றமாவிற்கிணையாகவோதினர்சொல்கணத்தே
யொப்பற்றமூவுலகும்போய்த்திரும்புமொருமனத்தை
யெப்பெற்றியாலுணைத்தார்சமராபுரியெண்குணனே. (௯௩)
மெய்யாநெறிக்கணடியேன்செலுத்தவிலங்கிமிகு
பொய்யாநெறிக்கணெனைக்கொடுபோமுளப்போர்க்களிற்றை
யையாநினதருளாங்கயிற்றாற்பிணித்தானதண்டைச்
செய்யாருந்தாட்கந்துசேர்ப்பாய்தென்போரியஞ்சேவலனே.
உள்ளூறுபுன்னினைவெல்லாமொழிந்திங்குணர்வரிய
நள்ளிருளன்னவஞ்ஞானமுந்தீர்ந்துநலனுறவுந்
தெள்ளியபேரருளூடேகலந்தின்புசேர்ந்திருப்பக்
கள்ளநெஞ்சேற்கும்வருமோதென்போரியங்காங்கெயனே. ()
எல்லாப்பொருள்களுந்தானாகித்தானென்றிலேய்வதின்றாய்ச்
சொல்லாற்கருத்தகளாற்சென்றுகூடருஞ்சோதியதா

மல்லாரணப்பொருளுயேற்குமீயமதித்திகொல்லோ
நல்லார்க்கினியகுகனேதென்போரியென்னாயகனே. (௯௬)
எண்ணியவெண்ணியவாறேசிறியனுக்கீந்தருளும்
புண்ணியனேநின்மகிமையையோர்ந்திலன்பொய்யவனேன்
கண்ணுறுமாமணியேகருத்தூறுங்கனிரசமே
தண்ணளிமாமுகிலேபோரிமேவியசண்முகனே. (௯௭)
உள்ளத்தழுக்கினையெல்லாமகற்றியுனதுபத
வள்ளக்கமலத்தெழுநறவானந்தவாரியிலே
கள்ளச்சிறியனைவைத்தாளவேண்டுங்கழனிமடை
யள்ளத்திறந்திடும்வாளைகள்போரியயிலவனே. (௯௮)
மலஞ்சேர்சடத்தைப்பிணிக்கூட்டை யொன்பது வாயிற்பை
யை, நலஞ்சாலவெண்ணிக்கடையேன்களித்தனனாய்புலையே
ன், றிலஞ்சார்தயிலமெனவெங்குமானசிவானந்தத்தேன்
கலந்தேகளிப்பதென்றோசமராபுரிக்காங்கெயனே. (௯௯)
எண்ணிலிகாலத்தின்பின்னரிக்காயமினிதளித்தாய
நண்ணுறுமீதினுமெய்ப்பத்தியீந்திலைநாயடியேன்
பண்ணியபாவமென்றேகும்பரகதியென்றடைவேன்
விண்ணுறுதேவருஞ்சூழ்போரிவாழ்கின்றவேலவனே. (௧௦௦)
திரவணிநீடியபோரூர்கைகூப்பிச்செழுங்கமலச்
சரவணவாவியினீராடித்தங்கச்சதங்கைகொஞ்சுங்
குரவணிபாதம்பணிவோர்க்கினிமைகொடுக்கும்பிரா
னரவணிவோன்குமராவடியேனுன்னடைக்கலமே. (௧௦௧)

அலங்காரம் முற்றியது.

மகடுறத்தேக்கிவிடுத்துறத்தாவியனைக்கணம்போய்க்
ககனமுற்றும்வரும்போரூரனேறுங்கனதகமே. (௬0)
மகுடங்களாறுங்குழையோர்பனிரண்டும்வானவரும்
புகழுங்கடகங்களீராறுமாழியும்பூனதப்பொன்
றிகழுமதாணியுஞ்செந்துகிராடையுஞ்செஞ்சிலம்பு
நிகழும்படிதரித்தோர்தெய்வம்போரிநிலாவியதே. (௬௧)
நின்பாதத்தாமரைக்கன்பேதுமின்றியநீசன்பொல்லேன்
புன்போதமேவிட்டபொய்யேன்பிழையைப்பொறுத்தருளா
யம்போருகமலரோராறலர்ந்தவருட்கடலே
செம்போரிவேலவனேயிமையோர்கள்சிகாமணியே. (௬௨)
செப்புக்கவித்தனன்வன்குரத்தான்மணசிதைத்தெறியுந்
துப்புற்றமாவிற்கிணையாகவோதினர்சொல்கணத்தே
யொப்பற்றவுலகும்போய்த்திரும்புமொருமணத்தை
யெப்பெற்றியாலுரைத்தார்சமராபுரியெண்குணனே. (௬௩)
மெய்யாநெறிக்கணடியேன்செலுத்தவிலங்கிமிகு
பொய்யாநெறிக்கணெனைக்கொடுபோமுளப்போர்க்களிற்றை
யையாநினதருளாங்கயிற்றாற்பிணித்தானதண்டைச்
செய்யாருந்தாட்கந்துசேர்ப்பாய்தென்போரியஞ்சேவலனே.
உள்ளூறுபுன்னினைவெல்லாமொழிந்திங்குணர்வரிய
நள்ளிருளன்னவஞ்ஞானமுந்தீர்ந்துநலனுறுதவுந்
தெள்ளியபேரருளுடேகலந்தின்புசேர்ந்திருப்பக்
கள்ளநெஞ்சேறக்கும்வருமோதென்போரியங்காங்கெயனே. ()
எல்லாப்பொருள்களுந்தானாகித்தானொன்றிலேய்வதின்றாய்ச்
சொல்லாற்கருத்தகனுற்சென்றுகூடரேஞ்சோதியதா

மல்லாரணப்பொருளுயேற்குமீயமதித்திகொல்லோ
நல்லோர்க்கினியகுகனேதென்போரியென்னுயகனே. (கூசு)
எண்ணியவெண்ணியவாறேசிறியனுக்கீந்தருளும்
புண்ணியனேநின்மகிமையையோர்ந்திலன்பொய்யவனேன்
கண்ணுறுமாமணியேகருத்தூறுங்கனிரசமே
தண்ணளிமாமுகிலேபோரிமேவியசண்முகனே. (கூஎ)
உள்ளத்தழுக்கினையெல்லாமகற்றியுனதுபத
வள்ளக்கமலத்தெழுநறவானந்தவாரியிலே
கள்ளச்சிறியனைவைத்தாளவேண்டுங்கழனிமடை
யள்ளத்திறந்திடும்வாளைகள்போரியயிலவனே. (கூஅ)
மலஞ்சேர்சடத்தைப்பிணிக்கூட்டை யொன்பது வாயிற்பை
யை, நலஞ்சாலவெண்ணிக்கடையேன்களித்தனனுய்புலையே
ன், நிலஞ்சார்தயிலமெனவெங்குமானசிவானந்தத்தேன்
கலந்தேகளிப்பதென்றோசமராபுரிக்காங்கெயனே. (கூகூ)
எண்ணிலிகாலத்தின்பின்னரிக்காயமினிதளித்தாய
நண்ணுறுமீதினுமெய்ப்பத்தியீந்திலைநாயடியேன்
பண்ணியபாவமென்றேகும்பரகதியென்றடைவேன்
விண்ணுறுதேவருஞ்சூழ்போரிவாழ்கின்றவேலவனே. (கOO)
திரவணிநீடியபோரூர்கைகூப்பிச்செழுங்கமலச்
சரவணவாவியினீராடித்தங்கச்சதங்கைகொஞ்சுங்
குரவணிபாதம்பணிவோர்க்கினிமைகொடுக்கும்பிரா
னரவணிவோன்குமராவடியேனுன்னடைக்கலமே. (கOக)

அலங்காரம் முற்றியது.

உ

வேலுமயிலுந்துணை.

## திருப்போரூர்ச்சன்னிதிமுறை

# மாலை.

—*—

### காப்பு.

வெண்பா.

மருப்புநிலவாலென்மலதிமிரம்போக்குங்
கருக்கோடைபோக்குமதக்காராற்—றிருப்போரூர்
நிம்பத்தின்கீழிருந்துநேயர்க்குவாழ்வளிக்குங்
கம்பக்கடமாகளிறு.

பூவார்ந்தகற்பகப்பூம்பொங்கரிடத்திற்சிறந்த
தேவாய்ந்தசெல்வமுதற்செல்வமெல்லாந்—தூவாய்ந்த
வேள்பணிந்தபேரழகாமேதகுபோரூராநின்
றாள்பணிந்தார்க்குண்டாகுந்தான். (க)

காழியிலேவந்துகணக்கிலாச்சீவனாநீ
டூழியின்பத்துய்த்தவொருவனே—யாழியெனுந்
துன்பத்திருந்தேனைத்தூக்கித்தென்போரூரா
வின்பத்துள்வைப்பாயினி. (உ)

இருட்டறையைநோக்குவிழிக்கேற்றுவிளக்கென்றாழ்
பொருட்டனையேகாட்டுமவைபோலே—மருட்டனையு
மாயையினூற்பேரருளான்மாற்றியறிவளிக்குந்
தாயனையான்போரூரன்றான். (ங)

நாயேனுன்சீரடிக்குநன்கல்லசெய்தாலும்
பேயேனிழைத்தபெரும்பிழையை—நீயே
பொறுத்தாள்வதுன்கடனும்போரூராவென்னை
யொறுத்தாலெனக்காருறவு. (௪)

ஐம்பொறியாற்கண்டபினரற்பித்தாலுமடியே
னெம்பெருமான்மிச்சிலுனக்கேறுமோ—வம்பனே
னீகாட்டக்காண்பதெனநேயமுறப்போரூரா
வாய்காட்டிடதற்புதமேயாம். (௫)

விதிவழியேநின்றுன்மிளிர்கமலத்தாளை
மதிதழையுமன்பால்வணங்கிக்—கதிதழையு
மன்பரைப்போல்வேடமணிந்துநின்றேன்போரூரா
வன்பருக்குள்வன்பனேன்வந்து. (௬)

இல்லறத்தானல்லேனியற்கைத்துறவியல்லே
னல்லறத்துஞானியல்லேனாயினேன்—சொல்லறத்தி
னொன்றேனுமில்லேனுயர்ந்ததிருப்போரூரா
வென்றேநானீடேறுவேன். (௭)

இன்போரணுவாயிடரதற்குமாமலையாம்
புன்போகம்வேண்டிப்புலம்பாதே—யென்போடே
யுள்ளமுருகவருமொண்போரூரனையனருள்
வெள்ளமுறநெஞ்சேவிரும்பு. (௮)

மயக்கமெலாநீங்கியுன்றன்மாமலர்த்தாட்கீழே
இயக்கமறுவாரிதிபோலென்றே—இயக்கமறு

பேரானந்தம்பெறுவேன்பேணுதிருப்போரூரா
சீராருந்தேவாதெளிந்து. (௯)

அளகையர்கோன்வாழ்வுமனங்கன்போலேரு
மளகவடமீன்போலணங்கு—முளமதனி
லுன்றுதுகைவிட்டுனைப்பிடித்தார்போரூரா
வென்றுதரவுகொண்டேனியான். (௧0)

வள்ளிக்கொடிபடருமாகற்பகதாரு
தெள்ளிப்புகழ்தெய்வச்சிந்துரமே—யுள்ளிக்
களித்துவிளையாடுங்கனகமலைபோரூ
ரளித்துவிளையாடுமரசு. (௧௧)

மெய்ப்பொருளாநின்னைவிரும்பியின்பமேவாது
பொய்ப்பொருளைநாடியிடர்ப்போந்தேனைச்—செப்பரிய
மட்டழகார்சோலைமலிந்ததிருப்போரூரிற்
கட்டழகாகாத்தாள்கடன் (௧௨)

வள்ளையாரோடைமலிபோரூராறுமுகப்
பிள்ளையார்பாதம்பிடிநெஞ்சே—கொள்ளையார்
வன்பிறப்புநீங்குநமைவாரிதிபோல்வந்தடருந்
துன்பிறக்குங்கூடுஞ்சுகம். (௧௩)

இருளிற்கிடந்தவெனையன்றேதூக்கி
யருளைத்தரத்தனுவேயாகி—தெருளுற்றுத்
தந்தவனீமற்றவையைத்தந்ததுபோனிற்கித
லெந்தவகைபோரூரனே. (௧௪)

இடர்களையுமின்பக்கரும்பையெம்மா
தொடர்பிறவிநீக்குந்துணையைத்—தொடர்பாகி
யுள்ளும்புறம்புமொளிவீசும்போரூரிற்
றெள்ளுமணியைநெஞ்சேசேர். (கரு)

சேர்ந்துமதுசெயலற்றமுடிமேற்சேர்த்தி
யார்ந்தகளிமேன்மேலுமாக்கியே—சார்ந்தெவனும்
பொங்கிமணக்குமின்பப்போரூரன்றாட்பூவைத்
தங்கிமனமேதருக்கு. (கசா)

முடித்தேன்களித்தேன்முசிப்பெல்லாமாறிக்
குடித்தேனானந்தக்கொழுந்தே—னடித்தேனெம்
மாரூரார்போற்றியடிபணிந்துநின்றுதொழும்
போரூரன்பாதாம்புயம். (கஎ)

அருளேவடிவாகியானந்தவாரிப்
பொருளாயானென்னதெனல்போமோ—மருளேது
மில்லானேபொரூரிறைவனேநாயேற்கு
நல்லானேசொல்லாய்நயந்து. (கஅ)

என்னைவிழுங்கியிருக்கநீயானந்தந்
தன்னைவிழுங்கித்திருக்கநா—னென்னையினுஞ்
சாலவருள்புரிந்தசற்குரவாபோரூரா
வேலவருள்செய்யேயினி. (ககூ)

படல்முறித்துவிழியாலுவைக்கண்டாற்போ
[illegible]—யடியிணையைக்

பேரானந்தம்பெறுவேன்பேணுதிருப்போரூரா
சீராருந்தேவாதெளிந்து. (கூ)

அளகையர்கோன்வாழ்வுமனங்கன்போலேரு
மளகவடமீன்போலணங்கு—முளமதனி
லுன்றுதுகைவிட்டுனைப்பிடித்தார்போரூரா
வென்றுதரவுகொண்டேனியான். (கo)

வள்ளிக்கொடிபடருமாகற்பகதாரு
தெள்ளிப்புகழ்தெய்வச்சிந்துரமே—யுள்ளிக்
களித்துவிளையாடுங்கனகமலைபோரு
ரளித்துவிளையாடுமரசு. (கக)

மெய்ப்பொருளாநின்னைவிரும்பியின்பமேவாது
பொய்ப்பொருளைநாடியிடர்ப்போந்தேனைச்—செப்பரிய
மட்டழகார்சோலைமலிந்ததிருப்போரூரிற்
கட்டழகாகாத்தாள்கடன் (கஉ)

வள்ளையாரோடைமலிபோரூராறுமுகப்
பிள்ளையார்பாதம்பிடிநெஞ்சே—கொள்ளையார்
வன்பிறப்புநீங்குநமைவாரிதிபோல்வந்தடருந்
துன்பிறக்குங்கூடுஞ்சுகம். (கங)

இருளிற்கிடந்தவெனையன்றேதூக்கி
யருளைத்தரத்தனுவேயாதி—தெருளுற்றுத்
தந்தவனீமற்றவையைத்தந்ததுபோனிற்கித
லெந்தவகைபோரூரனே. (கச)

இடர்களையுமின்பக்கரும்பையெம்மது
தொடர்பிறவிநீக்குந்துணையைத்—தொடர்பாகி
யுள்ளும்புறம்புமொளிவீசும்போரூரிற்
றெள்ளுமணியைநெஞ்சேசேர். (௧௫)

சேர்ந்துநமதுசெயலற்றமுடிமேற்சேர்த்தி
யார்ந்தகளிமேன்மேலுமாக்கியே—சார்ந்தெவனும்
பொங்கிமணக்குமின்பப்போரூரன்றாட்பூவைத்
தங்கிமனமேதருக்கு. (௧௬)

முடித்தேன்களித்தேன்முனிப்பெல்லாமாறிக்
குடித்தேனானந்தக்கொழுந்தே—னடித்தேனெம்
மாரூரார்போற்றியடிபணிந்துநின்றுதொழும்
போரூரன்பாதாம்புயம். (௧௭)

அருளோவடிவாகியானந்தவாரிப்
பொருளாயாவென்னதெனல்போமோ—மருளோது
மில்லானேபோரூரிறைவனேநாயேற்கு
நல்லானேசொல்லாய்நயந்து. (௧௮)

என்னைவிழுங்கியிருக்குநீயானந்தத்
தன்னைவிழுங்கித்தருக்கநா—னன்னையிலுஞ்
சாலவருள்புரிந்தசற்குரவாபோரூரா
வேலமருள்செய்யேயினி. (௧௯)

படலொழித்துவிழியாலுவைக்கண்டாற்போ
லுடலொழித்தானைவரோடேபோட்டு—படிபிணையைக்

காட்டியநீமீட்டுங்கணமயக்கிற்போரூரா
கூட்டியெனையாட்டாதாட்கொள். (உ௦)

எனதபிமானம்பிடித்தவிந்தவுடலாதி
யுனதபிமானம்பிடித்தாயுற்றே—யெனதாகக்
கொண்டேன் மயக்கங்குலையுநாளெந்நாட்
கண்டேபோரூராகழறு. (உக)

எனக்கவலம்வாராமலென்னாளுங்காத்து
மனக்கவலைமாற்றுமருந்தாம்—புனச்சிறுமி
முத்துவடக்கோடுழுதமுந்நான்குதோளுடையான்
றத்துபுனற்போரூரன்றாள். (உஉ)

பொருப்பெனவேபஞ்சின்பொதியெனினுஞ்சின்ன
நெருப்பணுகினீறுமாபோல்—விருப்பமுட
னுன்னைத்தொடர்வார்க்குறுபவநோய்போரூரா
பின்னைத்தொடராபிறந்து. (உங)

கண்ணிற்கருமணியேகற்பகமேகற்றோர்க
ளுண்ணிற்குமோரொளியேயோர்பொருளே—யெண்ணிற்கு
[ம்
போரூரிறையேபுனிதநிறையானந்தச்
சீரூருறையேயெனைச்சேர். (உச)

வேல்கண்டேன்றோளில்வியன்சதங்கைமொய்த்திருந்த
கால்கண்டேனாறுமுகங்கண்டேனே—நீல்கொண்ட
மாயூரங்கண்டேன்வளமைதருபோரூரிற்
கோபுரங்கண்டேன்புகுந்து.

தாயாமெனக்குரியதாதையாஞ்சற்குருவாந்
தேயாக்கருணைபொழிதெய்வமா—மாயப்
பொருணீக்குமன்பர்புனிதவீட்டேற
விருணீக்கும்போரூரிறை. (௨௬)

கேட்டதெல்லாம்பாலிக்குங்கேடிலாத்தாதாவும்
வீட்டுநெறிகாட்டும்வியன்குருவு—நாட்டமென
வுண்ணின்றுநாயேற்கொளிகாட்டுஞ்சிற்பரனு
மெண்ணின்றபோரூரிறை. (௨௭)

ஐம்பொறியார்போகமயின்றுழலுநாயேனுன்
செம்பதுமத்தாளிணையேசிந்திக்க—வும்பருக்குங்
காணவரிதாமின்பங்காணத்தென்போரூரா
பூணவருளேபுரி. (௨௮)

அன்பெலாநின்பாலேயாக்கியடியேனுன்
னின்பெலாமுண்டிங்கிளைப்பாறக்—கொன்புனைவேற்
கையாதென்போரூரிற்காங்கேயாவீடுதவு
மையாநீகண்பார்த்தருள். (௨௯)

நீலக்கடன்முகட்டினேருதயசூரியன்போற்
கோலக்கலாபக்குரகதமேற்—சாலவுநீ
தோன்றியடியேன்றுயர்தீரப்போரூரா
வூன்றியடியேன்முடிமேலோது. (௩௦)

மலையனையனின்றபடிவாழ்ந்துதவுமியானை
கலையனையனைப்புடைத்தகாலை—சிலையனையன்

மாப்பிளைதென்போரூரின்மாணிக்கச்செஞ்சதங்கைக்
காற்பிளைநாயேனார்கதி. (௩௧)

ஏதுபிழைசெய்தாலுமேழையேனுக்கிரங்கித்
தீதுபுரியாததெய்வமே—நீதி
தழைக்கின்றபோரூர்த்தனிமுதலேநாயேன்
பிழைக்கின்றவாறுநீபேசு. (௩௨)

முக்கரணத்தாலுமுசியாதுனைப்பணியுந்
தக்கவர்கடாட்டாமரைமீது—புக்கபொடி
யொன்றினுமென்சென்னிக்கோரணியாப்போரூரா
சென்றுறுவேன்வீடுதெளிந்து. (௩௩)

மூவாசைகொண்டுமுசிக்குநெஞ்சேபோரூரிற்
றேவாசைகொள்ளத்தெரியாதோ—தேவாசை
கொண்டாயேனந்தங்குறைகளெல்லாமிக்கணமே
விண்டாயேகண்டாயேவீடு. (௩௪)

குழவியழுதகுரற்கேட்டதாய்வந்
தழுதகண்ணீர்மாற்றியமுதூட்டும்—கெழுதகைபோ
லேயெனிடர்களைந்துநல்லருளூட்டும்போரூர்ச்
சேயேநந்தாயாகுந்தேர். (௩௫)

கலங்கினேன்கண்ணீருன்கையாற்றுடைத்தே
யலங்கிலேவேலாறுமுகத்தையா—புலன்கரணங்
கண்டறியாவின்பங்கடையேற்குப்போரூரா
வுண்டறியத்தந்தாளுவந்து. (௩௬)

மலைமுழையிலுற்றாலென்மாமருந்துண்டாலென்
கலைமுழுதுங்கற்றாலென்காணா—ரிலைநிலவு
வேல்பிடித்தகையான்வியன்போரூரனையனிரு
கால்பிடித்தாற்காண்பார்கதி. (௩௭)

விருப்பமுடனேபணியுமெய்யன்பனோயு
மிருப்புநெஞ்சவன்போலியையுங்—கருப்பிரதக்
கட்டியார்தீஞ்சுவைபோற்காதலர்கவியும்போரூர்ச்
செட்டியார்தாமறிவார்தேர்ந்து. (௩௮)

கோழிப்பதாகையுஞ்சீர்க்கோலமயில்வாகனமு
மாழிப்பெருக்குறிஞ்சியார்வேலும்—வாழியெனத்
தோத்திரஞ்செய்போரூரிற்சுந்தரனார்பேரருளோர்
மாத்திலாயினெஞ்சேவரும். (௩௯)

அயிலேந்துதோளானையாறுமுகத்தானை
மயிலேந்துதாளானைவாழ்த்திப்—புயலேந்து
தண்டலையார்போரூர்ச்சரவணனைநெஞ்சமே
கண்டலையாதுற்றார்களி. (௪0)

புயல்போற்கருணைபொழிவிழியான்றன்னை
மயல்போக்குமாமருந்தைவந்தெந்—செயல்போக்கும்
போதானந்தச்சுடரைப்புண்ணியனைப்போரூரி
றாதாந்தனைமனமேநாடு. (௪௧)

உரகபடந்தூக்கியுநூறுபசுந்தோகைத்
துரகமிசைத்தோன்றுஞ்சுடரோ—பரகதியில்

வாழ்ந்தருளநாயேன்வளமைதரும்போரூரா
சூழ்ந்தருளாய்சாலத்தொடர்ந்து. (௬௨)

கடலைச்சேறாக்கிக்கடுவரைநீறாக்கி
மிடலுற்றசூரனுரம்வீட்டி—யடலுற்ற
வேல்கொண்டார்தெய்வத்தைமெய்யாகப்போரூரின்
பால்கண்டார்க்குண்டோபவம். (௬௩)

மறப்புநினைப்பாகிவருதிணையெந்நாளும்
புறப்படாவின்பப்புணரி—யுறப்புகுந்தே
யாடிக்களிக்குமருட்போரூரையனடி
கூடிக்களிக்குங்குழாம். (௬௪)

முத்துச்சிவிகையராய்மூரிமதயானையராய்த்
தத்துபரிமான்றேறிற்றங்குநராய்—மெத்து
மரியாதனைத்தராயாருவர்பூம்போரூர்
பிரியாதார்நீறணிந்தபேர். (௬௫)

பேய்போந்துயரம்போம்பித்தம்போம்போகாத
நோய்போமிடிபோநுவலுங்காற்—றாய்போல
நன்னிதியைப்போலநயந்ததிருப்போரூரன்
சன்னிதியைக்கண்டளவேதான். (௬௬)

குமராநமாவென்றுகூறினரோர்கா
லமராவதியாள்வரன்றி—யமராசன்
கைபுகுதார்போரூரன்கால்புகுவார்தாயுதரப்
பைபுகுதார்சேரார்பயம். (௬௭)

குற்றமிழைத்தாலுங்குணமாகக்கொண்டெம்மேற்
பற்றுவிடாதபழம்பொருளா—முத்தமழைக்
காரூரனையனுக்குக்கற்பகநீழற்கொடுத்த
போரூரனையனெஞ்சேபோற்று. (சஅ)

வேலுமயிலும்விளங்குஞ்சிறுசதங்கைக்
காலுமீராறுகனதோளுஞ்—சால
வருளுதவுமாறுமுகமுமுளபோரூர்ப்
பொருணமதுநெஞ்சமேபோற்று. (சகூ)

சரவணவாவிச்சலமூழ்கியன்பாற்
குரவணிதாளுடைக்கைகூப்பிப்—பரகுருவே
யென்றேதிவாழ்த்தியிரும்போரூர்சூழ்ந்தவனை
நின்றேதிநெஞ்சேநினை. (ருo)

வேலைநினைந்தாயோவியன்கிங்கிணிசூழ்ந்த
காலைநினைந்தாயோகனபோரூர்—வேலையாச்
சூழ்ந்துதொழுதாயோநீசூரியாகாரிருளைப்
போழ்ந்திடுவாளேதோபுகல். (ருக)

அம்புலியேபோரூர்வந்தாறுமுகங்கண்டாயோ
நம்புமடியார்சபையைநண்ணினையோ—வெம்பரனைப்
பண்ணளியாற்பாடினையோபாற்கடல்போலேவிளங்குந்
தண்ணளிநிற்கேதுகாண்சாற்று. (ருஉ)

கடவுட்பிடிக்கோர்களிப்பாகும்வள்ளிக்
கொடிகற்றத்தானுக்குலாவ—மடியர்க்கே

யெண்ணுதருமுள்ளத்திலின்பூறும்போரூரிற்
கண்ணுதலான்றந்தகரும்பு. (௫௩)

வாளைப்பகடுமடைவாயடைக்கவரு
மாளைப்பநட்டுமணிபோரூர்—நீளிடத்தி
லைவண்ணமுண்டங்கதிலோரரசிருக்கு
னைவண்ணம்போகநெஞ்சேநாடு. (௫௪)

என்போதநின்பாலேயீதலேநல்லறனு
முன்போதங்கைக்கொள்வதொண்பொருளா—முன்பாதத்
தானந்தமின்பமாமாரமுதேபோரூரா
மோனந்தான்வீடாகுமொய்த்து. (௫௫)

சூக்குமையாம்வாக்குந்துணியாணவவுடனு
நீக்கரியவென்போதநெஞ்சமே—போக்கி
யிருந்தபடியிருக்கவென்றுபோரூரா
திருந்தவரம்பாலிப்பாய்செப்பு (௫௬)

ஐவாயவாவையுமுன்னரடிக்கேவைப்பதலர்
மெய்யானவன்பேவியன்சலமாம்—பொய்யாத
வுன்போதத்தாலறிவதொண்சுடராம்போரூரா
வென்போதனைவேத்தியம். (௫௭)

அமரர்க்கின்பாகுமவுணர்க்கேகைப்பா
மிமயப்பிடிகரத்திலெய்துஞ்—சமயத்
தலைவனார்மோந்துகொளச்சாரும்போரூரிற்
கலைவலாரோத்துங்கனி. (௮௮)

மரகதமாமலைமேன்மாணிக்கவெற்புத்
திரகதமாய்த்தோன்றுந்திறம்போல்—வருமுனது
காட்சியினைநாயடியேன்கண்டுதொழத்தந்தருளாய்
மாட்சிதருபோரூராவந்து. (௫௯)

ஆணிப்பொனென்கோவருளாழிதானென்கோ
மாணிக்கமென்கோமதியென்கோ—பேணிப்
பணிவாரிருள்போக்கும்பானுவென்கோபோரூர்க்
கணியாருந்தெய்வத்தையான். (௬0)

ஆனந்தமாகடலேயாராவமுதமே
மோனந்தருஞ்சுடரோமுத்திவித்தே—தேனார்ந்து
கஞ்சமலர்வாவிக்கணபோரூரையாவுன்
றஞ்சமெனக்காத்தாள்சரண். (௬௧)

பாம்பாகத்தோன்றிற்பழுதைசற்றுந்தோன்றாதாம்
பாம்பின்றுத்தோன்றிற்பழுதையே—மேம்பாடாய்ப்
பொய்தோன்றின்மெய்தோன்றாபோரூராநின்னருளான்
மெய்தோன்றிற்பொய்தோன்றாவீடு. (௬௨)

கானலைநீரன்றென்றுகாட்டக்கண்டாலொருவன்
மானலநீரொன்றுமயங்கல்போ—னிலமாய்ப்
பொய்யுலகம்பொய்யாகக்காட்டியும்போரூரனை
மெய்யெனவுன்னேனேன்மிக. (௬௩)

கும்பமுனிக்குக்கொடுமலயங்கண்மூன்றுறுக்குச்
செம்பதுமத்தான்கொடுத்ததேசிகா—நம்ப

வறியேன்மலமறுத்தாயற்புதம்போரூரா
சிறியேன்மேலென்னருளோசெப்பு. (சுசு)

அஞ்ஞானவல்லிருள்போயன்பர்குணக்குன்றின்மிசை
மெய்ஞ்ஞானபானுவெளிதோன்றச்—செஞ்ஞான
நாதத்தொனிகூவுநற்கொடிப்போரூரனிரு
பாதத்தைநெஞ்சேபணி. (சுரு)

பவளக்கொடிபூசற்பன்னிரண்டின்மீதே
யிவருற்றசூரியர்போலேய்ந்து—திவளுற்ற
குண்டலங்களாடவருகோவைப்போரூரனைப்போற்
கண்டிலன்பொய்யாக்கருணைக்கார். (சுசா)

மூதண்டகூடமுகடுதொடத்தாணீட்டுங்
கோதண்டபாணிகுலமருகன்—றீதண்டா
வண்ணமெமையாண்டான்மகிழ்போரூரனையனினி
யெண்ணமெனைநெஞ்சேயெமக்கு. (சுஎ)

ஆம்பல்வாய்விள்ளவடியார்கரகமலங்
கூம்பவுதிக்குங்குளிர்மதியே—தேம்பி
யழும்பிள்ளைக்காய்போலருட்போரூரனையா
தொழுதவெற்குநீயேதுணை. (சுஅ)

என்செயலாய்த்தோன்றவிருட்டிரோதம்புரிந்தாங்
குன்செயலாய்த்தோன்றவொளியருள்செய்—துன்செயலா
லென்போதந்தோன்றாதுன்னின்பாரப்போரூரா
வுன்போதந்தந்தாளுவந்து. (சுகூ)

உள்ளந்தனிலேயுவமையிலாவா
வெள்ளந்துளும்பவிளையாடும்—பிள்ளைகளே
சூழுந்திருப்போரூர்ச்சுந்தராவென்பிறவி
யேழும்போநெஞ்சேயெமக்கு. (எ0)

ஒளியாற்கதிரவுணரூனடலாற்கால
னளியாற்குளிர்மதியேயாகு—மெளிதினனி
தூரம்போய்மீளுதலாற்சொன்மனமாம்போரூரில்
வீரன்கரத்தேந்தும்வேல். (எக)

கைக்குரியகஞ்சமாங்கண்ணுக்கோர்காட்சியா
மெய்க்குரியசென்னிக்கேமென்முடியாம்—பொய்க்காதென்
னெஞ்சத்துளின்பநிறைக்கும்பரஞ்சுடராந்
தஞ்சுற்றபோரூரன்றாள். (எஉ)

வள்ளவளச்செம்முளரிமாளிகையின்மீதிருந்து
பிள்ளைமடவன்னப்பெடைநோக்க—வுள்ளலொடு
செவ்வாய்ச்சிரலாடுந்தென்வயற்போரூராள
னெவ்வாய்ப்புமாகுமெமக்கு. (எ௩)

வீதிமணக்கும்விளைக்குங்குமச்சேறே
யோதிமணக்குமுயர்மாடந்—தாதுசெறி
பூமணக்குஞ்சோலைபுகழ்மணக்கும்போரூரிற்
பாமணக்குஞ்செவ்வேள்பதம். (எச)

மயிலடையுஞ்சந்தமலைச்சாரலெங்குங்
குயிலடையும்பூஞ்சோலைக்குள்ளே—புயலடையும்

பொன்மாடமெங்கும்புகழ்போரூரர்வாழ்தெய்வந்
தன்மாடடைவார்தவர். (எரு)

தன்னைமறந்துகண்ணீர்த்தண்டரளமார்பணியும்
பின்னைமுருகாவென்றுபேசுமுளத்—துன்னுங்
குயிலாலுஞ்சோலைக்குளிர்போரூரானை
மயின்மேல்வரக்கண்டமான். (எசு)

எத்திக்குந்தானாயிருந்தடியேனுள்ளத்தே
தித்திக்குந்தேனளிக்குஞ்செட்டியாங்—கொத்தி
யரவமணிப்பைதூக்கியாடுமயிலேறிக்
குரவமணிபோரூர்க்குகன். (எஎ)

அன்புந்தருநல்லருளாழியுந்தரும்பே
ரின்புந்தருமெண்ணியதருமே—மன்பதையைக்
காக்கும்போரூரான்கடையேனைத்தன்னடியா
ராக்கும்போரூரானறிந்து. (எஅ)

நோவவுரையானெம்மைநோவக்கண்பார்த்திடான்
சாவினையான்றளரவிடான்—பாவனைய
சொல்வாய்க்குறத்திதுணைபிரியாப்போரூர
னல்வாய்ப்பனாயனெஞ்சேநாடு. (எகூ)

திருவடிக்கேதோன்றுஞ்சிறியேன்றுயர
மொருவருக்குத்தோன்றாதென்னுள்ளே—சருவியெனை
யிந்நாளும்வாட்டுமிடர்களையப்போரூரா
நன்னாளிந்நாளாநயந்து. (அ0)

ஆசையுமன்புமபிமானமுமுனது
பூசையிலேவைக்காதுபொய்க்காளாய்ப்—பேசரிய
பெண்ணாசையாதிபிடித்துழன்றேன்போரூரா
வெண்ணாதுநின்னையிருந்து. (அக)

தீயவனென்குற்றந்திருவுளத்திலுடாதென்
றாயனையபோரூர்ச்சரவணா—தூயசுக
வீட்டுக்குள்வைப்பாய்வினையேனைப்பொய்க்காயக்
கூட்டுக்குள்வைக்கேல்குறித்து. (அஉ)

வேல்விடலாயென்றுமணிவீரக்கழல்புனைந்த
காலுடையசூரகொளாயென்று—மாலின்
மருகனேயென்றுமடநெஞ்சேபோரூர்
முருகனேயென்றுமுயல். (அங)

காதலித்தவாறுதவுங்காங்கெயனார்தாளிணையை
யாதரித்தாநன்றாயனுதினமு—நீதரித்துக்
கள்ளமெலாம்போகக்கருதுநெஞ்சேபோரூர்வந்
துள்ளமெலாமின்பமுறும். (அச)

கருப்புச்சிலையானுங்கைகூப்பழகா
பொருப்புச்சிலையான்புதல்வா—விருப்புற்ற
வென்னெண்ணத்தின்படியேயீந்தருளாய்போரூரா
வுன்னெண்ணத்தின்பாயுவந்து. (அரு)

நாடுதனிலேயுழலுநாயேனைவாவென்று
வீடுதனில்வைக்கவிரும்புவாய்—பீடுதரு

காட்சியேபோரூரிற்கற்பகமேயாருயிர்க்கோர்
சாட்சியேயுன்றாள்சரண். (அகா)

ஆரியனுய்வந்துமறிவுக்கறிவாயுங்
கூரியநூறந்துங்கொடியேற்குப்—பேரறிவு
தந்தாய்மறந்துதளர்கின்றேன்போரூர்வா
ழெந்தாயென்செய்கேனினி. (அஎ)

என்றுமபிமானமேழையேன்மீதுவைத்து
நன்றுபுரியுங்குமரநாயகா—வின்றுசுக
பூரணத்திலுயேன்புகவைப்பாய்போரூர்வாழ்
காரணத்தாயுள்ளேகலந்து. (அஅ)

கைவிட்டாலுயேனைக்காப்பாரொருவரில்லை
பொய்விட்டார்போற்றும்புனிதனே—மையிட்ட
கண்ணாரிருவர்கலந்தபுயத்தழகா
தண்ணார்போரூராதரித்து. (அகூ)

ஆனைமுகத்தாற்கிளையவாறுமுகத்தானை
மானையிடத்தில்வைத்தோன்மாமகனை—மானுதவு
வேடிச்சிதோள்சேர்ந்தமெய்ப்புயனைநெஞ்சமே
நாடிச்சிபோரூர்நயந்து. (கூ0)

மெய்யடியார்போலமிகநடிப்பேன்மெய்யடியார்
செய்யடிமைத்தொண்டேதுஞ்செய்திலேன்—பொய்யடியே
னுன்னுட்கமலபதத்துண்ணிறையப்போரூரா
வென்னாட்கிடைக்குமெனக்கு. (கூக)

நோயுற்றடராமனொந்துமனம்வாடாமற்
பாயிற்கிடவாமற்பாவியேன்—காயத்தை
யோர்நொடிக்குணீக்கியெனையொண்போரூராயாநின்
சீரடிக்கீழ்வைப்பாய்தெரிந்து. (கூ௨)

குறைகளையுங்கோவேகுணமளிக்குந்தேவே
மறைமுடிவுகாட்டுமணியே—யிறையவனே
போரூராவென்றுபுகழ்நெஞ்சேயென்னாளுங்
காரூர்மயக்கமறுங்காண். (கூ௩)

கோதுபடாதகுணஞானசாரமே
யேதுபடிறேனிழைத்தாலுந்—தீதாகக்
கொள்ளாதுபோரூர்க்குமரவேளேயேனை
யெள்ளாதுகாத்தாளினி. (கூ௪)

மருளுடையேன்செய்தபிழைவண்போரூராயா
வருளுடையநீபொறுத்திங்காளாய்—தெருளுடையாய்
வேறுதுணைகாணேன்வினையேன்றனக்குரிய
வாறுதுணையாருனனம். (கூ௫)

பஞ்சரத்தின்மூடிவைத்தபைங்கிளிபோலுயேனை
யஞ்சிரத்தக்கூட்டிலடையாதே—விஞ்சு
மருளொளியிற்சேர்த்தியமுதூட்டிவைப்பாய்
தெருளொளியேபோரூராதேர்ந்து. (கூ௬)

எப்போதுமென்முடியுநின்பத்திருப்பாத
மெய்ப்போதின்கீழிருக்கவேண்டுமே—மெய்ப்போத

வேதாவணங்கவருமவித்தகாபோரூரி
னாதாமயில்வாகனா.                                        (கூ௭)

கன்றழைக்குமுன்னேகருதிவருமாப்போல
நின்றழைக்குநாயேற்குநேர்தோன்றி—யொன்றினுக்கு
மஞ்சாதேவாவென்றழைப்பாய்தென்போரூரா
வெஞ்சாதபேரருளாலின்று.                                        (கூ௮)

ஊழுக்காளாகியுறுபோகமேகருதிப்
பாழுக்குழைத்தபடிநேனே—யேழுக்குட்
போகாவகைபுரியாய்போரூராபன்னிரண்டு
வாகாவடிவேலவா.                                        (கூகூ)

உண்ணாதபோகமில்லையுற்பவியாக்காலமில்லை
நண்ணாததேகமில்லைநாயினேன்—மண்ணூடிப்
பண்டுவந்ததுன்பமறப்பார்தொழுபோரூரனைக்
கண்டுவந்துநெஞ்சேகருது.                                        (௧00)

களங்கமெலாமற்றேன்கதிபுகுந்தேனுய்யே
னுளங்குளிரவானந்தமுண்டேன்—வளங்களெல்லா
முற்றேன்றிருப்போரூருத்தமனார்சீர்பாத
நற்றுமனாதொழுதநான்.                                        (௧0௧)

ஆறுமுகம்வாழியாறிரண்டுதோள்வாழி
தேறுபதம்வாழியிருதேவிமார்—வீறுபுடை
வாழிவேல்வாழிமயில்வாழிபோரூரர்
வாழிசகம்வாழிமகிழ்ந்து                                        (௧0௨)

மாலைமுற்றியது.

உ

வேலுமயிலுந் துணை.

---

திருப்போரூர்ச் சன்னிதிமுறை

# தாலாட்டு.

---

காப்பு.

கனகவரையிருபாற்கங்கைவழிந் தாங்குக்
கனகருணையேமதமாக்காட்டுங்—கனகவரைக்
கோதண்டனீன்றதிருக்குஞ்சரத்தைக்கைதொழுவார்
ஈதண்டார்சேர்வார்திரு.

பூமாதுநாமாதுபோதசுகமாமாது
தாமேவுபோரூர்ச்சரவணநாயகனே. (க)

மாணிக்கமால்வரைமேன்மன்னுசெக்கர்வானமென
வேணிப்பிரான்றேளின்மேவுஞ்சிறுகுருந்தோ. (உ)

உலகீன்றமாதாவுதவியபால்கஞ்ச
மலர்வாய்களாறுமணக்கின்றவான்றருந்தோ. (௩)

பெண்ணையுந்துகற்புப்பிடியும்பிணைமானுங்
கண்ணாரக்கண்டுகளிக்கவருகற்பகமோ. (௪)

நீலமயில்வாகனனேநெட்டிலைவேலாயுதனே
ஞாலமிறைகோழிக்கொடிபடைத்தசேவகனே. (௫)

ஆறிரண்டுதோளானேவாறுமுகத்தானே
தேறுமறைகொஞ்சுஞ்சிறுசதங்கைத்தாளானே. (௬)

மகுடங்களாறுமணிக்குழைகளீராறுந்
திகழ்கடகமீராறுஞ்சிலம்புந்தரித்தானே. (௭)

சடைமேற்பிறையைமுந்நூறன்றேற்பிணித்தணிந்து
விடையான்மடிமேல்விளையாடுமாரமுதோ. (௮)

செஞ்சதங்கைகொஞ்சச்சிறுகிங்கிணியாடக்
கஞ்சமலர்த்தாளுமையாள்கண்களிக்கவந்தானே. (௯)

ஆய்மாரறுவர்களுமம்பிகையுங்கங்கைமின்னுஞ்
சேயேயென்றேந்திச்சிரமோந்துகொள்ளுருந்தோ. (௧௦)

கானந்திரிவேடர்கன்னிகைக்காகப்பரண்மேன்
ஞானங்கமழ்பாதநண்ணவைத்தநாயகமோ. (௧௧)

புராரிசிறுவாவென்னப்பூவுலகங்காக்கு
முராரிமருகாவென்னமுன்வந்துநின்றானே. (௧௨)

அமராபதியிலமரரெல்லாஞ்சூழ்ந்து
தமராகிவாழ்த்தவெள்ளைத்தந்திமேல்வந்தானே. (௧௩)

அண்டமனந்தமருளுருவினின்றிலகக்
கண்டமரர்போற்றக்கனகவரைநின்றானே. (௧௪)

தவமுனிவர்தேவர்சயசயவென்றேத்த
நவவீரராமணிக்குநடுவிருந்தநாயகமோ. (௧௫)

பொதியமுனியகத்துப்பொங்குமிருணீங்க
விதியுமறியாவிளக்கேற்றுந்தேசிகனே. (௧௬)

அருணகிரிநாதனருந்தமிழ்நூற்கீரன்
கருணைபெறவோதுங்கவிமாலைத்தோளானே. (௧௭)

பிரமனறியாப்பிரணவத்தினத்த
மரனார்செவிகுளிரவன்றுரைத்தசற்குருவே. (௧௮)

அரிவைமுருகாவென்றழைக்குமுன்னேவந்து
கரமுதவிநின்றகருணைப்பெருந்தேவே. (௧௯)

வேலைக்கலைபயின்றமேதகுபொய்யாமொழிக்குப்
பாலைக்கடையிதென்றுபகர்ந்தபெரும்பாவலனே. (௨௦)

தார்மார்பகனேசமரபுரிநாயகனே
சூர்மார்புருவத்துளைத்தவடிவேலவனே. (௨௧)

குன்றமுங்கொக்குங்குளைகடலுஞ்சூர்மார்புங்
குன்றவடிவேலெறிந்தகொற்றவனேநற்றவனே. (௨௨)

சமரபுரித்தேவோதணிகைமலைத்தேனே
வமரும்பழனிமலைக்கானமணிவிளக்கோ. (௨௩)

சீரலைவாய்முத்தோதிருப்பரங்குன்றத்தரசோ
வேரகத்திலென்றுமிருந்தபெருவாழ்வோ. (௨௪)

பழமுதிர்சோலைப்பரனேகுறிஞ்சிக்
கிழவனெனாநல்லோர்கிளக்கும்பெருமானோ. (௨௫)

சங்கப்பலகைத்தமிழைப்புலவோர்க்குப்
பங்கப்படாமற்பகர்ந்தபெரும்பாவலனே. (உசா)

நாயினேன்செய்பிழைகளுடாதெனதுளமே
கோயிலாக்கொண்டுகுடியிருந்தமெய்ப்பொருளோ. (உஎ)

வானவர்சூழ்போரூரைவந்தடைந்தபேர்க்கெல்லா
மோனசுகங்காட்டிமுத்திதருந்தேசிகனே. (உஅ)

உள்ளத்திமிரமொழித்துச்சிவானந்த
வெள்ளத்துளன்பர்விளையாடவைத்தானே. (உகூ)

அரனேடுவந்தம்மையளித்தவள்ளப்பாலைப்
புரைதீரவுண்டவனைப்போதமுறக்கண்டானே. (௩O)

பொற்றாளம்பொற்சின்னம்பொற்பார்சிவிகையொடு
நற்றரளப்பந்தரையுநம்பர்கையிற்பெற்றானே. (௩க)

மதுரைச்சமணமதகரிகளெல்லாஞ்
சிதறத்துறந்தசிவசமயகோளரியோ. (௩உ)

மயிலைநகர்தன்னில்வன்னியடுமென்மைக்
குயிலைநிகருமொழிக்கோதையாச்செய்தானே. (௩௩)

ஆச்சாபுரத்திலனந்தமுயிரையெல்லாம்
பேச்சோடுளங்கடந்தபேரின்பம்வைத்தானே. (௩ச)

வந்தோர்பிணிதீர்க்குமாமருந்தோவன்பருக்குச்
சந்தோடநல்குஞ்சமரபுரிமாநிதியோ. (௩ரு

தாயோதமரோவென்றுறைதயோசற்குருவோ
தேயாக்கருணைபொழிதென்போரிவேலவனே. (௩௬)

முத்தோகுலிசமோமூதொளிமாணிக்கமோ
சித்தோதென்போரூர்ச்சிவானந்தவாரிதியோ. (௩௭)

பாலோசெந்தேனோபழமோபழமறையோ
மேலோர்புகழ்போரூர்வீற்றிருந்தபார்த்திபனே. (௩௮)

அன்னமோபைங்கிளியோவம்பிகைகண்ணுக்கினிய
சொன்னமோபோரூர்ச்சுகபூரணவொளியோ. (௩௯)

ஞானக்கரும்போமெய்ஞ்ஞானந்தக்கடலோ
தானற்றூர்போற்றுஞ்சமரபுரித்தண்ணளியோ. (௪0)

என்றென்றேதாலாட்டியெல்லோருமின்பமுற
நன்றருளேசெய்யுமெங்களுதென்போரூரிறையே. (௪௧)

தாலாட்டு முற்றியது.

---



உ

வேலுமயிலுந்துணை.

திருப்போரூர்ச்சன்னிதிமுறை.

# திருப்பள்ளியெழுச்சி.

---*---

திருமலிகுணதிசையருணனல்லுதயஞ்
செய்தனனிருவினைச்சமமலபாகப்
பருவமதுடையவர்தமதுளமெனவே
பாரகம்விளங்கினவவர்குணக்கிரிமே
லருளொளிவீசினின்றிலகுமுன்பதம்போ
லருக்கனுங்குணதிசைப்பொருப்பெழுகின்று
னிருளறுகுறுமுனிபரவியபோரு
ரிறையவனேபள்ளியெழுந்தருளாயே. (க)

ஆடுறமணிமயில்சிறைவிரித்ததன்மே
லருளொளிதிகழநீயெழுந்தருண்முறைபோற்
பீடுறுமரகதக்குரகதம்பூண்ட
பெருந்தடந்தேர்மிசையெழுந்தனன்கதிரோன்
வாடுறுதாமரைநினதருளடைந்த
மாதவர்முகமெனமலர்ந்தனவெங்கு
மேடவிழ்மலர்ப்பொழில்பொதுளியபோரு
ரிறையவனேபள்ளியெழுந்தருளாயே. (உ)

பகருசுடர்விடுமுன தயில்கண்ட
ப்தகர்தமனமெனச்சுரர்மனமெனவே
புகருமெழுங்கினவிகசிதமாகிப்
பொலிந்தனமுள்ளிகடடங்தொறுமுனது
திகழ்பதமடைந்தவருயிர்ச்சிறுபோதந்
தேய்ந்தெனமதியொளிதேய்ந்ததுகுணபா
லிகலறுகதிரொழுகின்றதுபோரூ
ரிறையவனேபள்ளியெழுந்தருளாயே. (௩)

என்றனைக்கைப்பிடித்தாளுறுமிறைவ
னெழில்பெறுமலர்விழிமலர்ந்தெழுசமய
முன்றனதுளவிருள்போக்குவனேக்கா
லொல்லையில்வருகெனவெல்லினைக்கூவி
நின்றனதிருங்கொடியழைத்துறுமுறைபோ
னீடுறுமனைதொறுங்கூவினமிகவு
மின்றெனையாண்டுகொண்டருளியபோரூ
ரிறையவனேபள்ளியெழுந்தருளாயே. (௪)

மன்மதன்விருதுகளூதினபொழில்வாய்
மாயவன்கரப்படைதொனித்ததுனெதிரோ
தென்மலிமலரவனூர்திகடடத்துச்
சிலம்பினநின்கொடிபதவெச்சரிக்கை
பன்முறைபண்ணுவபோன்மனைதோறும்
பாழியங்குரலொலிகாட்டினவருளா
லென்மலவிருடெறுமாரியபோரூ
ரிறையவனேபள்ளியெழுந்தருளாயே. (௫)

கின்னரர்கிம்புருடர்களொடுகெருடர்
கெந்தருவர்கள்சித்தர்வித்தியாதரரு
மன்னியமுரசதிர்சிகரியின்வாய்தல்
வந்தனரொங்கெழில்வாத்தியந்தொனித்தார்
பொன்னிலமடவாரின்னிலமடவார்
புரிந்தனர்நாடகமிருந்தகைமயில்போ
லின்னருள்பொழிமுகிலேதிருப்போரூ
ரிறையவனேபள்ளியெழுந்தருளாயே. (௬)

வானவர்புகழ்நவவீரர்களொருபான்
மால்வரையனகணநாதர்களொருபாற்
றீனமிலெண்டிசைப்பாலகரொருபாற்
றேவர்கண்முனிவர்கள்பூதலரொருபாற்
றூனமதுதவியகரங்கொடுபாரி
சாதநன்மலர்மழைபொழிந்தனர்பணிந்தே
யேனலம்புனமலிசாரலம்போரூ
ரிறையவனேபள்ளியெழுந்தருளாயே. (௭)

மறைமுடியுணர்ந்தவர்மறையவரடியார்
வருபரிசாலகரரசர்கள்வணிகர்
குறைவறுவளவர்கண்மற்றுளரெவருங்
குழுமியேவடமொழிதென்மொழிப்பாவா
னிறைதயவுடனினைப்புகழ்ந்துநின்றேத்தி
நீறுறுதண்டெனப்பணிந்தெழுகின்றா
றெறிமணியருவிகள்சொரிகிரிப்போரூ
ரிறையவனேபள்ளியெழுந்தருளாயே. (அ)

விலையறுநவமணிமாலைகள்கொணர்ந்தார்
வெயில்விடுகுலிசகேயூரங்கள்கொணர்ந்தா
ரலகறுமணிசெறிமகுடங்கள்கொணர்ந்தா
ராழிமதாணிகணூபுரங்கொணர்ந்தார்
நிலைபெறுகவரிதழ்நேத்திரங்கொணர்ந்தார்
நிறைந்துளம்வேண்டியபெறவுறப்பணிந்தா
ரொலையறுபெருவரமருள்செயப்போரு
ரிறையவனேபள்ளியெழுந்தருளாயே. (௯)

ஐங்கரங்கொடுதழுவுறநினையொருகோம்
பானையுண்மகிழ்ந்ததுமுக்கணம்பொருப்புன்
பங்கயமுகவணிகண்டுகண்களிப்பப்
பரிவொடுநினைந்தநுபணிவளையுயிர்த்த
செங்கயல்விழிப்பசும்பிடிநினைமடிமேற்
சேர்த்தருட்பாறரத்திருவுளத்துனுமீண்
டெங்களையாண்டுகொண்டருளியபோரு
ரிறையவனேபள்ளியெழுந்தருளாயே. (௧0)

திருப்பள்ளியெழுச்சி முற்றியது.

உ

வேலுமயிலுந்துணை.

திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

# பெரியகட்டியம்.

---*---

பவளமலையுபயதிசையருவிசொரிமுறைகரட
பரமவிபமகிழிளையகோவே
தவளநிறமுளகவளகரியின்மிசைசுரருலகு
தழையவலம்வருமதிகதேவே
துவிதயயலறுமுனிவொனுமளிகள்படியமிகு
சுகநறவுபொழியுமொருபூவே
குவடிலகுகுறவர்தருகொடியினொடுசமரபுரி
குலவியருள்வரமுதவுகாவே. (௧)

பரவைமுகடெழுமுதயகிரணபரிதியினடன
பரதமயின்முதுகில்வருதீரா
விரவுபரிமளகுரவுகமழுபயசரணகலை
விதரணிகபுரணகெம்பீரா
சுரரரசசசியினொடுதருநிழலினுறையமதி
சமடவசுரர்களையவீரா
கரவுநெறியறுமடியர்கதியமுதுபெறவுதவு
கனசமரபுரிநிலவுதாரா. (௨)

மறைகள்பலகலைகள்பலலிபிகண்முதலியவுதவு
வளர்சொரூபநிசப்ரணவவொளியே
முறைமைதருசரவசரவுயிர்கள்செயிரறுபுவன
முழுதுநிறைபரமசுகவெளியே
கறைகண்முழுவதுமுடுகிமிகவுநினைபவரிதய
கமலமலர்குடிபுகுதுமணியே
பிறையறுகுநதியரவுசடிலமுடியணிபரமர்
பிரியமுறவொருசொன்மொழிகிளியே. (௫)

இமயகிரியுதவுபிடிகுடமுலையினிடைபெருகி
யெழுமமுதவுததிசெறிவாயா
சமரவிரணியவசுரனுடலமடுமுகிர்கொளரி
தருமருகனெனநிலவுதூயா
வமரர்முனிவரருரகர்நரர்ககனமதியிவர்க
ளடிபணியவரமுதவுநேயா
திமிரதினகரனெனவுளிருளிரியவொளிர்சரண
திரசமரபுரிவருமுபாயா. (௬)

வடவைவிழிபிறையெயிறுகுடவயிறுதடியுதடு
மலியலகைபசியையடுவேலா
வடியுநெடுமுடியுமரியயனுமறிவரியசிவ
னகமகிழமழலைமொழிபாலா
நடனமிடுமயுரமிசையடியர்நினைதொறுமவர்மு
னகைமுகமொடெதிர்கொள்குணசீலா
தடவரைகள்கிடுகிடெனவுலைகவொநொடியில்வரு
சமரபுரிதழையவுறைலீலா. (௭)

ககனமுகடளவிவருகனகரதநவவிளையர்
　　கருதுபுடைவரமகிழுநாதா
சகமுழுதுமடுமசுரர்குலமுழுதுமுடுகியடு
　　சமரகணமுடிகடொடுபாதா
செககணகசெககணகதிகுதகுகுதிகுதகுகு
　　திமிதியெனநடனமயினீதா
தகுகடவுளிபமயில்கொளொருபதிருபுயமருவு
　　சமரபுரிதனிலுறுசவ்வாதா. (௬)

உததிசுவறிடவிடர்செய்குவடுபொடிபடவசுர
　　ருடல்கள்கிழிபடவயில்கொள்கரனே
குதிகொள்கருணையினிலகுவதனமுடனடியரொதிர்
　　குலவிவருமினியகுணதரனே
யதிகம்ருகமதபடீரகளபபரிமளதொடைக
　　ளணிகளிவைதிகழ்புனிதவுரனே
புதியபரிபுரவொலிகள்கலகலெனவருசரண
　　புகழ்சமரபுரிமருவுபரனே. (௭)

மலயநிலவியமுனிவனிடருததியகலவவன்
　　மனநினைவுகொடுதழுவுகலனே
கலைகடெரிபலகையுறைபுலவனுறுசிறைநையவிடு
　　கதிர்கொளயிலுடையதெய்வகுலனே
நிலைமைநெறியுளதெரிவைமுருகவெனவுளாதருமு
　　னிலவியவள்கரமுதவவலனே
தலைமைசெறிபிரமசுகமனுதினமுமவிளையுமொரு
　　சமரபுரிமருவுகதிநிலனே. (௮)

கனலிலடுமகளை யொருபதிகமதில்வரவருள்செய்
    கவுணியர்கள்குலதிலகநிதியே
பணகவணையனுமயனுமகிழமரகதவொளிசெய்
    பருமயிலின்மிசையுதயமதியே
தினகரனைநிகருமொருசிவசமயநெறியொழுகு
    திகழடியர்பரவியடைகதியே
தனபதிதனளகையெனவளமைசெறிசமரபுரி
    தனிலுறையுமமராதிபதியே. (௯)

பசிதமரணயனமணியிகழுமதிமடமைசெறி
    பலசமணதிமிரமடுசூரியா
நிசிசரர்களெனுமுதகியளறுபடவொருநொடியி
    னிகழ்கரியபுருவநெறிவீரியா
வுசிததமிழ்முழுதுமொருமதுரைநகரவர்புகழ
    வுலாசெய்தளவிடுமதிககூரியா
சசிதரனுமுமையுமுளமகிழவெதிருறநிலவு
    சமரபுரியதனிலுறைசிரியா· (க0)

பெரியகட்டியம் முற்றியது.

வேலுமயிலுந்துணை.

---

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

## சின்னகட்டியம்.

---

சுரர்முனிவருலகர்பணிபாதா
சுகசொருபசிசகலைவிநோதா
பரவறிவையறியவருள்போதா
பரவதிகசமரபுரிநாதா. (க)

குறவர்மகட்டழுவுமணிமார்பா
குலவுபரிபூரணசொரூபா
நறவுபரிமளநிறைபுநீபா
நயசமரபுரிமருவுபூபா. (உ)

நெட்டரேசூரசங்காரா
நித்தமிடுபச்சைமயூரா
விட்டொளிரும்வச்சிரகேயூரா
வித்தகர்துதித்தபோரூரா. (ங)

குஞ்சரமுகற்கிளையகோவே
கொஞ்சியுமைமுத்தமிடுபூவே
தஞ்செனநினைக்குமவர்தேவே
தண்சமரநற்பதியில்வாழ்வே. (ச)

ஆறுமதிகூடியருள்பாலா
வாறவருளாறுமுகவேலா

தேறுகலைபேசுகுணசீலா
சீர்ச்சமரமாங்கரிலீலா. (௫)

தேவர்கண்மனோபயங்கரனே
சேவலங்கொடியாடுகரனே
மேவுகுங்குமவாசவுரனே
வீறுசெம்போரிவாழ்பரனே. (௬)

தெய்வசிந்தூரமருவுதோளா
திவ்வியமங்களநிலவுதாளா
பொய்வருந்தேவர்மணவாளா
புண்ணியபோரூர்வருகளோ. (௭)

பலகலைப்பரவையந்துறைவா
பரமனுக்குபதேசவிறைவா
தலைமையிற்குறையாதநிறைவா
சமரநற்பதிமேவுபொறைவா. (௮)

அசுரர்குலகாலவேனேயா
வமரர்சேனாபதித்தூயா
வுசிததமிழறிதருமுபாயா
வுயர்சமரபுரிவருசகாயா. (௯)

மலயத்தின்முனிவனரியனே
மலமட்டஞானசூரியனே
தலமெச்சமேவுசீரியனே
சமரப்புராதிவீரியனே. (௧௦)

சின்னகட்டியம் முற்றியது.

உ

வேலுமயிலுந்துணை.

---

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

### பெ ரி ய க ட் டி ய ம்.

---*---

மழையினிலகியகருணைபொழியுமழகளிறதிக
　　மடியின்மிசைநிலவுகுலமணியே
யுழையுமடலுறுமழுவுமிருகரனுமருவுசிவ
　　னுவகைகொடுதழுவுதெய்வவணியே
கழைகள்குழுமியவரையிலெயினர்தருமுழைமனது
　　களிபெருகநிழலுதவுகணியே
தழையுமிருநிதியுதவுசமரபுரியதனில்வரு
　　தகைமைசெறியடியர்குணகுணியே. (க)

அரியமறைமுடியிலுறைபரமசிவையகமகிழ
　　வருகில்வருதருணவளவுருவே
யிரவுபகலனுதினமுமுயர்நயவினிணையுமவ
　　ரிதயமலரதனிலுறுமருமே
யுருவெனவுமருவெனவுமொளியெனவும்வெளியெனவு
　　முணலரியபொருளுதவுகுருவே
தரணியெனவிருளகலவறிவுதருசமரபுரி
　　தனிலுறையுமமரர்பணிதருவே. (உ)

அதிமதுரநறவுபரிமளமழகுநிறையுமறு
　　பதமுரலுமினியதொடைநீபா
பொதியமலையுறையுமொருகுறுமுனிவனிதயகுகை
　　ப்புதையுமிருளறவொளிசெய்தீபா
துணையும்ருகமதபடிரகளபபுளகிதவருண
　　துதிசெயழகொழுகுமணிமார்பா
ததிதிதிமிதிமிதியெனநடனமயின்முதுகில்வரு
　　சமரபுரிதழையவுறைபூபா. (௩)

பரிதிமரகதமலையின்மிசையுதயமெனநடன
　　பரதமயில்கடவுமிருதாளா
கருதரியதவளகரமலையுதவுமொருவனிதை
　　கனமகிழ்வுமருவுமணவாளா
செருவினசுரரைமுடுகியடுகனகவடவரைக
　　டகழ்வதெனநிகழ்பனிருதோளா
பெருகுவளமைகளுதவுசமரபுரிபணியுமவர்
　　பிரமரசமுணவுதவுகோளா. (௪)

திடகரடமலைபிளிறநொடியிலடுகரகமல
　　திரிநயனவரியுதவுமுருவே
வடகலைகண்முழுதுமளவிடுமதிகபிரமனறி
　　வரியபிரணவமுரைசெய்குருவே
யிடருதவுபவவுததிசுவறநினைதருமடிய
　　ரிதயமெழுமினியசுகமருவே
படிககணுரகர்முனிவரர்பரவுசமரபுரி
　　பணியுமவமொணியதருதருவே. (௫)

கவலைபிணிமிடிபிடர்களறவடியர்நிலைமைபெறு
கதியினிகழ்வுறவருள்செய்கோனே
யுவரியெனவொலிமலியுமசுரரொனுமதகரிக
ளுருளவயிலெறியுமரிமானே
நவமருவுமுனிவர்சுரருரகரொனுமினியபயிர்
நலன்மருவவருள்பொழிமெய்வானே
குவலயமெனுறுசமரபுரியிலுறைதவமுனிவர்
குளிர்நயகமலமுறுதேனே. (௬)

மலையருவிதருமரவின்மணியையனலெனவெருவு
வனசரர்கடருமரிவைமோகா
தலைமைமகபதியமரர்பரவவிரணியவுலகு
தழையவிபமிசைவருவைபோகா
விலையினவமணிகள்கதிரொளியின்வெயில்விடுகடக
மிளிருமொருபனிருதிருவாகா
கலைமுழுதுமறிபெரியவறிஞர்வளமையினர்செறி
கனசமரபுரிநாகரீகா. (௭)

அகமுநடுமுடிவுமுறுநிசையுமெழுபுவியுநிறை
யறிவிலெழுபரமசுகநறையே
தகுதிகுகுதகுதிகுகுதகுதிதரிகிடதிமிதி
தகுதியெனநடனமயிலிறையே
பகர்கலைகண்முழுதுமளவிடவரியமிகநுணிய
படிறுளமுறுநுழைவரியமறையே
துகளகலுமறைமுனிவரனுதினமுநெறியொழுகு
துதிசமரநகரதிபின்முறையே. (அ)

சுருதிகுருவனுபவமெய்யொருமையினிலெனைமருவு
　　துகளரியவருளொளிசெய்கண்ணே
கருவிமுழுதையுநியதிகளையுமவர்பரவியடை
　　கனபுரணவறிவுதிகழ்விண்ணே
யிரவிசசியனனயனவிறைவர்செவிகுளிரவரு
　　மிசைதனிலுயமிகுமொழிசெய்பண்ணே
தருணவளமுருகசரவணகுமரவெனுமொழிக
　　டமைபூசமரபுரியிலுறைதண்ணே. (கூ)

சடரிஞெளிவிடுசிலைகொள்பறவைவிருதுடையகுக
　　துரகமயிலிறைவதெய்வராயா
குடமுழவுமுரசதிரவலகைபசிகெடவசுரர்
　　குலமுழுதுமடுமயிற்கோணயா
படியிலுளதிலரியபுகழ்பரவுமவர்சுகவுததி
　　படியவினிதருடருமுபாயா
தடமலரிஞெழுருபிழிதவளவளைபருகியுறு
　　சமரபுரியதனிலுறைதூயா. (க0)

பெரியகட்டியம் முற்றியது.

---

வேலுமயிலுந் துணை.

---

# திருப்போரூர்ச் சன்னிதிமுறை

## சி ன் ன க ட் டி ய ம்.

---

ஐங்கரற்கிளையமகமேரோ
யம்புவிக்கினிமைதருசீரோ
சங்கரக்கடவுளணைதாரோ
தண்டமிழ்ப்போரிவருகாரோ. (௧)

இமயமகளருதவுகுணமலையே
யிதயவனுபவமுறைசெய்கலையே
சமயமுழுவதுமிகழுநிலையே
சனனகடலலைவாரும்வலையே. (௨)

கன்னியர்க்குரியநாயகனே
கண்ணனுக்கினியமருமகனே
பொன்னகர்ச்சுரர்கணேயவனே
புண்ணியப்போரிவாழ்பவனே. (௩)

நவவீரர்பணிபாததேவே
நனிபூதகணநாதர்கோவே
தவமேவுபெரியோர்கள்வாழ்வே
தடமேவுபோரிவாழ்காவே. (௪)

நீலக்கலாபமயில்வீரா
நீபத்துமாமலர்தொடாரா

கோலத்தியாககெம்பீரா
கோதற்றநாதபோரூரா. (௫)

வெடியத்தொனித்தசேவலனே
மிகுகொக்கையட்டவேலவனே
படிமெத்தமெச்சுபாவலனே
பரமற்குரைத்தநாவலனே. (௬)

பொன்மாரிபொழிகின்றபுயலே
பொய்யாதவறிஞோர்கள்செயலே
தென்மாறன்மகிழ்பலகையியலே
செஞ்ஞானசுகம்விளையும்வயலே (௭)

கருணைதருமாறுமுகமதியே
கனதேவர்சேனாதிபதியே
தருணவளமாருதநிதியே
சமரபுரிவாழ்சுகோததியே. (௮)

மாரவேள்வெகிடவருசுந்தரா
மாகர்கோனுதவுதெய்வசிந்துரா
கோரசூர்ப்பகையையடுதந்திரா
கோதிலாவாறுலிபிமந்திரா. (௯)

கவலைவெயிலறவீசுகனமே
கருதடியர்நசையானதனமே
சிவன்மருமவணைதுயிலுமனமே
திகழ்போரியடைவோர்களினமே. (௰)

சின்னகட்டியம் முற்றியது.

உ

வேலுமயிலுந்துணை.

---

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

## எச்சரிக்கை.

---

சீரார்குறமாதுளணிசெப்பார்தனமேவுந்
தாரார்புயசமராபுரிச்சண்முகாவெச்சரிக்கை. (க)

பிறைசூடியசடையானருள்பிள்ளைப்பெருமாளே
மறையோர்நிறைபோரூர்வருமன்றுவெச்சரிக்கை. (உ)

பனிமாமலைமிசைபூத்தருள்பச்சைக்கொடிதந்த
கனியேதிருப்போரூர்வருகந்தாவெச்சரிகை. (௩)

அருமாமறைமுதலோதியவானைக்கொருதுணையே
பரிபூரணசுகமேபோரிப்பதியேயெச்சரிக்கை. (௪)

ஆறுவமுதனையாயயில்வேலாவுயர்வானோர்
சேறுபதிசமராபுரித்தேவாவெச்சரிக்கை. (௫)

தெய்வகுஞ்சரிகணவாபச்சைத்திருமாறிருமருகா
சைவநன்னெறிவளர்போரூர்ச்சண்முகாவெச்சரிக்கை. (௬)

வேலாகுணசீலாகனலீலாவிடைப்பாகன்
பாலாதிருப்போரூர்வளம்பதியாயெச்சரிக்கை. (௭)

நவவீரர்கள்பணிநூபுரநளினத்திருவடியாய்
தவர்சூழ்தருசமராபுரிச்சண்முகாவெச்சரிக்கை. (௮)

ஈராறுயர்தோளாதண்டைக்கிசைந்தபதமந்தாளா
சீரார்திருப்போரூர்மயில்வீராவெச்சரிக்கை. (௯)

கோழியங்கொடிபடைத்தாய் நல்குணத்தாயென்னையளித்தா
வாழியம்மலர்பதத்தாய்போரிவரதாவெச்சரிக்கை. [ய்

பூவேபரிமளமேமறைப்பொருளேமயிலேறுங்
கோவேசுரர்தேவேபோரிவாழ்வேவெச்சரிக்கை. (கக)

பிரசமேபிரமரசமேதவர்பேசுங்கதிநலமே
சொருபமேபோரிநகர்வாழ்சுப்பிரமணியாவெச்சரிக்கை. (கஉ)

மதுராகுக்கிடவிருதாசிற்சுகவடிவாசுப்பிரமணியா
சதுராதிருப்போரூர்வருசண்முகாவெச்சரிக்கை. (கங)

எச்சரிக்கை முற்றியது.

---

உ

வேலுமயிலுந்துணை.

---

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

---

### வண்ணத்தாழிசை.

இந்திரப்பெயருடையான்முதலெவருஞ்செறிவளனுக்
கிடையூறுகள்வாராவகையெண்ணிமுற்பணிகளிறென்
சிந்தைப்பிரியவென்கண்சிறுபிள்ளாய்வருகென்றே
திருமார்பிறுகப்புல்கியதெய்வச்சிரமணியே
யந்திப்பிறைமுடியானருளின்பக்கனிநினைவந்
தண்டிப்பணிதொண்டர்க்கினியருளும்படிநினையாய்
சந்தப்பொழிலிடைவெற்பணதந்திக்களிறுலவுந்
தண்சாரன்மணஞ்சூழ்தருசமராபுரியானே. (க)

வேயென்றுறுதோண்மாதுமைவெற்பன்னதனத்தின்
மிசையூறருவிப்பாலினைமிகவுண்டுகளித்த
வாய்குங்குமவாசந்தருவள்ளாலெனைவிள்ளா
வகையாளுநினக்கோதுகைமாறுஞ்சிறிதுளதோ
நாயொன்றுவளர்த்தோன்விடநாடானதுபோலு
நல்லோர்களடைந்தோர்களையெள்ளாரதுபோலுந்
தாயொன்றியசேயைப்புடைதள்ளாளதுபோலுந்
தமியேனைவிடேலண்டினன்சமராபுரியானே. (உ)

ஓதுங்கலையாவும்மனமோடாதுநிறுத்தி
யுன்பாதநிழற்கீழுறலுயர்நன்கெனவோத
வாதஞ்சொலியேதஞ்சொலிமனமோடுசுழன்ற
மதியின்றியசிறியேனுனைவந்தண்டுவதென்றோ
தீதின்றியகுறநாயகிசேருந்திருமார்பா
சிவனார்தருகுமாரவுமைசிறுவாவரிமருகா
தாதொன்றியவனசத்தடமீதொன்றியவெங்கணந்
தண்மாலையில்வண்காவடைசமராபுரியானே. (௩)

ஏலும்மனமோடிப்பொருளியாதொன்றினைநாடி
யிசையும்பொழுதேனும்மனதயென்னுதுவிடுத்துன்
வேலுஞ்சிறைமயிலுங்கனதோளுஞ்சிறுதாளும்
வீறுறருண்முகமுமுனவேண்டுஞ்சிறியேனே
கோலும்மறைநாலின்முடிமேலொன்றியதேவே
குணகுஞ்சரிகோவேசுரர்கொண்டாடியவாழ்வே
தாலம்புகழணியேயெனதுயிர்நின்றொளிர்மணியே
தவமானுறைகணியேசமராபுரியானே. (௪)

உருவுந்தருபுகழும்பலகலையுமுயரறிவு
மோருந்திகழ்குணமும்பலவுமாருந்தவநெறியுந்
திருவுமதிமதியும்பதிகதியுநினையொருநாட்
சேவித்தவர்தமைவந்தெதிர்தெரிசிப்பினும்வருமே
மருவுஞ்சிரபுரமாநகர்வந்தெண்ணிலிபேரா
மாருவளவீடேறிடவைக்குமறைமுதல்வா
தருவுமிகுநிதியுஞ்சுரபியுமன்னகரத்தார்
தண்மேகமெனப்பொன்பொழிசமராபுரியானே. (ரு)

அத்தம்மனமுதயஞ்சிறிதறியாரவிபோலுன்
னருளாகியரவியென்னுளமகலாதுநிறைந்தே
சித்தம்மலவிருளும்பலதத்துவமெனுமுடுவுஞ்
சிறுபோதவெண்மதியுமகல்சீரொன்றினிவருமே
நித்தன்மகிழ்தரவோர்மொழியத்தம்புகல்குரவா
நீலக்கலபத்தோகைகண்மாலைப்புயல்கண்டு
தத்தாகிமிதித்தாதிகுதெய்த்தெய்யெனவாடத்
தண்காவளிபண்பாடியசமராபுரியானே. (சு)

மறையாதியகலையோதியவனசப்பெருமானு
மண்ணுண்டுவடத்தேதுயில்பண்ணும்பெருமானு
நறையாரிதழித்தார்புனைசடையம்பெருமானு
நாடிக்களிகூரத்தகவோறித்திகழ்வோனே
யிறையாகியவளவாயினுமறவாதுனைநாடி
யின்பத்துயில்கொள்ளும்படியென்புத்தியினிறைவாய்
தறையாதியிலுறைவோர்பணிசரணுமபரிபுரணு
தண்ணாரளியண்ணுமகிழ்சமராபுரியானே. (எ)

எளியேனையோரடியானெனவின்பத்திருவுள்ளத்
தெண்ணச்சிறுநாயேனுளநண்ணச்சுகவாரிக்
களியேயுலகெங்குமஃதல்லாதிலையென்றே
காட்டிப்பின்மறைத்தாயென்கண்மாயமஃதென்றே
யளியேயருள்வெளியேயுயிரொளியேமறைமுடிவி
னஞ்சொற்புகழ்பஞ்சப்பிரணவமோதியகிளியே
தளிரோயனையார்மயிலெனவேநடமாடுஞ்
சசிவெண்சுதைமாடஞ்செறிசமராபுரியானே. (அ)

அவனோடவளதுயானெனுமலர்பானலைநாடி
யான்செய்தனன்பிறர்செய்தனரொன்றின்பொடுதுன்பு
நவமாய்வருநோடிருவினையூவும்வெருளியுமே
நணிநீயுயிருண்ணின்றுநடத்துஞ்செயலுடேன்
பருவேலைகடத்துமுனபாதத்துணைவங்கம்
பற்றத்திருவுளம்வைத்தருள்பாலித்திடுகண்டாய்
தவராசர்கள்கவிராசர்கள்புவிராசர்கண்ஞானோ
தயராசர்கள்புடைசூழ்தருசமராபுரியானே. (க)

எண்ணுஞ்செயலாயுமொழியுடலின்செயலாயு
மியாதாயினுநாவாரவிசைக்குஞ்செயலாயு
நண்ணுஞ்செயல்வருநோறுநின்னருளின்செயலாக
நாடுஞ்செயலென்றேவருநாயேன்செயல்போயே
விண்ணும்புகழ்வேலும்விரிகதிரோனையலூழக்கு
மிளிர்செஞ்சிறையிருதாந்தருகரமீதுபிடித்தோய்
தண்ணந்துறைநவாவிக்கயல்பாயக்கமலத்தேன்
சாயக்குடவனைமேய்தருசமராபுரியானே. (கo)

வண்ணத்தாழிசை முற்றியது.

உ

வேலுமயிலுந்துணை.

திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

மட்டுவிருத்தம்.

---*---

ஆதரவாயடியவருக்கருள்சுரக்கு
　　மைங்கரத்தோனன்புகூர்ந்து
மாதவமேயெனவலமுத்துப்புயத்தணைக்கத்
　　திருவுளாத்துமகிழுங்கோவே
யேதமுறுநடியேனைக்காத்தளிப்ப
　　துன்கடனுமிசைப்பதென்னே
போதமலர்கற்பகமேபோரூர்வா
　　ழாறுமுகப்புனிதவேளே. (க)

சிறுகுழவியெனைக்காவென்றுய்க்குரையா
　　துறக்காக்குஞ்செய்திபோலு
மறிவிலியேன்காத்திடெனுதிருக்கவுங்
　　காத்தளிப்பதுனதருட்கேயுண்டா
மூறியிலிடுவந்தமுண்டவென்றன்மருகா
　　வேலுரவாபச்சைப்
பொறிமயிலேறியமுருகாபோரூர்வா
　　ழாறுமுகப்புனிதவேளே. (உ)

தருமவயித்தியனொருத்தன்பிணிதீர்த்தல்
கடனாகித்தணித்தல்போலச்
சுருதிகுருசுவானுபவமாயடியேன்மலந்
தவிர்த்தருஞ்சுழலாநின்றேன்
மருவளருமுனதுபயவாரிசபதநிழற்கீழ்
வைக்கவேண்டும்
பொருவிலருள்பொழிமுகிலேபோரூர்வா
ழாறுமுகப்புனிதவேளே, (டு)

என்னையொருபொருளாகத்திருவுளத்தி
லடைத்தாய்க்கிங்கெதுகைமாறு
மின்னனையசடாமகுடப்பெருமான்கண்
களிக்கவரும்விறல்வேலோயே
யுன்னைமறவாதுன்றாதுறுவேனை
யுன்னடியானென்னவைத்தாய்
பொன்னனையதிருத்தாளாபோரூர்வா
ழாறுமுகப்புனிதவேளே. (சு)

உவமையறுபவசலதிகடத்திமானிடப்
பிறப்பிலுதிக்கச்செய்து
நவமருவுமுனதுபதநாடவைத்தா
யதைமறந்தேனுயினேனே
கவலையெலாமற்றுனதுதிருவடிக்கீ
ழிருக்கவினிக்கருணைசெய்யாய்
புவனகரதலமணியேபோரூர்வா
ழாறுமுகப்புனிதவேளே. (எ)

மயக்கமிடர்காணுநின்மலர்ப்பாதப்
பேரொளியில்வயங்காநின்ற
வியக்கமறுமானந்தக்கடல்படிவ
தெந்நாளோவேழையேனே
நயக்குமணப்பைம்பூவேநாகர்பர
வியகோவேநறவேகாவே
புயற்கருணைபொழிதேவேபோரூர்வா
ழாறுமுகப்புனிதவேளே. (சு)

மங்கியுமுற்பவித்துமுழல்வல்லிடரிற்
புகுதாமன்மதியிலேனை
யிங்குனதுபதநிழற்கீழ்வைத்தியே
லுய்கேன்மற்றேழையேனே
கொங்கலரும்பைங்கூந்தற்குறமாதின்
கணவாவெண்குணவாசூழ்ந்த
பொங்கரளிபண்பாடும்போரூர்வா
ழாறுமுகப்புனிதவேளே. (எ)

இல்லாதான்வள்ளலாயுள்ளானை
யிரவாமுனீதல்போலு
நல்லானேயுனதுபதம்விரும்பாதே
னுயிடினுநல்கவேண்டுங்
கல்லாதபுல்லியர்போற்றேகபோகம்விரும்பிக்
கலங்காநின்ற
பொல்லாதேன்பிழைபொறுக்கும்போரூர்வா
ழாறுமுகப்புனிதவேளே. (அ)

ஊமர்கண்டகனவினைப்போலுரைப்பரிய
　　சிவானுபவமுணராநின்ற
காமருஞானிகள்பரவுமுனதுசேவடிநாயேன்
　　காண்பதென்றோ
தேமருவுமலர்க்கூந்தற்றெய்வவிளம்பிடிநோக்கஞ்
　　சேருந்தோளாய்
பூமகளுக்கணிகாட்டும்போரூர்வா
　　ழாறுமுகப்புனிதவேளே. (கூ)

மடமைசெறிபுலைநாயேன்மனந்திருத்தித்
　　திருவடிக்கீழ்வைக்கவென்றுங்
கடனுனக்கேயாயிருக்கவடிக்கடியிங்
　　குரைப்பதென்னேகடையனேனே
சுடரணையசெழுஞ்சூட்டுப்பல்பொறிச்செஞ்
　　சிறைச்சேவற்றுவசத்தோனே
புடவியிடர்தவிர்த்தாளும்போரூர்வா
　　ழாறுமுகப்புனிதவேளே. (க0)

மட்டுவிருத்தம் முற்றியது

உ

வேலும்மயிலுந்துணை.

---

# திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

## கலிவிருத்தம்.

---

அருணாங்கரனிணையோய்திகழாறானனநாதா
விருளின்றியிருந்துன்பதமென்றெய்துவலடியேன்
மருவொன்றியநீபத்தொடைமார்பாவடிவேலா
திருவொன்றியபோரூருறைதேவாகுகவேளே. (௧)

ஈசன்றருகுமராவிமகிரியான்மகள்புதல்வா
நேசந்திகழிருபாவையர்நினைவொன்றியவடிவா
மாசின்றுனதருணின்றிடுவழிதந்தெனையாளாய்
தேசொன்றியபோரூருறைதேவாகுகவேளே. (௨)

புவனஞ்சரவசரஞ்செறிபுறனுள்ளொடுகீழ்மே
னவமொன்றியசகபூரணநாதாசிவபோதா
தவமும்பதியறிவுநனிதந்தின்றெனையாளாய்
சிவனின்சுதபோரூருறைதேவாகுகவேளே. (௩)

சூர்சேனையையடுவீரர்கடொழுபங்கயபாத
மோர்கூறவெந்நாளும்மெனதுளமன்னுறநினையாய்
தார்மார்பககூர்வேலவதடமாமயில்வீரா
சீர்மேவியபோரூருறைதேவாகுகவேளே. (௪)

தகரப்பரியிசையேறியதாளாவணிதோளா
சுகநற்கதிபெறவெற்குளதுகளற்றிடநினையாய்

நிகழ்குக்கிடவிருதாசுரர்நிருபாவரிமருகா
திகழ்வுற்றிடுபோரூருறைதேவாகுகவேளே. (௫)

நல்வந்தனையடியாருளநாடும்படிதருவோ
யல்வஞ்சனையறவென்னுளமருள்செய்ததினிறைவா
யெல்வந்துறுவேலாமயிலேறுந்தெய்வராயா
செல்வந்திகழ்போரூருறைதேவாகுகவேளே. (௬)

கனகும்பனலுளமாவிழிகாணுந்திருவடியாய்
நினைவும்மலவிருளும்மறுநிலைதந்தெனையாளாய்
வனசந்திகழ்திருமாதருள்வளருஞ்சனர்குழுமித்
தினமும்புகழ்போரூருறைதேவாகுகவேளே. (௭)

அயனாரறிவருமோர்மொழியரனார்க்கருளியவா
மயநீர்பரிபுரணத்திடைவைத்தின்றெனையாளா
யுயர்மாமறைமுடிமீதினிலுறுகாரணசுகமே
செயவேலவபோரூருறைதேவாகுகவேளே. (௮)

வானோர்தொழுபதியேசடைமன்னன்றருமதியே
ஞானோதயமகலாதெனைநண்ணும்படியருளாய்
கோனேயருளோனேகுணவானேமயிலோனே
தேனூர்பொழிற்போரூருறைதேவாகுகவேளே. (௯)

இசையொன்றியவியனாடகமெண்ணியோதியபுலவா
வசைவின்றியிருந்தென்றனதடிசேர்குவலடியேன்
விசைசென்றிடுமயில்வாகனமிசையேறியகோவே
திசையெண்ணுறுபோரூருறைதேவாகுகவேளே. (௧௦)

கலிவிருத்தம் முற்றியது.

உ

வேலுமயிலுந்துணை.

---

திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

பெருங்கழி நெடில் விருத்தம்.

---

சோமகிரணப்பெருங்கருணைசுரந்தமுகங்களோராறுஞ் [ங்
சுருதிவழுத்தும்பன்னிரண்டு தோளுநீபத் தொடைமார்பு
காமர்நிறச்செம்பட்டாடைக்காட்சிமருங்குஞ்சிறுசதங்கை
கலித்தவுபயத்திருத்தாளுங் கடையேன்றுதிக்கப்பணிப்பா
சேமநிதியேசுரர்பதியேதெய்வத்தருவேமலர்மருவே [யே
செறிபூரணமேயாரணமேசிறியேனுயிருக்கோருயிரோ
பூமனறியாப்பிரணவத்தின்பொருளைப்பகரும்பூங்கிளியே
போற்றுமடியார்க்கோரருளேபோரூர்முருகப்பெருமானே.

மறையாகமத்தினெறிப்படியேவணங்குமவரினொருவனல்லே
மனுபேரன்புதழைத்துநினைவந்திப்பாரினொருவனல்லே[ன்
னிறைவாநினதுபுரணசுகநேசித்தவரினொருவனல்லே
னீசனேனுன்றிருப்பாதநிழற்குமுரித்தேனுவேனோ [வே
சிறையார்தோகைமிசைத்தோன்றுந்தேவே யமரர்பணிகோ
சிவனார்புயத்திலணைத்தேந்துந்தெய்வக்குதலைமொழிக்குருந்
தே,பொறையாலுயர்ந்தபெரியோர்கள்புந்திச்சுவையாஞ்செந்
[தேனே
புனிதநிறைந்தசெவ்வேளேபோரூர்முருகப்பெருமானே.()

எண்ணிலாதநெடுங்காலமெண்ணிலாதபலபிறவி [து
யெடுத்தேயிளைத்திங்கனைவீந்திம்மானிடத்தில்வந்துதித்
மண்ணின்வாழ்க்கைமெய்யாகமயங்கியுழன்றலதடியேனுன்
மாறுப்பெருமைதரும்பாதவனசத்துணையென்றடைவேனே
கண்ணின்மணியேயுயிர்க்கனியேகருணைப்புயலேசுகக்கடலே
சச்சித்தாயுச்சிலையமோர்ந்துகண்ணேறுடணைக்குந்திருத்தாளா
புண்ணியோரெண்ணியசரும்பேபொழிமும்மதவாரணமுகத் [தோன்
பொற்பார்துணையேயற்புதனேபோரூர்முருகப்பெருமானே.

கள்ளஞ்செறிந்தவஞ்சநெஞ்சக்கயவனேனைப்புலையனைக்
கருதாசாரவீனமுடைக்கடனேனைமயல்செறிந்த
வுள்ளமுடைப்பொய்யவனேனைப்பேருளாலுநோக்கி
யுயர்பேரின்பத்திடையிருத்தாதுறியடியேனுய்வேனோ
வெள்ளஞ்செறிந்தசடாமகுடவிமலன்புதல்வாவரிமருகா
வேடர்குலமாமகள்கணவாவிறன்மாமுனிவர்தொழுந்தலை
புன்றுதிபிறுங்கலந்தார்க்கும்புனிதசீபத்தொடைமார்பா [வா
புனைதீர்தகரப்பரியேறும்போரூர்முருகப்பெருமானே. (௬)

சீலமிகுந்தபத்திநெறிதினமுமாறுகடையினாய்ச்
செலுத்தாநெறியிற்பொறிவழியிற்செல்லாதிருந்துயொத்தி [னராய்க்
கோலஞ்சிறந்தடியோர்குணமுஞ்சிறந்தோராகியுனைக்
கூடுமடியார்போலெனையுங்குறித்தாட்கொண்டாய்நீயன்றே
நாலுவேதந்தொழுதேத்துநாதமுடியிற்பேரொளியே
நம்புமடியார்க்கின்பமெல்லாநல்குந்தேவேயவர்தமைப்

போலுந்திரிந்தேனுளம்புகுந்தபோதானந்தப்பெருங்கடலே
புலியீடேறமயிலேறும்போரூர்முருகப்பெருமானே. (௫)

தனுவோடிலகுகரணமுடன்சாரும்போகபுவனமிவை
தமையானெனாதென்றுணர்ந்துமயறழைத்துத்தருக்கொ
டுழல்கின்றே
னூனதாமனவைகண்மாயையிடையுதிக்கச்செய்தாய்நீயதனு
ளுள்ளவாறிம்முறைமைதனையுணராச்சிறியேனுய்வேனோ
பனகாபரணர்க்குபதேசம்பாலித்தருளும்பரகுரவா
பைந்தார்க்கூந்தற்றெய்வானைபரிந்துமகிழவருகணவா
புனைவாமாலைதரித்தேத்தும்பொருவிலருணகிரிநாதன்
புகழ்வீட்டின்பம்பெறவுதவும்போரூர்முருகப்பெருமானே.

மன்னராவாருறுசுகமும்வானோர்மகிழ்ந்துபெறுசுகமு
மணிப்பைநாகத்தவர்சுகமுமறையோர்களடைசுகமும்
பன்னுமிடத்திற்சிவத்தெழுந்தபரமானந்தலேசமெனப்
பகர்ந்தாய்குருவாயெழுந்தருளிப்படிறேன்மறந்திங்குழல்
[கின்றேன்
கன்னலெழுந்ததெளிசேறேகட்டிமாவின்றீங்கனியே
கதலிக்கனியேநற்பலவின்கனகச்சுளையேகதிமுளையே [மே
பொன்னம்பொருப்பே யென்விருப்பே போதச்சுகமேகிஞ்சுக
பூரணவெளியேயுள்ளொளியேபோரூர்முருகப்பெருமானே.

ஐயைபுரிந்தூநன்னூலாலுணரத்தகுவவெலாமுணர்த்தி
யுறுபேரருளாரியனாகியுபதேசங்கள்பலமொழிந்தீண்

டாகம்ருவுமுயிர்க்குயிராயறியாதனையாவையுமுணர்த்தி [தோ
ய்டியேன்றனையிங்காண்டுகொண்ட வருளுக்கோர்கைமாறுள
வாகைபுனைவேலிறையோனேவழுத்துநாலுமறையோனே
வானோர்க்குறுசேனாபதியேமலயமுனிவன்குருபதியே
பூகமலிந்தசெங்குலைக்காய்ப்புடையிற்சிகரக்கயல்பாயும்
பொருவின்மருதச்சூழல்செறிபோரூர்முருகப்பெருமாளே
வேதமுடியினுறுபொருளைவிரிபூமிசைச்சேவடிபொருந்த
விகிர்தகுருவாயெழுந்தருளிவிளம்புமவித்தைதயிருளிரிய
வோதுமணியேயடியேனுன்னுபயசரணமறந்தாலு
முறுபேரருளான்மனந்திருத்தியுயரச்சரணத்திருத்தாயே
நாதமளிக்குங்குரற்புலியினகம்போற்றுண்டச்செஞ்சூட்டு
நலத்தபொறிச்செஞ்சிறைச்சேவனளினக் கரத்திற்பிடித்
தோனே, பூதகணங்கள்கொண்டாடப்பொருசூர்குலவேர்க
[ளைந்தவைவேல்
புனிதப்புயத்தின்மிசையேந்தும்போரூர்முருகப்பெருமாளே.

அலையிலாதசாகரம்போலனிலஞ்சேராவிளக்கதுபோ
லருங்கலிரும்பொன்சமமாகியானதராசினுனியதுபோ
னிலையொன்றியகற்சமாதியுற்றுநின்றுட்கமலத்தெழும்பிரச
நிறைவாரிதியிற்புகுந்ததனினேசித்தடியேனிருப்பேனோ [தா
விலையின்மகுடத்திருமுடியாய் மிளிர்குண்டலங்கள்செறிகா
வியன்கேயூரத்திருத்தோளாவிஞ்சுஞ்சதங்கைசூழ்தாளா
புலையுங்கொலையுங்களவுமில்லாப் புனிதத்தவத்தோர்தொழு
[தேத்தும்
புராரிகுமராவுமைசிறுவாபோரூர்முருகப்பெருமாளே. (௧௦

பெருங்கழிநெடில்விருத்தம் முற்றியது.

வேலுமயிலுந்துணை.

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

### குயிற்பத்து.

நன்றருளுந்தவைங்கரவன்றுணைவனை
நனிபனிமலைமகண்மகனைக்குகனை
மன்றினுளாடியகொன்றைச்சடைமுடி
மன்னனுவப்புறுபொன்னங்குழவியைக்
கன்றுகுறுந்தடியாவிளவெறிதரு
கண்ணன்மருகனையெண்ணுந்துணையை
குன்றுதொறுடியபோரூரிறையைக்
கூவாய்வரநீகூவாய்குயிலே. (க)

மறைமுடிகுலவியபிரமரசத்தினை
மருவடியவருளமலர்வாசத்தினை
நிறைசரவசரவுயிர்ப்புரணத்தினை
நிமலகதிக்கொருவித்தினைமுத்தைச்
சிறைமயிலூர்தயசடானனரவியைத்
தேவர்கடொழவருதேவைக்காவைக்
குறையறுவளநிறைபோரூரிறையைக்
கூவாய்வரநீகூவாய்குயிலே. (உ)

அரிவையரெனவருகாகத்திரள்களை
யணுகேன்மயலெனுமலகானலியு
மிருகதிகைதரெனுமேகமெழுந்திக்
கெய்தேல்கவலைத்திவலைகள்வீசும்
பொருவருசமயக்காடணுகேறற்
போதமுரத்தெழுவாதமலைக்குங்
குருபரனாம்போரூரிறையைக்
கூவாய்வரநீகூவாய்குயிலே. (ங)

கயவர்களெனும்வல்லூறுகளிக்குங்
காடணுகேறீதுகிருடறைக்கு
மயன்மிகுமுலகவர்வாழ்வெனுமொட்டினை
மறியேயலறுமதிவன்சிறைபற்று
முயுநெறியினராங்கிளைகளுடனே
யுயர்நூற்கற்பகதருவிலிருந்து
குயின்மணிமாடப்போரூரிறையைக்
கூவாய்வரநீகூவாய்குயிலே. (ச)

பற்பல்விதப்பூச்சோலைபுகாதே
பரிபூரணமாமேகச்சோலையி
லெற்பெறநீயெந்நாளுமகிழ்ந்துய்
இதுவதுவென்றொன்றையுநாடாமே
செப்பமதாய்பின்னையுநாடாமே
சீருளோவடிவாயிருந்து
குப்புகழ்போரூரப்பனைநாடிக்
கூவாய்வரநீகூவாய்குயிலே. (ரு)

விடயக்கண்ணியினிற்புகுதாதே
  மிகுபொறியென்பதுபொறியனைத்துமேவே
உடலப்பஞ்சரமியானெனமகிழ்
  லோதுந்திசைமேவிப்பறவாதே
மிடையிற்சித்திரநற்புள்ளதுபோன்
  மிளிர்பூரணமாமீதிலிருந்து
கொடைமிக்குதவியபோரூரிறையைக்
  கூவாய்வரநீகூவாய்குயிலே. (௬)

இன்றைக்கெனவுநாளைக்கெனவு
  மென்னேன்மயிலிறையின்னமுதூட்டும்
பொன்றப்படுசுகதுன்புகளுன்னிப்
  பூரிப்பொடுவாட்டங்களுறாதே
யொன்றைக்கருதியிதென்னதெனாதே
  யுயர்கதியின்பைக்கருதிக்கருதிக்
குன்றைப்பொருதடுபோரூரிறையைக்
  கூவாய்வரநீகூவாய்குயிலே. (௭)

நிராசையுடனருளேவடிவாய்
  நின்மலனிருசேவடிநிழறங்கிப்
புராதனயாய்நிகழுறுமானந்தப்
  பொங்குரசச்செங்கனிநனிதுய்ப்பப்
பராபரனேகுகனேமயிலோனே
  பண்ணவனேவிண்ணவனேயென்று
குராவணிவோனைப்போரூரிறையைக்
  கூவாய்வரநீகூவாய்குயிலே. (௮)

சேவற்கொடியுடையானேயென்றுந்
திகழொளிதருசாம்பூனததங்கப்
பாவைக்கிணையொப்பாரிருவோர்தம்
பண்புறுமின்பக்கணவாவென்று
மியாவர்க்குந்தலைமையனேயென்று
மெழின்மறைபுகழ்தருபொருளேயென்றுங்
கோவைப்போரூர்வாழ்வைக்கருதிக்
கூவாய்வரநீகூவாய்குயிலே. (௯)

சூரனுரங்கிரவுஞ்சபொருப்புத்
துணிபடவடிவேல்விடுவோயென்றுந்
தாரணிபன்னிருபுயனேயென்றுஞ்
சரவணனேசண்முகனேயென்றுந்
தேர்நவவீரர்கடுணைவாவென்றுந்
தேவர்கள்சேனுபதியேயென்றுங்
கூறறிவினர்புகழ்போரூரிறையைக்
கூவாய்வரநீகூவாய்குயிலே. (௧0)

குயிற்பத்து முற்றியது.



உ

வேலுமயிலுந்துணை.

---

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

### கி ளி ப் ப த் து.

---

பவளநிறச்செந்திருமேனிப்பஞ்சக்கரவானைக்கிளையோன்
றவளநிறப்பொடிபூசுமரன்றந்தருணீபத்தாரமுகன்
கவுரிகொடுக்குமுலையமுதங்கமலத்திருவாய்வழிசிறுவன்
புவனமதிக்கும்போரூரன்புகழ்பேசிக்களிகிளிநீயே. (க)

கன்னியரிருவோர்நாயகனைக்கமலக்கண்ணன்மருமகனை
மின்னியவடிவேலுடையவனைவீரனையாவிலுந்தூயவனை
யன்னியமில்லாதெங்குநிறையாரணனைப்பரிபூரணனைப்[இயே
பொன்னியன்மாடப்போரூர்வாழ் புண்ணியனைக்கிளிபன்னு

மரகதமுடிமேலாறுமுடிமாணிக்கக்கிரிவருவதுபோல், வி
ளைசெலுமயின்மேல்வருவோனை வெற்றிகொள்குக்கிடவிரு
தோனைப், பனைதருபிள்ளைப்பெருமாளைப்பண்பழசெழுதருஞ்
செவ்வேளைத், தனைபுகழ்போரூரிறையவனைத் தண்கிளிபே
சாயன்புறவே. (உ)

உலகினைநொடிவலம்வந்தானை யும்பர்கணகர்வலம்வந்தானைப்
பலகலைமுழுதுமறிந்தானைப்பரகதியடைநெறிதந்தானைச்
சிலுகிடுமசுரனைவென்றானைத்தேவர்கள்பரவிடநின்றானை
யிலகியபோரியிருந்தானையிசையாய்கிளியேநசையாயே. (ங)

எனையொருபொருளாயுளமதனிலெண்ணியருள்பொழியுஞ்சு
கமுகிலைக், கனைகடலமுதச்செந்தேனைக்கன்னலைரசதாளிக்க

னியை, நினைவழிபலவின்பொற்சுனையைநசைதருகட்டுமாங்க
னியைப், புனைமதில்சூழ்போரூரிறையைப்பூங்கிளிசொலுதி
நீங்கறவே. (௫)

வாளைகள்பூகச் செங்குலையின் மன்னியபொன்னுலகுறுதெ
ன்னம், பாளையின்மோதச்சிதறிவயற்பவளாங்குரளமெனத்தி
கழக், காளையமளளர்கண்மடைதோறுங் கால்வாய்தோறும
னைகோலு, நீளணிபோரூர்நாயகனை நிமலக்கிளியேயுகல்வா
யே. (௬)

சாரலினூரப்பரிமளமுந்தண்டலையுறுசம்பகமணமுந்
திரமுறுங்கேதகைமணமுஞ்சீர்நந்தனமல்லிகைமணமு
நாரியர்குழலூட்டலின்மணமுநாகர்வியப்புறவேவீசும்
பேருறுபோரூர்நாயகனைப்பேசாய்கிளியேமாசறவே. (௭)

ஆறுசரோருகமுகனென்று மணிதிகழ்பன்னிருபுயனென்
றும், பேறுதவும்பதயுகனென்றும் பெயர்வேலொளிருங்கர
னென்றுந், தேறுமுளத்தினர்வாழ்வென்றுந்தேவர்தமக்கொ
ருகோவென்னும், வீறுயர்போரூர்நாயகனைவிளம்பாய்கிளியே
கலங்காயே. (௮)

முருகாகுமராசரணென்றுமுதிராவயதாய்சரணென்று, நி
ருபாதிகனேசரணென்றுநிமலாகுகனேசரணென்று, மருகா
வொளியேசரணென்றுமருளேபொருளேசரணென்று, மரு
வார்பொழில்சூழ்போரூர்வாழ் மயிலோனைக்கிளிபுகல்வாயே.

இன்பக்கடலேசரணென்றுமெண்குணமலையேசரணென்
று, மன்பர்க்கமுதேசரணென்றுமாருயிர்முதலேசரணென்று
மன்புக்கறிவேசரணென்றும்வளர்பிரணவமேசரணென்றுங்
கொன்பெற்றுறுபோரூரிறையைக் கோலக்கிளியேயோதுவை
யே. (௧௦)

கிளிப்பத்து முற்றியது.

உ

வேலுமயிலுந்துணை.

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

## வ ண் டு வி டு தூ து.

---

மூக்காலுழுதுண்ணும்வண்டுகாண் மூத்தோனிளவலைக்க ண்டுதான், றேக்காமுதரன்மைந்தனேசேர்ப்பார்பதிதருகந்த னை, நோக்காயுனைநினைந்தன்பினுற்றேற்பாடனையினமென்று நீர், மாக்காவளமலிபோரிவாய்மாத்தாளிணைதொழுதேத்து மே. (க)

தாமரைப்பூமணத்தேனெலாந் தண்டுறையுண்டுறைவண் டுகொள், கோமளப்பாவையர்கேள்வனைக் கொண்டமயூரப்ர சண்டனைப், பாமணப்போரியிற்கண்டிதோர்பாவைபணிந்த னளென்றுதா, னீர்மனத்தன்பொடுபேசுவீர்நீள்சுகப்பொய் கையின்மூழ்கவே. (உ)

தாதினைத்தேனொடுங்கூட்டியேசந்தனம்பூசியவண்டுகா
ளாதரித்தென்னைமுனுண்டவனாறுமுகப்பெருமானுடன்
பேதைதமைப்பான்மையளாயினும் பிச்சியையொத்தவளேனு
மியான், மூதருட்போரமுதாழிவாய்மூழ்கிடப்பேசுமினீவிரே·
சோலைவிருந்திடவுண்டுதான்சோபனம்பாடியவண்டுகாள்
காலமெலாமுனையேநினைகாரிகைகைதொழுதாளென்றே·

யாலையின்வாயெனமேதிவாயம்புயத்தேன்சொரிபோரிவாழ்
வேலவனூபுரக்கஞ்சமேல்விழுந்தெழுந்தாடிவிளம்புமே. (௪)

கோங்கலர்மாமழைமதாணிமேற்குயின்றமணியன்னவண்
டுகொண்,மாங்கனிவாழையின் றீங்கனிமன்றுபலாக்கனிச்சா
றெலாந், தேங்குறும்போரியிலுண்டுநீர்செவ்வேள்பதம்பணி
ந்தேத்தியே, யோங்கொளிவீடுற நாயினேனுந்துமினென்று
ணைநீவிரோ. (௫)

சந்தனச்சாரலினெய்தலிற்றண்டலைநந்தனச்சூழலில்
வந்தொருநால்வகைப்பூநறைறவாசந் துளைந்தாடும்வண்டுகாள்
கந்தனைப்போரிவிசாகனைக்கண்டென் கவலைக்கருத்தறச்
சிந்தைதமகிழ்ந்தெனையாளவேசெப்புமினற்குறவானிரோ.(௬)

மல்லிகைத்தாதரித்துண்டலர்வாரிசத் தேன்கொடுவாய்கழீஇ
மெல்லிதழ்ப்பூவணைமீதிலேமென்றுயில் கொண்டுறைவண்டு
ளல்லியனெஞ்சினளன்பிலாளானநெறிபுரியாதவள் [கா
புல்லியவென்றுவிடாதெனைப்போரிமுருகனுக்கோதுமே. ௭

தண்டலையூர்விண்டுநெய்தலூர்த்தாவடி போய்ப்பனைக்க
ள்ளெலா, மொண்டுமிகக்கொள்ளைகொண்டுதான்மொய்த்து
வருஞ்சிறைவண்டுகாள், பண்டெனையாண்டருணேசனைப்ப
ண்புறுபோரியில்வாசனைக், கண்டினமாண்டுகொளென்றுநீர்
காணவுரைத்திடுவீர்களே. (௮)

மாமலைச்சேணிலத் தேதுஞ்சி வாரமணைபுகுந்துண்டுபின்
கோமலர்க்காமுகசாலையிற்கூடுமரசிளவண்டுகா, டேமலர்த்
தார்புனைமார்பனைச்செஞ்சிறையஞ்சேவலாளனைக், காமனக்
குந்திருப்போரிவாய்க்கண்டெனையாண்டிடச்சொன்மினே. ௯

நீலநிறப்பொறிவண்டுகாணித்தலுங்கைதொழுவேனுமை
யேலவுரைத்தமொழிகளையெல்லாமயர்த்துவிடாதுநீர்
சாலநிகழ்த்திடும்போரிவாழ்சண்முகவேலனுக்குங்களைப்
போலுமெனக்குறவுண்டுகொல்பொங்கருநுங்களுக்கிவலே ()

வண்டுவிடுதூது முற்றிற்று.

வேலுமயிலுந்துணை.

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை

### கட்டளைக்கலிப்பா.

அருளிருந்தநின்பாதமடைந்தவ
ரன்பிருந்தநெஞ்சாலுனிவாழ்த்தியு
மருவிருந்தமலர்தூய்வணங்கியு
மன்னுகாலங்கழித்தனர்நாயினே
னுருவிருந்தயர்கின்றபொய்வாழ்க்கையை
யுன்னியுன்னியுழன்றேமயங்கினேன்
றருவிருந்தபொழில்வளமன்னிய
சமரமாபுரிச்சண்முகவேலனே. (௧)

கானனீரினைமெய்யென்றவாவியே
கனவிடாய்கெடவுண்ணக்கருதிரே
னானநீருவர்நீரொனநாடுவ
தன்னமாமயலென்றினியாறுவேன்
வானநாடருமாமுனிவோர்களு
மதித்தவாரணமுந்துதித்தேதொழுந்
தானமாமழையானைக்கிளையவா
சமரமாபுரிச்சண்முகவேலனே. (௨)

கனவிலேகண்டகாட்சிகள்யாவுமக்
கனவிற்பொய்யெனக்கண்டுதனைக்கண்டோன்
பினையுமந்தக்கனவினைமெய்யெனப்
பேணுமாறுமயங்கினேன்பேதையே
னனையுந்தாதையுமாரியனுமெனை
யாண்டதெய்வமுநீயெனநம்பினேன்
றனைவிடேலுன்றன்சித்தமென்பாக்கியஞ்
சமரமாபுரிச்சண்முகவேலனே. (ரு)

பழுதைபாம்பலவென்றெளியாற்கண்டும்
பாம்புவாதனைதீராதவனென
வெழுமுன்சிற்சுகமின்னருளாற்கண்டு
மிங்கிலப்பொய்மைவாதனைநீங்கிலேன்
முழுதுணர்தன்முதலாயவெண்குண
மொய்த்தபஞ்சரமேமறையுச்சியே
தழுவுவெண்சுதைமாளிகைநீடிய
சமரமாபுரிச்சண்முகவேலனே. (சு)

பிரணவத்தைவிடவகாராதிய
பிறங்குருதபரிசெனப்பேதமா
பூரணவித்தசொரூபம்விட்டிவ்வுயிர்
முதலவின்றெனவென்றனக்கோதிரோ
யரனெறித்தவன்மைந்தநின்றாட்டுணை
யண்டினோற்குமவித்தையுண்டாகுமோ

தரணியைக்கண்டபேர்க்குமிருளுண்டோ
சமரமாபுரிச்சண்முகவேலனே. (ரு)
இந்த்ரஜாலம்பொய்யென்றதன்மூலத்தை
யியம்பிக்காட்டக்கண்டோன்மயக்செய்தல்போற்
பந்தஞாலம்பொய்யென்றிதன்மூலநீ
பகரக்கண்டும்படிறேன்மயங்கினேன்
கொந்துலாவியகொன்றைச்சடாடவிக்
குழகனுக்கழகானகுமாரனே
சந்தனடவிச்சாரல்வினைதருஞ்
சமரமாபுரிச்சண்முகவேலனே. (சு)
பளிக்குமண்டபத்தேயுறுநாயதன்
பன்னிழற்குளுமெய்யெனநாடல்போ
லொளிக்குமாயையினின்றறனையெண்ணிலா
வுருவமாக்கண்டுழன்றனனையனே
வெளிக்குளேவிளையுஞ்சுகவாரியே
வித்திலாதெழுசுத்தசொரூபமே
தளிர்க்கையார்கணடிக்கின்றமாடமார்
சமரமாபுரிச்சண்முகவேலனே. (எ)
மைந்தனேதுபிழைபுரிந்தாலுமே
மன்னுதாதைபொறுத்தருள்செய்தல்போ
லெந்தையென்பிழைநீபொறுத்தாள்வதுன்
னிலியபோருளுக்கியல்பாகுமே

யந்தணாரியனாகிவந்தேதழையேற்
கருளமுதமளித்தகண்ணனே
சந்த்ரகாந்தத்தகடொளிர்மாளிகைச்
சமரமாபுரிச்சண்முகவேலனே. (௮)

விண்ணிலேயெழுமிந்திரசாபத்தை
மேகமின்னலையொத்தெழுகாயங்க
ளெண்ணிலாதவெடுத்திளைத்தேனையென்
றின்பவாரியில்வைத்திளைப்பாற்றுவாய்
கண்ணிலேகண்டசித்தொளிக்காட்சியே
கருத்திலேகண்டவின்பசந்தோடமே
தண்ணிலாமுடிவேணியர்செல்வமே
சமரமாபுரிச்சண்முகவேலனே. (௯)

காலன்செங்கட்கடாவினிலேறியே
கயிறுவீசிப்பிடியாமுனமெனை
வேலுஞ்செங்கையிலேந்திமயின்மிசை
விரைவில்வந்துவந்தஞ்சலென்றருளுவா
யாலமுண்டகளத்தரிடத்துறை
யரிவைகொஞ்சுறக்கொஞ்சுபைங்கிள்ளையே
தாலம்பாளைமதுக்குடமேந்திய
சமரமாபுரிச்சண்முகவேலனே. (௧௦)

கட்டளைக்கலிப்பா முற்றியது.

உ

வேலுமயிலுந்துணை.

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

### கொச்சகக்கலிப்பா.

*

மாணிக்கமாரிசொரிவானம்போறுயேனைப்
பேணிக்கருணைபொழிபேரின்பமாப்புயலே
வீணிற்காலங்கழிக்கும்வெவ்வினையேனெஞ்சகத்துன்
றுணிற்கவைப்பாய்சமரபுரிநாயகமே. (க)

பெரும்பேதைமையேன்பிழைகுறியாதுள்புகுந்த
வரும்பேரருளாலென்றுகங்குளிர்ந்தேனே
கரும்பேயென்றுருயிரின்கண்ணிருந்தகண்ணே
தரும்போதகமேசமரபுரிநாயகமே. (உ)

போராதகுத்தவெளிப்பேரின்பசாகரத்தே
யோராதநாயேனிருப்பதினியெந்நாளோ
வாராருங்கொங்கையுமைமடிமேலுந்தோண்மேலுஞ்
சாராவளருஞ்சமரபுரிநாயகமே. (ஙு)

காட்டுவதுங்காண்பதுவுங்காட்சியும்போய்நின்றவின்ப
வீட்டினிடைத்துயின்றேவேசறிக்கைதீர்வேறோ
மாட்டின்மிசையேறுமகதேவர்சேயேநின்
றுட்டுணையேதஞ்சஞ்சமரபுரிநாயகமே. (சு)

வரகமன்பாகியெழிலுறுபாவீந்தோர்க்குன்
சிரகமீந்தின்புகுஞ்செல்வமலிதேசிகனே

நாரகமொன்றில்லாதநாயேனையாளெனவைக்குந்
தாரகமேசேயேசமரபுரிநாயகமே. (௫)

பாலுக்குள்வெண்ணெயெழு பான்மைபோலென்னுளத்தின்
சீலத்தையெல்லாந்தெளிவிப்பதெந்நாளோ
வேலுக்கரசேவிறன்மாயிற்கரசே
தாலத்தரசேசமரபுரிநாயகமே. (௬)

வெள்ளைச்சோமன்றரித்தவேணியரானைமுகப்
பிள்ளைக்கிளையதிருப்பிள்ளைப்பெருமானே
கள்ளத்தேனுக்குன்கருணையின்பங்காட்டியதைத்
தள்ளத்தகுமோசமரபுரிநாயகமே. (௭)

சோரிவேற்கண்ணியர்மேற்றொல்புவிமேற்பொன்னதன்மே
வாரியலைபோல்வருமாசைதீர்வேனோ [ல்
நாரியிடப்பாகருக்குநான்மறையினுட்பொருளைத்
தாரிபெறவோதுஞ்சமரபுரிநாயகமே. (௮)

காமர்குறப்பெண்மானுங்காமுறுதெய்வப்பிடியுங்
கோமளவீராறுபுயக்குன்றினுறச்சேர்ப்போனே
யோமெனும்வித்துளளேயுதித்ததருவேயெனையுந்
தாமரைத்தாட்சேராய்சமரபுரிநாயகமே, (௯)

கும்பமுனிக்கின்பமெல்லாங்கொள்ளையொள்ளத்தந்தருணீ
யெம்பனேற்கின்பம்வழங்குவதுமுண்டாமோ
செம்பதுமக்காடலர்ந்ததேதகதருபோமுகா
சம்புதவுமைந்தாசமரபுரிநாயகமே. (௧௦)

கொச்சகக்கலிப்பா முற்றியது.

உ

வேலுமயிலுந்துணை.

---

# திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

## ஊசல்.

---

சுந்தரமாகந்தொடுமண்டபத்தினூடே
　　சுரர்தருக்களுற்றிசையுநிறுத்திநாப்பண்
முந்தியசாம்பூநதச்சங்கிலிகள்பூண்ட
　　முதிர்கதிர்வீசுங்குலிசப்பலகைமீது
சிந்தைமகிழ்ந்தினிதிருந்தேரரம்பைமாதர்
　　செங்கரங்கள்கொண்டுசிறப்பொடுநின்றாட்டத்
தந்திமுகற்கிளையவனேயாடீரூசல்
　　சமரபுரிநாயகனேயாடீரூசல். (க)

வடவரையோர்பன்னிரண்டின்முடியின்மீதே
　　மார்த்தாண்டர்பன்னிருவருலாவல்போலுஞ்
சுடர்மணிவீசுங்குழைகள்புயங்கண்மீதே
　　தோய்ந்தாடமார்பிலகுமதாணியாடக்
கடகவளையசைந்தாடமகுடமின்னக்
　　கமலபதச்சிலம்பொடுகிங்கிணிகளாடத்
தடவரைகள்டுடுடெனமயிலாடத்துஞ்
　　சமரபுரிநாயகனேயாடீரூசல். (உ)

கங்கைமுடித் தாதையுளத் துவகைபூப்பக்
கணபதியாகிய தமையன்களித்துநோக்கப்
புங்கநவவீரரொனுமிளவலானோர்
புடையினின்றுபணிகேட்பவிடைவிடாமே
செங்கண்மாலெனுமாமன் வியந்துபோற்றச்
செழுமறைமைத் துனன்றரிசித்தங்கைகூப்பத்
தங்கமணிச்சிலம்படியேன்சென்னிசூட்டுஞ்
சமரபுரிநாயகரோயாடீலருசல். (கூ)

இந்திரன்வேத்திரங்கொடுகட்டியங்கள்கூற
விரவிசசியிருபாலுங்கவரிவீசச்
சுந்தரமாமதனுருக்கொண்டடைப்பையேந்தத்
துணைவுடனேழ்திசையவருழியங்கள்செய்யக்
கந்திருவர்தும்புருநாரதருமியாழின்
கனவிசையுமிடற்றிசையுங்கலந்துபாடச்
சந்தமுறுபுழுகுமணமெங்கும்வீசச்
சமரபுரிநாயகரோயாடீலருசல். (சு)

நவமேவுபூதகணநாதராட
நாடரியதேவர்கள்பூமாரிவீசச்
சிவமேவுமுனிவரர்பல்லாண்டுகூறத்
திகழூரகர்மாணிக்கமாரிதூவப்
பவவேலைமூழ்காதவடியர்நாடிப்
பரிந்துபரமானந்தக்கடலின்மூழ்கத்
தவமேவுமந்தணர்கள்வேதமோதச்
சமரபுரிநாயகரோயாடீலருசல். (எ)

இமயமலை தனிற்பிறந்தநற்றாய்வாழ்த்த
வெழிற்சடையிற்குடியிருந்தபெருந்தாய்வாழ்த்தக்
கமலமலர்மாமியுளங்களித்துவாழ்த்தக்
கலைவாணித்தங்கைபுயம்புகழ்ந்துவாழ்த்த
வமரர்புகழ்சசிமுதலாமரம்பைமாத
ராலத்தியெடுத்தேத்தவருகினின்று
சமைவுறுநற்றேவிமாரிருவர்போற்றச்
சமரபுரிநாயகரோயாடீரூசல் (சா)

அருணகிரிநாதன்மகிழ்ந்தோதுபாட
லருந்தமிழ்நூறெளிந்திடுநக்கீரன்பாட
லிருணையமெய்யன்பர்குழாமிசைந்துபாட
வின்னியங்களைவகையின்சும்மையார்ப்பக்
கருணைபெறுமரசர்வணிகேசர்மேலாங்
காராளர்முதலெவருஞ்சேவைசெய்யத்
தருணவளமாறுதபெருமைமேவுஞ்
சமரபுரிநாயகரோயாடீரூசல். (எ)

மகளிரினமயிலினம்போனடனமாட
வண்டினங்களவர்குழன்மாலையினின்றூடப்
புகாறுமெய்யன்பரின்பநடனமாடப்
பொன்னுலகோர்மண்ணுலகோர் புகழ்கொண்டாட
விகலுறுபொய்யவுணருளநனிதிண்டாட
விலைவேலின்வலியலகைபாடியாடத்
தகைமைசெறியளகைநிகர்வளமைமேவுஞ்
சமரபுரிநாயகரோயாடீரூசல். (அ)

கோழியெழுதியவிருதும்வேலுந்தோகைக்
குரகதமுமுடையவரோயாடீரூச
லாழியனற்சினச்சூரன்சேனையெல்லா
மொருங்கறுத்தசேவகரோயாடீரூச
லாழியலைத்துயரமெல்லாமகற்றியென்னை
யாண்டுகொண்டதேசிகரோயாடீரூச
லூழியளவுகொண்டோன்மருகரோ
சமரபுரிநாயகரோயாடீரூசல். (௯)

பொதியமுனிகுருபரரோயாடீரூசல்
புவிவாழவருள்பவரோயாடீரூசன்
முதியதமிழுரைத்தவரோயாடீரூசன்
முத்தியெனக்களித்தவரோயாடீரூச
லதிகவடிவழகினரோயாடீரூச
லகிலமனைத்துங்காப்பவரோயாடீரூச
றதையுமலர்த்தாரினரோயாடீரூசல்
சமரபுரிநாயகரோயாடீரூசல். (க0)

ஊசல் முற்றியது.

உ

## வேலுமயிலுந்துணை.

---

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

### விருத்தக்கலித்துறை.

---

வடமலைவில்லானுதவியவொற்றைமருப்பாளன்
றிடமுறுதுணையேயெனதுயிர்நிறையுஞ்செவ்வேளே
யிடமுறுநின்பூரணசுகமடைகுவதென்றடியேன்
றடமயிலேறுஞ்சேவகசமரப்பதியானே. (௧)

உமையமைதனமாரமுதக்கடலுண்டுயர்சோதிக்
கமைவுறுபதிகப்பெருமழைபொழியுமருள்வானே
யிமையளவும்மறவாதுனைநாடுவதென்றடியேன்
சமரமயூரப்பரியாய்சமரப்பதியானே (௨)

அண்டர்மணிக்குழுநின்றொளிர்கடகத்தணிபூண்ட
திண்டிறல்வாகுவிராறுளமோனச்செவ்வேளே
மண்டிடுமன்பினர்போலடியேனைமதித்தாளாய்
தண்டைகொள்பாதசரோருகசமரப்பதியானே. (௩)

அறிவொளியேயறிவோரமுதேபுவியாதியெலாம்
பிறிவருபூரணமேசுரரோதுபெரும்பொருளே
பொறிவழிசெலுமென்பிழைகுறியாதுபொறுத்தாளாய்
நறையுயிர்வாழ்தரநிலவியசமரப்பதியானே. (௪)

வேடர்குலச்சிறுமானணைவுற்றவிறற்புயனே
யாடரவப்பணியத்தனளித்தருளற்புதனே

னூடனைத்தமியேனைவிடுத்திடன்முத்திதருந்
தாடலைவைத்தெனையாளுதிசமரப்பதியானே. (௫)

நல்லாரல்லார்செய்தொழில்செய்யுநாயடியே
னெல்லாம்வல்லார்பணிநின்பதமலரொன்றடைவேன்
றெல்லாரணமுதலெல்லாமோதுசுகாதீதா
சல்லாபவினோதத்தாய்சமரப்பதியானே. (௬)

இலகியநற்புக்கடவுட்பிடிசேரெழின்மார்பா
விலகொளிமொய்த்துனதருளெனகத்துவெளிப்படுமே
நிலவியகுக்கிடவிருதுபடைத்தநெடும்புகழோய்
சலசமலர்ப்பதமுருகாசமரப்பதியானே. (௭)

உனலருமன்பினர்நினையும்படிவமதுடையோனே
நினைவுகடந்தவரறிவெழுசுகமாய்நிறைவோனே
யெனையுமொரன்பினனெனவுந்திருவுளமெண்ணுதியோ
தனபதியளகையினிலவியசமரப்பதியானே. (௮)

வானவர்முனிவரர்பாதலருலகர்வணங்கியசாம்
பூனதநூபுரவோசைமுழங்குறுபொற்பாதா
ஞானபராவமுதுண்குவதென்றினிநாயடியேன்
னூனவர்நூறிடவேல்விடுசமரப்பதியானே. (௯)

உலகுயர்பரமுயர்சிவமிவையாவையுமொன்றாக
நிலவியசொருபமதலதிலையென்றுநிகழ்த்தியவா
விலகியவதனிடையசைவறவுறைகுவதென்றடியேன்
றலமகிழ்தருபுகழ்பெருகியசமரப்பதியானே. (௧0)

விருத்தக்கலித்துறை முற்றியது.

உ

வேலுமயிலுந்துணை.

---

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

### அஷ்டகம்.

---

திருவும்வெள்ளை முளரியினிலுறை தருதேனுமாதவஞானமு
மருவவிழிவழிகருணைபொழிதருமாகர்சேவிதமேகமே, யுருவு
மருவமுமொளியுமிருளுமிலொன்றதாம்பொருளென்றுநீ, த
ருதியெனதுளநிறையவளமுளசமரமாநகர்வேலனே. (க)

மதியுமரவமுநதியுமிதழியும்வைத்தசெஞ்சடையத்தனு, ர
திகதயவுடனொருசொன்மொழியென வருள்செய்பரகுரு தே
சிகா, விதியுமறிவருபரமசுகமதை நமேவவினியெனையாளுவாய்
தகிதிதிமியெனநடனமயில்வருசமரமாநகர்வேலனே. (உ)

அகிலமுறுசரவசரமொடுபுறமகமுநடுமுடிவாதியுந்; இகமு
மொருசுக சொருபமாகிய தேவனேயரு ளுதனே, ககனபதி
தொழுமுனதுபதமலர்களடியனேன்முடிசூட்டுவாய், நகை
மைசெறிமறையவர்கள்புகழ்தருசமரமாநகர்வேலனே. (௩)

அறிவொடறிபவனறியவருபொரு ளுடையவொருபொருளா
பிறிவுசிறிதுமின்மவுனமாகியபேசருஞ்சுகமானவா [இயே
நெறியொருநனதருளுநதி பெறவெனை நினைதிருவுளமதனி
நதுகனரவணிபரமனுதவியசமரமாநகர்வேலனே. [லே

கனகவடவரையருவிசொரிமுறைகரடகுஞ்சரமுகவனுர்
மனமும்விழிகளுமலரவழகொளிர் வாகனேதோகைபாகனே
யினையிகருறுமுனதுதிருவடியெனதுமுடியுறநினைகுவாய்
சனகன்மகள்பதிமருகனுகியசமரமாநகர்வேலனே. (௫)

இமயகிரிதவவுதயமயின்முலையினருட்சுவைதவாரியுண்
டமைவுதருதிரிநயனவரைமிசையணி செய்கவிபொழிமேகமே
சிமயவரைதொறுமாடுநின்பதசேவைதந்தெனையாளுவாய்
சமரமயின்மிசையுதயசூரியசமரமாநகர்வேலனே. (௬)

குறவர்மடமகள்களபபுளகிதகுடமுலைச்சுவடணுகிய
நறவுகமழ்தருதெரியன்மார்பகநாயகாகருணாலயா
வுறவுமெனதுயரறிவும்வளமையுமுனதுபரிபுரபாதமே
தறையினுயிர்வகைதழையநிலவியசமரமாநகர்வேலனே (௭)

தெய்வசிந்துரநயனவிணைகுடிசேருமேருறைசெம்புயா
டெய்வழங்குகண்ணுளனேநவவீரர்சேவிததாளனே
நெய்வழங்கயின்மன்னவென்றுளநின்றுநன்றருள்பாலியாய்
சைவநெறியினருய்யமனமகிழ்சமரமாநகர்வேலனே. (௮)

அஷ்டகமுற்றிற்று.

உ

வேலுமயிலுந்துணை.

---

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

### பெருங்கழிநெடில்விருத்தம்.

---*---

சுருதியின்முடிவுதெளிதருபரமசுகமுறக்கலசமாமுனிக்குத்
துகளறுமரியபொருள்பகர்குரவ துதிபெறுமுவமையிலழக
கருதருமடியர்பவவலை துணிசெய்காரணபூரணவெனவுன்
கழலிணையடியேன்மனதினினினைந்துகசிந்துநெக்குருகுநா
[ளுளதோ
செருவயினசுரர்குலமணியணையதிறலுடையொருமகசூரன்
றிகழுரமுருவவலையயில்விடுத்தசேவகபாவகவதீத
தருமணியிகலிபருள்கரகமலதனிநெடுமயூரவாகனனே
சததளகமலமருவியவயல்சூழ்சமரமாநகருறைகுகனே (க)

முரணுறுகொடியபவமெனுமுததிமுழுகலுமெழுதலுமாகி
முதிர்கரையறியாதிடைதடுமாறிமுடலைகொள்விடயமென்
[றுரைசெ
யுரமருமகரமிடைமிடையடரவுய்வகையொருதிசையின்றி
யுழலுமென்றனக்குன்கழலிணையம்பியுவந்தளித்தாளுநாளு
[ளதோ
விரவியகளபம்ருகமதபடிரவிரைகமழ்புயாசலவீர
விரிகதிரிலகுமரகதமயிலின்மிசைவருமொருபெருங்குமர
சரவணவிசாககுக்குடத்துவசசண்முகசச்சிதானந்த
சததளகமலமருவியவயல்சூழ்சமரமாநகருறைகுகனே. உ

விலகியகலைவிழிமடவார்தமென் முலைக்குவட்டிடையிழிந்து
மிகுமயலாசைவெம்புலிவாய்மெய்மறந்துனதருணினையாப்

புலமிலியிவனென்றெனையிகழாதுன் புனிதசெஞ்சரோருகமி [ணைந்த
பொற்பினிற்றிகழுமற்புதபாதம்பொருந்திடத்திருந்தருள் [புரியாய்
பலகலைமுழுதுமறிதருபுலவபரகதிநெறிதருகுரவ
பதகரைமுடுகியடுமொருவீரபணிகரவொணியடைகிருப
தலமதிலிரவிவரவொருதொனிசெய் தழைசிறைச்சேவலம்வி
ருத, சததளகமலமருவியவயல்சூழ்சமரமாநகருறைகுகனே.

அழலுறுமெழுகினரிவையர்மயலினனுதினமகநெகவழியு
மசடனைமதியில்கசடனையறிவிலாதனைமாதவமிலனை
விழலனையதிகவிரகனைமதுரமிலதொருவசனனைமுனிவன்
விறலனையுனதுகழலிணைகுறுகும்விதமளித்தாளுநாளுளதோ
புழைபெறுபனையிற்காமலைப்பிடரிற் பொங்குசெங்கதிரொரு
கோடி, பொற்பினிற்றிகழ்வதொப்பெனச் சிறந்துபொன் [னுலகுலவியபுனித
தழுவளைபெரியகற்பகாடவியின்றண்மலர்மாலிகாபரண
சததளகமலமருவியவயல்சூழ்சமரமாநகருறைகுகனே. (௬)

உததிகொள்குமிழியுடுநிரையுயிர்களொலிகெழுதிரைமலிபுளி
னத், துறுமணலளவையளவிடுமொருவனுளனெனின்மலை [துறுபிறவி
விதவையையறியுமவைகளிலடியேன் மெலிவுறுமெலிவைநீயறி
விகிர்தநினதுமலரடிபுரவிவெந்துயரகற்றிடநினையாய் [வாய்
நதிபெறுசடிலமணிமுடியொருவனைகைபெறவிருசெவிகுளிர
நற்பொருளுரைத்தவற்புதக்குரவநாதபூதங்களின்றலைவ
சதியுடனடனமிடுமயிலுரவசதுரமென்மதுரவாசகனே
சததளகமலமருவியவயல்சூழ்சமரமாநகருறைகுகனே. (௭)

சிகரியினுதயபரிதியின்மணிசுடிசமுறுமகுடமோராறுந்
திரளுடுபதியின்முகங்களோராறுந்திருவிழிமலர்களீராறுங்
ககனமூடுருவுகனகமால்வரையிற் கதித்தெழுபுயங்களீராறுங்
கடிகமழுபயபதங்களுமெனது கருத்திலுற்றிருக்குநாளுள
[தோ
ஙிகராறுமுரகன்முடிநெறநெறெனநிகழ்வடவரைகிடுகிடென
நிலவியவுலகையொருநொடியதனினிலைபெறவுலவுசீரடியாய்
தகைபெறுகுறவர்மடவரலியானை தங்கருண்மடவரல்கணவ
சததளகமலமருவியவயல்சூழ்சமரமாநகருறைகுகனே. ௯

சகடறுககனமகபதியுலகிற்கடிதருமருமலர்க்கூந்தற்
கடவுளர்மகளிரிருபுடைகவரிகாலசைத்திரட்டமாமுனிவர்
திசைதொறுமமரர்மறைமொழியாசிசெப்பிடவொப்பிலாதுல
வுஞ், சேவகமினது பதாம்புயத்தெனதுசிந்தையைச்செலு
[த்துநாளுளதோ
கெசமுகனுடலமிருதுணிபடுத்தகேழயிற்படைவலனேந்துங்
கேசரிதெய்வக்கம்மியனியற்றுங்கிங்கிணிச் சரணவானந்த
தசமுகன்மடியவொருகணைதொடுத்தசதுரனன்மருகனேமு
ருகா, சததளகமலமருவியவயல்சூழ்சமரமாநகருறைகுகனே.

அவகதிபுகுதுநினைவுடனியங்கியடர்வுறுவிடயமென்கடுவை
யயின்றயின்றனந்தநாளெலாங்கழித்தவறிவிலுன்மத்தனே
[ன்றன்னைச்
சிவகதிக்குரியனெனத்தெளிவித்துத் திரிமலமயக்கவேர்களைந்
து, திகழுறுமழல்சேரிரும்புநீரொன்னத்திருவடிச்சேர்த்து
[நாளுளதோ

கலைவாம்புரவியேழுறப்பூண்டகடிரதக்கடவுளுக்குடைய
கதிரொளைத்தோன்றுமயிலுடைக்குமரகந்தநந்தாமணிவிளக்
கே, தவநிதிபெருகுஞ்சடிலவானந்தத்தண்கடலுதித்தவாரமு
தே, சததளகமலமருவியவயல்சூழ்சமரமாநகருறைகுகனே.

துகளறுமூலகமலினிசிபருகுந்துரிசறுபரிதிகோடிகளிற்
சுடர்விடுநினதுதிருவுருவழகுந் துலங்கியமுகங்களோராறும்
பகருமணிகள்சுடர்விடுகடகப்பருப்பதபுயங்களீராறும்
பரிபுரகமலபாதமுஞ்சிறியேன் பரிவொடுங்காணுநாளுளதோ
செககணசெகணசெககணசெகண செஞ்சினதிகுதகுதிசென
ச், செறிமுரசுடுக்கைமத்தளமலகைதிசையொலிசென்றிட
[முழக்கச்
சகதலத்தசுரர்மணிமுடியுருளத்தடக்கைவேல்விடுத்தசேவக
னே, சததளகமலமருவியவயல்சூழ்சமரமாநகருறைகுகனே.

திடமுறுககனமகபதியமரர்சித்தர்விஞ்சையரரிபிரமர்
செயசெயவெனவே கற்பகாடவியிற் செழுமலர்பொழிந்து
[நின்றிறைஞ்ச
நடமிடுகுழகனகமகிழ்ந்துதவுநா தவென்றிடைவிடாதுன்னு
நன்மனமளித்துப்புன்மனம்போக்கி நாயினேன்றன்னையா
[ண்டருளாய்
கடதடவிகடகுஞ்சராநனத்துக்கடவுளுக்கிளையநற்களிறே
கதிதருதருவேநிதிதருமணியே காமனிற்கட்டழகினனே
தடமலைநிகர்த்த வரிமுகத்தசுரன்றனதுரமுருவவேல்விடுத்
[தோய்
சததளகமலமருவியவயல்சூழ்சமரமாநகருறைகுகனே. ௧௦

பெருங்கழிநெடில்விருத்தம் முற்றிற்று.

வேலுமயிலுந்துணை.

---

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

### குறுங்கழிநெடில்விருத்தம்.

---

அறிவுக்களிறேருதவித்துணையாயகமெச்சியமுருகா
மறிமிக்கொளிசூழ்சுசிகைக்கொளுவோன் மகிழத்தவழ்புதல்
வெறிபற்றியதாரவவெற்கருள்சேர்விமலப்பதமருளாய் [வா
தறியட்டெழுமாதவளக்களிறுய்சமரப்பதியானே. (க)

இமயப்பிடிபாலுதவக்கனிவாயிடைவைத்துமிழ்சிறுவா
திமிரத்திரளாமசுரக்கொடியார்சிதையத்தொடுமயிலாய்
நிமலச்சுகபாரணமெற்கினிநீநிகழ்வுற்றினிதருளாய்
சமரச்சிறைமாமயுரப்பதியாய்சமரப்பதியானே. (உ)

கடவுட்பிடிகானவர்நற்கொடிசூழ்கனகக்கிரியனவா
மடமைச்சிறியேனிடனாக்களைவான்வனசப்பரிபுரதா
ளிடைவைத்தினியாணடனச்சிறைமாமயிலுக்கெழினிருபா
தடவெற்பழகாதணிகைப்பதியாய்சமரப்பதியானே. (ங)

நிகழ்குக்கிடநீள்விருதுப்பரமாநிமலக்குலமுருகா
புகல்பற்றிடநீயலதெற்குளதோபுகழ்மிக்குளகுகவேள்
ககனச்சுரர்மாமுனிவர்க்குழுமாநிலர்கைக்கணிசரணு
தகரப்பரியாயயில்வேற்படையாய்சமரப்பதியானே. (ச)

[illegible]திற்கினிதாநினைவிற்படிநான்மயலுற்றிடருறவோ
[illegible]தற்புகதாள்பணியப்பெறவேயுனைசிற்பனைகுமரா

கனகப்பெருமால்வரைவிற்பரனூர்கருதச்செவிபுகல்வோய்
சனகாச்சுகவீடுறவைத்தருள்வோய்சமரப்பதியானே. (௫)
மும்மலக்குழுவோடியபொய்க்கடமேமுடுகித்தொடர்வுறவே
சுமைமிக்குறுவோனிடருற்றனன்மாசுகம்வைத்தெனையினி
கமலப்பதனேகனகப்புயனேகருணைத்திருமுகனே [தாள்
சமரக்கணநாகர்களுக்கிறைவாசமரப்பதியானே. (௬)
களவிற்களவானவன்மெச்சுறநீள்கவியைப்பொழிமுகிலே
குளகுத்தகர்மேல்வருசிற்சொருபாகுமரப்பெயருடையா
யிளகத்தயவோர்சிறிதுற்றறியாவெனையுட்கருதுதியோ
தளவக்குழலார்நடைகற்றனமார்சமரப்பதியானே. (௭)
நிலவுச்சடையானுதவுத்தமனேநிமலிக்கெழின்மகனே
யுலகுக்கரசேயமரர்க்கரசேயுயிருக்குயிரெனவே
பலசொற்புனைபாவதனிற்புகழேபகர்தற்கினிதருளாய்
சலசத்திருமானிலகிக்களிகூர்சமரப்பதியானே. (௮)
குவளைக்கணினூர்குயநச்சியமாகொடுமைச்சிறியவனே
னவலக்கடையேனுனதற்புததாளடையக்கருதுதியோ
நவசித்திரகேழொளிசுற்றியமேனடனக்களிமயிலோய்
தவளக்கிரியாய்பழனிக்கிரியாய்சமரப்பதியானே. (௯)
பொருநைக்குலநீள்வரையிற்றவமேபுரிமெய்க்குறுமுனிபா
லிருளுக்கொருசூரியனிற்குருவாயெதிருற்றருள்புரிவோய்
மருளூற்பவவாரிதியிற்புகுதாவகையெற்குரைபுகலாய்
தருணிச்சிறுவாவருணக்குமராசமரப்பதியானே. (௧0)

குறுங்கழிநெடில்விருத்தம் முற்றிற்று.

உ

வேலுமயிலுந்துணை.

---

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

### குறுங்கழிநெடில்விருத்தம்.

---*---

பான்மதிவேணியர்மாறெழுநாயகர்பரிவுடனருள்யானை
தான்வாவாவெனவங்கைவிரித்தழைசகலகலைப்பிள்ளாய்
தேன்மலிசுவையெனவெங்குறிநிறைந்துளசிற்சுகவாரியிலே
யான்முழுகுறுமொருகாலமுமுளதுகொலருள்போரூரானே.

மூபுரமெரிகொளவோர்நகைபுரிதருமுக்கணன்மடிமீதே
நூபுரமொலிதரவாடியதுணையடிநோன்மைதருஞ்சிறுவா
மாபுரமூவகைமேலெழுமொளியிடைமன்னுவதென்றடியே
னூர்புரிநூலொளிர்மார்பகவேலவவருள்போரூரானே. (௨)

நூல்வகிரனவிடைமாதுமை மகிழ்வுறநுவலருமழலைமொழி
பால்வழிஞானநனிபேசியமூவிருபவளத்திருவாயா [ப்
மால்வழிவிலகிநன்னூல்வழிசெலுமுளமருவுவலோசிறியே
னல்வயினிலைதுயில்வோன்மகிழ் மருமகவருள்போரூரானே.

தெய்வப்பிடியுந்திருவுறைமானுந்தினமுங்களிகூர
மெய்வைத்திடுபேரருணிழன் மொய்த்தொளிர்மேதருகற்பக
யுய்வற்றிடுகதிபெற்றுனடிக்கணுவப்புறவென்றடியே [மே
னைவர்க்குஞ்சற்காரணன்மருகாவருள்போரூரானே. (௪)

வேலுஞ்சேவலும்விரிசிறைமயிலும்வெற்றிசெய்தகரோறு
நாலுப்பறைபுகழுக்கைக்கொண்டருளையகதாயவனே

யேலுங்காமக்கடலின்கணாகண்டேறுவதென்றடியே
னுலுங்கோலுந்துயில்வோன்மருகாவருள்போரூரானே. (௫)

மலயமுனிக்ககமதனின்மறைப்பொருள்வழுவறவைத்தபி
ரான், கலைகடமக்குளபொருள்கள் விரித்துணாகசடறுமெய்ப்
புலவா, நிலையில்பவக்கடல்சுவறவெனக்கொருநிலைமையளித்
திகொலோ, வலையில்சுதைக்கடலெனநிறைசிறப்பரவருள்போ
ரூரானே. (௬)

பாவருதொடையணிவோருளநாடியபாரிடைநீடுறவே
வோவறவுதவுறுமாறிருகரமுளவுத்தமசிற்சொருபா
நாவுடன்மனமிவையாலுனைவந்தனைநாயடியேன்செயவே
யாவருவோன்மகனாகியவேலவவருள்போரூரானே. (௭)

மூதொளிநீடியகேயூரப்பணிமுந்நான்குறுதோளா
சீதளவான்மதிபோலுறுமாறுசிறந்தமுகத்தினனே [சோபா
பாதகனென்மனனின்னடிமன்னுறுபான்மையினண்ணுறு
வாதரவேயெனதாருயிர்நாயகவருள்போரூரானே. (௮)

பணிபவருளமுறுமிருளறவொளிதருபரவுதியுளரவியே
தணிமலைமுதலியமலைதொறுநிலவியசிவபதியணிபதனே
கனிதமிழ்பிழைசெய்தகொடியனை நிலைபெறுகதிபெறநினைதி
[கொலோ
வணிதிகழ்திருவுரவயிலவமயிலவவருள்போரூரானே. (௯)

மின்றிகழும்புயலேமறைமீதுவிளங்குருசெம்பொருளே
யென்றுனையேயடியாரகஞ்சமிருந்தபெருங்கிதனே
நன்குறுபேரறிவேயருளேசுகமேயெனநாயடியே
னன்பொடுநின்பதநாமமனாடுறவருள்போரூரானே. (௧௦)

குறுங்கழிநெடில்விருத்தம் முற்றியது.

வேலுமயிலுந் துணை.

---

# திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

## குறுங்கழிநெடிலடிவிருத்தம்.

---

பகலுடனிரவுமிடையினுமுனதுபாதப்பேரொளியிலடைப் புகுந்து, சகலகேவலத்தின்றுக்கமடியேன்றகுசுகத்திருக்கு நாளுளதோ, ககனர்தமரசேகதிதருதருவேகாரணக்கருணை வாரிதியே, மிகுகுணக்குன்றேயதிவளப்போரூர்வீற்றிவாழாறு மாமுகனே. (க)

உனதுதாயுலகசராசரமெலவயுமொருங்குடன்பூத்தவளுந் தை, கனபரிபூரணசுகந்தனின்றமையன்காரியமுதல்வனின் மாமன், வனசனுதியர்கள்பணிபதனிவர்கள்வளனெலாமுனக் குரித்தினதனால், வினவுசெல்வத்துட்செல்வனீபோரூர்வீற்றிவா ழாறுமாமுகனே. (உ)

அறுவகைத்தாயர்குடமுலை சுரப்பவம்பிகைதிருவுளங்களி ப்ப, மறுவறுகங்கைத்தாய்நனிவாழ்த்திவடிவெலாங்குளிர்ந்து பூரிப்ப, நறைநமழ்வனசமாமிசையன் களிப்பாடந்தவொதிர்வரு குருந்தே, விறலுறுவினைவந்தடைந்தனன்போரூர்வீற்றிவாழா றுமாமுகனே. (ங)

மண்ணவர்பணிய விம்மையிலின்பும் வானவர்பணிந்திடமறுமை, நண்ணுறுமின்புமுனிவரரடியர்நனிதொழப்பரகதியின்பும், பண்ணுறுமுனதுபாதமீதருமிப்பதந்தொழுவாரிடர்கடந்தோர், விண்ணகர்வளம்போனண்ணுறுபோரூர்வீறிவாழாறுமாமுகனே. (௪)

உரையுணர்விறந்தகரையறுமின்பமோரணுக்கடிகைமிக்குயர்ந்த, வருளொடுங்காட்டிமறைத்தனைநாயேற்கச்சுகமென்றளித்தருள்வாய், சுரர்களுக்கிடர்செய்சூர்ப்பகைகடிந்துசுடர்விடுசோதிவேற்கரசே, விரகனேகுகனே மெய்யனேபோரூர்வீறிவாழாறுமாமுகனே. (௫)

ஓதியுமுணர்ந்தும் பிறர்தமக்குரைத்து முளமுதற்றுணடங்காத, பேதையிற்பேதையாரிலொன்றபெரியவர்சொற்கிலக்கானேன், கோதறுமாறுகொடுமுடிப்பவளக்குன்றமொத்திலகுகட்டழகா, வேதகோடங்கண்முழங்கிய போரூர்வீறிவாழாறுமாமுகனே. (௬)

அரணிலைக்கடைவோன்கனலெழு சமயத்தங்கையேமாறிவிட்டாங்குப், புரணபேரின்பமெழுதருவாயிற்பொருந்துமின்பதமறந்துழைத்தேன், மரணவுற்பவத்தின்மறுகுறுதெனைநின்மலர்ப்பதஞ்சேர்த்திடநினையாய், விரிகதிரெறிக்கும்வேலனே போரூர்வீறிவாழாறுமாமுகனே. (௭)

கடைபடுமுலகப்பொய்யினை மெய்யாக்கருதினேன்கானனீரென்று, மடமையாற்கருதுமவனெனவினியுன்மலர்ப்பதச்ச

கத்தைதயென்றடைவேன், றடவரைக்குறவர்குலத்தெழுவல்லிசாதகக்கொடிபடர்தருவே, மிடலெழுதோகைப் பாகனேபோரூர்வீறிவாழாறுமாமுகனே. (அ)

எங்குமென்சொரூபசச்சிதானந்த விலகொளியிருந்திடுமத ஞட்,டங்குபல்பொருள்கள்கானலிற்சலம்போற்றுமுறும்வேறிலையென்றே, பொங்கருட்குருவாய்வந்துநீயளித்தும்புலையனேன்மயங்குறுகின்றேன், வெங்கதிர்விலக்குந் தண்டலைப்போரூர்வீறிவாழாறுமாமுகனே. (கூ)

மலவிருடிரக்குஞானசூரியனுய் வந்துநின்மகிமையையறியாப், புலையரிற்கடையேனெனினுமென்பிழையைப்பொறுப்பதுன்பொன்னருட்கியல்பாங், கலைமுகம்புகழுங் களிற்றுறுதுணைவாகடவுளியானைக்குநற்கணவா, விலகிவில்லுமிழும்வேலவாபோரூர்வீறிவாழாறுமாமுகனே. (க0)

குறுங்கழிநெடில்விருத்தம் முற்றியது.

---

உ

## வேலுமயிலுந்துணை.

---

## திருப்போரூர்ச் சந்நிதிமுறை.

### குறுங்கழிநெடில்விருத்தம்.

---

அருட்குழைதழைத்தைங்கரமலர்மலர்ந்தோ
ராடகப்பொருப்பிடையுரிஞ்சித்
தெருட்டருகோட்டுக்கற்பகத்திளவ
லாகியமாதவத்தரசே
மருட்டிளைப்பிறவிவாரிதிழூழ்கா
வகையெனைக்காத்தளித்தருளா
யுருட்டிகழிரதத்தெருப்புனைபோரூ
ருத்தமாசத்திவேலவனே. (க)

நவமணிகுயின்றபருப்பதமனைய
நகைமயிற்பரியிவர்ந்துளத்துக்
கவலைகடவிர்த்திங்கடியவாக்காக்குங்
கடவுளேகடவுளர்கோவே
சிவமெனவெவையுமருட்குருவாகிச்
செப்பியவாறெனக்குளத்து
முவமையிலதனைக்காட்டுதிபோரூ
ருத்தமாசத்திவேலவனே. (உ)

நல்லவரெனினீ புரியருட்குள்ள
　　　னைந்துநெக்குருகுவரன்பாய்ப்
புல்லியேனதனின்மகிமையையறியாப்
　　　புலையனேனுய்யுநாளுளதோ
வெல்லுமும்மதத்துவாரணமுரித்து
　　　வீட்டியமுக்கணன்புதல்வா
வொல்லைவாந்தகரப்பரியனேபோரூ
　　　ருத்தமாசத்திவேலவனே. (௩)

காமவேள்கணையாலுளங்கலங்காதுன்
　　　கனைகழற்கமலத்தாளிருந்த
சேமவானந்தவாரிதிபடிந்து
　　　சிறியனேன்வாழுநாளுளதோ
பூமணம்வீசுங்கூந்தலங்கவுரி
　　　பொருப்பனதனத்தருமுதூண்டோ
யோமெனும்பதத்தினருத்தமேபோரூ
　　　ருத்தமாசத்திவேலவனே. (௪)

நினதருட்பாதமிணைதொறுமடியே
　　　னிணைப்பொடுமாறுகொண்டெழுந்த
மனவழக்கதனால்வாடினேனதனை
　　　மாற்றிநின்னருள்சுரந்தளிப்பாய்
கனைகடல்சூழுறக்குலவளையதிரக்
　　　கனவொலிகூவுசேவலனே
யுனலருந்தவத்தோர்பரவியபோரூ
　　　ருத்தமாசத்திவேலவனே. (௫)

வாக்கொடுமனமுங்காயமார்தொழிலு
மன்னுறுமின்னருட்காக்குந்
தேக்குறுமன்பர்போலலாச்சிறியேன்
செய்பிழைபொறுத்தினிதளிப்பா
யாக்கமெய்ஞ்ஞானங்குறுமுனிக்குதவு
மருட்குரவாசிவயோக
வூக்கமேதழைத்தோர்போற்றியபோரு
ருத்தமாசத்திவேலவனே. (௬)

மகவினைத்தாதையினிமைகள்காட்டி
மடித்தலத்திருத்துதல்போல
வகமதிலின்புகாட்டிநின்றருட்கீ
ழடியனையசைவறவிருத்தாய்
ககனவானோர்களொனும்பயிர்தழைப்பக்
கடியசூர்க்கிளைகளைந்தருள்வோ
யுகலருவளங்கடிகழ்திருப்போரு
ருத்தமாசத்திவேலவனே. (௭)

பித்தனேனெனினும்பேயனேனெனினும்
பிழைபுரிபாவியேனெனினு
மத்தனேயெனைநீயளிக்குதல்கடனே
யறனெலாமோருருக்கொண்டோய்
கொத்தலர்நீபத்தொடையணிமார்பா
குமரநாயகவெனக்குறுதா
யொத்தவாமுத்தர்பற்றியபோரு
ருத்தமாசத்திவேலவனே. (௮)

கன்னியரிருவரிருமருங்குறநற்
கனகமால்வரையிருந்தனநின்
சன்னிதிகண்டோர்பவத்துயர்கடந்து
தருசுகவாரிதிபடிவார்
நின்னடியவனென்றுலகவர்புகல
நிகழ்த்தினையினியெனைவிடுக்கே
லுன்னதசிகரிமன்னியபோரு
ருத்தமாசத்திவேலவனே. (௯)

பயனிலமொழிந்தும்பலதொழில்புரிந்தும்
பரவையிற்றிரையெனநினைந்துங்
கயவரிற்பொழுதுபோக்குறுதுனது
கமலத்தாளிணையவேதருவா
யியலிசையருணகிரிப்பெயர்நாத
னியம்புபாமாலைசேர்புயத்தா
யுயுநெறியடியேற்குதவியபோரு
ருத்தமாசத்திவேலவனே. (க0)

குறுங்கழிநெடில்விருத்தம் முற்றிற்று.

---

வேலுமயிலுந்துணை.

---

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

### குறுங்கழிநெடில்விருத்தம்.

---

கமலநான்முகவனேதியவேதக்கனமுகவுரைதினம்புகழும், விமலமெய்ஞ்ஞானக்களிற்றினுக் கிளையவீறுபன்னிருபுயத்த ழகா, திமிரவஞ்ஞானக்களிற்றினைத்துணித்தென்சிந்தையிற் புகுந்தருள்புரியாய், [illegible]நீர்த்தடம்பும்வயல்செறிபோரூர்ச்ச ரவணபவப்பொருளே. (க)

இராவொடுபகலுமொழிவுறுசமாதி யியல்பொடுகூடிவீட்டி ருந்து, விராவுபேரின்பவமுதயின்றடியேன்வினைத்துயர்மற க்குநாளுளதோ, வராவணிவேணித்துணர்க்கொடிபடருமருட் கடற்பிறந்தவாரமுதே, தராதலமுழுதும்புகழ்திருப்போரூர் ச்சரவணபவப்பொருளே. (உ)

ஒருபொருளிடத்தும்விழைவொடு வெருளியுமெலாஞ்ச மமதாக்கண்டுன், றிருவடிநிழற்கீழமைசெவறவிருந்துசிறியனே னென்றினைப்பதுவே, னருணைவிசாக்கும்பனிமலைப்பிறந்தவ ங்கொடிதந்தசெங்கனியே, தருவைமாரு[illegible]முருகனேபோரூர்ச் சரவணபவப்பொருளே. (௩)

கலைபுகழ்ந்தோதுங்கற்பெலா நிறைந்தகன்னியரிருவர்பா
ன்மகிழ, நிலைபெறுமயூரப்பரிமிசைத்தோன் றுநிறைபரிபூரண
சுகமே, யிலையுளதென் றுபிரணவமெய்த்தியத்தினெழு சொரூப
த்தெனையிருத்தாய், தலைமைகொடவத்தோர்நிலவியபோரூர்
ச்சரவணபிரணவப்பொருளே (௪)

இருளைவிட்டெனைநீயெடுத்தநாண் முதலாவின் றுகாறுறுபி
றப்பிறப்பி, லுருவொணாக்குன்றே னிங்கினிதலைமையுமுயர்பரி
பூரணத்திருத்தாய், மருடவிர்நிபத்தார்புனைமார்பாவானவர்சே
விதபாதா, தருமலிதவத்தோர்நிலாதிருப்போரூர்ச்சரவணபி
ரணவப்பொருளே. (௫)

மலவழுக்கனைத்துமாறினின் மலமாமனத்தறையிலசைசினம
றந்து, கனபரிபூரணசுகக்கடல்படியுங்காலமுஞ்சிறியனேற்கு
ளதோ, வுனலருபொதியத்துறுகுறுமுனிவனுளமகிழ்ந்திறை
ஞ்சுபொற்சரணா, தனபதியளகைவளனுறுபோரூர்ச்சரவண
பிரணவப்பொருளே. (௬)

யாவருமறியாவறிவெலாமறிவுக் கறிவதாயிருந்தறிவித்து
மேவருட்குருவாய்வந்தறிவளிக்கும்வினையனேனென்றெனிந்நில
னந்தோ, சேவலந்துவசம்பிடித்தசெங்கரனேதிகழ்தருசடா
னனக்களிறே, தாவியநகரப்பரியனேபோரூர்ச் சரவணபிர
ணவப்பொருளே. (௭)

அந்தன்மேல்வித்தைதமகற்குபதேசித்த தம்பினைவருவித்தல்
போலும், பித்தனுக்கொருவன்மருந்தினை யளித்துப்பிறங்கு

ணர்வளிக்குதல்போலு, நித்தமென்மனத்தைத்திருத்தியாண்டளித்தநின்தருளேதெனப்புகல்கேன், றத்தைகள்கொஞ்சுஞ்சோலைசூழ்போரூர்ச்சரவணபிரணவப்பொருளே. (௯)

நெஞ்சகத்துள்ளும்புறனுமாய் நிறைந்தநின்பரிபூரணநினைந்து, வஞ்சகச்சகப்பொய்யனைத்தையுமறந்துவாழுநாளெந்நாளடியேன், செஞ்சடைக்குழகனஞ்செவிக்கமுதார்திகழ்மறைமுடிவினைப்புகன்றோய், தஞ்செனப்பணிவோர்க்கருடரும்போரூர்ச், சரவணபிரணவப்பொருளே. (௰)

கணப்பொழுதெனினுமறக்கிலாதென்றுங்கனபரிபூரணவறிவிற், பிணக்குறுமனமுமவித்தையுங்கடந்துபேதையேன்கலக்குநாளுளதோ, மணத்தசெங்கழுநீர்மாலைதாழ்புயத்துவள்ளலேயுள்ளுவோர்க்கமுதே, தணப்பருங்கருணைதருந்திருப்போரூர்ச்சரவணபிரணவப்பொருளே. (௧௰)

குறுங்கழிநெடிலவிருத்தம் முற்றிற்று.

---

வேலுமயிலுந்துணை.

---

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

### குறுங்கழிநெடில்விருத்தம்.

—*—

இடம்பெறுகலைகளனைத்துநின் றேத்துஞ்செய்யதாள்பூமி
சைபொருந்த, நடந்துவந்தருளாற் குமாரசற்குருவாய்நாயி
னேனிருடெறுசுடரோ, யடர்ந்திடுபிணியாலுனதுமெய்யடியா
னசைவுறுதளித்தருள்புரிவாய், தடங்கரிதிரியுஞ்சந்தனப்பொ
ழில்சூழ்சமரமாபுரியுறைகுகனே. (௧)

பந்தமூடறுத்துப்பாயிருள்சீக்கும்பரிதியினிலகுநின்பதமெ
ன், சிந்தையிற்குடியாவிருத்தியாண்டருளுஞ்சிற்சுகக்கருணை
மாகடலே, முந்துறுபிணியாலுளைந்துனதடியான்முடிவுறுதி
னிதருள்புரியாய், தந்திகடிரியுஞ்சந்தனப் பொழில்சூழ்சமர
மாபுரியுறைகுகனே. (௨)

வடங்கிடந்தொளிரும்வாரணக் கோட்டின்வளர்முலைவள்
ளிநாயகியுன், னிடம்பெறவயங்குபுயங்கள்பன்னிரண்டினில
கவுண்மகிழ்மணிக்குன்றே, விடந்தெறுகருடப்பார்வைபோ
லுனதுமெய்யடியவன்பிணிதவிர்ப்பாய், தடம்புயறுயிலுஞ்ச
ந்தனப்பொழில்சூழ்சமரமாபுரியுறைகுகனே. (௩)

சூர்குலத்திமிரமுழுவதுமிரியச் சுடர்விடுசோதிவேலுயர்த்
த, வீரவம்புயத்தாய்மாரவேளழகும் வெற்றிகொளுத்தமவ
டிவா, சீர்பெறுமுனதுமெய்யடி யவனைத்தெறுபிணியறவுள
த்தடைப்பாய், தார்செறிபொழில்வாய்க்கார்துளிசிதறுஞ்சம
ரமாபுரியுறைகுகனே. (௪)

அனையனூன்முறையேபுரியினுமனைய னருள்சுதன்றனது
ளப்படியே, வினைவுடன்புரியுமஃதுபோலீசன்வினைவழிபுரியி
னிற்போற்றுந், திருவடியவரைத்தீவினைதெருதுதீர்க்கநிற்கே
வருங்கண்டாய், தருமலிபுளினத்திளவலைதவழுஞ்சமரமாபு
ரியுறைகுகனே. (ரு)

ஆலமார்களனுநீலமேனியனுமைங்கரனம்பிகையமரர், சில
மார்முனிவரியாவருங் களிக்கச்சிகிப்பரி நடத்துசேவலனே,
ஞாலமீதுனதுசீரடியவனைநலிதருபிணியறவினையாய், தாலநீ
ள்பாளைகட்குடஞ்சுமக்குஞ்சமராமாபுரியுறைகுகனே. (சா)

வடகலைக்கடலுந் தென்கலைக்கடலும் வருதிரைக்கடலுமு
ண்டிருந்த, திடமுறுமுனிவனிடர்க்கடலகற்றச்சிற்சுகக்கட
லளித்தவனே, யடியவர்துயாமுறினிளங்கன்றுக்காவெனவ
ருவதுன்னருளாங், நடமலர்ப்பிரசஞ்சங்கின்வாயொழுகுஞ்
சமரமாபுரியுறைகுகனே. (எ)

புவனமீரேழும்பூத்திடுமெதுரப் பொற்பிடிநற்றனத்திம்பா,
னவமணமாறுகுமுதவாய்வீசுநன் குறுமொண்சிறுகளிறே, இ

வமுறுகதிர்முன்னிருளெனவுனதுசீரடியவன்பிணிதவிர்ப்பா
ய், தவமுனிவருக்குக் கரிகனியளிக்குஞ் சமரமாபுரியுறைகு
கனே. (௮)

விண்குடியேறச்சூர்நகரோடவிழிசிவந்தன்பரானவர்க்குக்,
கண்குடியிருந்த மணியென வறிவிற் கதியினைக்காட்டுசெம்
பொருளே, யெண்பெறுமடிமைபடைத்தவராள்வதியல்பதா
மிசைப்பதென்னடியேன், றண்சுதைமாடங்கயிலைபோல்விள
ங்குஞ்சமரமாபுரியுறைகுகனே. (௯)

கொடியசூர்த்தானைக்கருங்கடலுடைத்துக்குருதிவெஞ்செ
ங்கடலாக்கு, நெடியவேலுயர்த்தபுயத்திறையுனதுநீடருளே
தெனவுனாக்கே, னடியர்மார்ககண்டர்க்காருயிரளித்தாங்களி
த்தனைநினதடியனுக்குந், தடிபடுமெழிலியகிற்புகைமணக்கு
ஞ்சமரமாபுரியுறைகுகனே. (௧௦)

குறுங்கழிநெடில்விருத்தம் முற்றியது.

---

உ

வேலுமயிலுந்துணை.

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை

## குறுங்கழிநெடில்விருத்தம்.

---*---

பரிதிபோன்ஞானச்சுடரொளிவீசும்
பாழியங்களிற்றினுக்கிளையோய்
சுருதியின்முடிவைச்சிறியனேற்களித்த
சுந்தரமறப்பனேவடியே
னரிதுணர்பொருள்கணினதருளடைந்தோர்க்
கரிதலவென்பதுமறிந்தேன்
கருதியபொருள்கடருந்திருப்போரூர்க்
காங்கெயாதேங்கொளிமணியே. (க)

மகவினுக்கிரங்குமன்னைபோற்கன்றை
மருவிவந்திரங்கியபசுப்போற்
புகலடைந்தவனுக்கிரங்கொருவனைப்போற்
புலையனேற்கிரங்கியாண்டளித்தோ
யிகலுறுசூலப்படையனின்றெடுத்த
வெந்தைநின்னடைக்கலமடியேன்
ககனமூடுருவுஞ்சிகரிப்போரூர்க்
காங்கெயாதேங்கொளிமணியே. (உ)

நதியினதிருபாற்கரைகளிற்றிரிந்து
  நடைதளர்ந்துழன்றிடுபசுப்போன்
மதிமருண்டுழன்றசிறியனையழைத்துன்
  மலர்ப்பதத்திருத்தியாண்டளித்தோ
யதிகநின்கருணைக்கடலினுக்குவமை
  யாதினையெடுத்தினிதுரைக்கேன்
கதிதருமறிஞர்பரவியபோரூர்க்
  காங்கெயாதேங்கொளிமணியே. (௯)

மருளானையளிக்கத்தொடங்கினேனவன்றன்
  மனமொழிமெய்களினிகழுந்
தெருளறுசெயலைநோக்கிடானதுபோற்
  சிறியனையளித்தலுன்கடனே
யிருளறவீசுஞ்சுடர்விடுவடிவேற்
  றிறையவாகுறுமுனிகுரவா
கருடவாகனத்தோன்மருகனேபோரூர்க்
  காங்கெயாதேங்கொளிமணியே. (௰)

வஞ்சனேனெஞ்சின்மாற்றுதற்கரிதா
  மலினவாதனையெலாந்தவிர்த்திங்
குஞ்சிடவடியேனஞ்சலென்றளித்த
  வுனதருண்மறப்பனோசிறியேன்
செஞ்சிறையடர்த்துக்களத்திணைமிர்த்துச்
  சிரமலைத்தொலித்தசேவலனே
கஞ்சனெஞ்சறியாதவன்மகிழ்போரூர்க்
  காங்கெயாதேங்கொளிமணியே. (௰௧)

இரவொடுபகலுமிரவொடுபகல்க
ளின்றியவீட்டினிதிருந்துங்
குரவணிபாசமலமீதெழுந்த
குளிர்நறுவெள்ளமென்றடைவேன்
மரகதவொளியேபருமயிலேறு
மன்னவாவென்னுயிர்த்துணைவா
கரவறுமுளத்தோர்நிலவியபோரூர்க்
காங்கெயாதேங்கொளிமணியே. (௬)

மனநினைவணைத்துமொழிந்துமூடமும்போய்
மன்னுநின்னருளொளிபுகுந்தாங்
கினனிறவயிரக்கிரியெனவசைவற்
றிருக்குநாளெந்நாளடியே
னனைமலர்க்கூந்தற்கவுரிகண்டுவப்ப
நகைமுகமலர்ந்தெதிர்வருவோய்
கனவினஞ்சுரந்துபொழிதிருப்போரூர்க்
காங்கெயாதேங்கொளிமணியே. (௭)

ஆடகவரைமேற்றுருவனைப்போல
வாணவதிமிரநீத்திருந்த
வீடகம்புகுந்தங்கசைவறவிருக்க
வினையனேற்கென்றருள்புரிவா
யேடகக்கூந்தற்கன்னியரிருவர்க்
கிசைந்துளகணவனேகமலக்
காடகமலர்ந்தவாவிசூழ்போரூர்க்
காங்கெயாதேங்கொளிமணியே. (௮)

உயிர்ப்பிணிதவிர்க்குமருந்துவனென்கோ
வுடற்பிணிக்கொருமருந்தென்கோ
மயக்குறுமனத்தினினைவெனும்பனியை
மாற்றியகதிரவனென்கோ
வியப்புறுபுரணசொரூபநின்னருளை
வினையனேனேதெனப்புகல்கேன்
கயந்துரிதுரித்தோன்புதல்வனேபோரூர்க்
காங்கெயாதேங்கொளிமணியே. (௯)

சூரியன்சுருதியனுபவமெனுமூன்
றாலுமென்னகத்தினிலிருந்த
கூரிருள்கடந்தனைதருளதனைக்
குறித்திடலதிசயந்தருமாற்
சூரனதுரமுங்கிரியுமூடுருவிச்
சுடர்விடுசோதிவேல்பிடித்த
காரணாவெங்கும்பூரணாபோரூர்க்
காங்கெயாதேங்கொளிமணியே. (௧௦)

குறுங்கழிநெடில்விருத்தம் முற்றிற்று.

---

# வேளூர்மயிலுங்ருணை.

---

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

### குறுங்கழிநெடில்விருத்தம்.

---

மணிகிடந்திமைக்கும்பஃறலையுரகன்
வளைபடந்திசைதொறுந்தடவ
வணியலகெடுத்துச்சிறைபுடையடித்திங்
காடிடுந்தோகைவாகனனே
கணிதமிலுயிர்கள்வாடிடாதருளாற்
கனமழைகொடுத்தியற்புதயே
குணில்படுமுரசமுழங்கியபோரூர்க்
குமரனேயமரர்நாயகனே. (௧)

அனைகடன்முகடுபுழுங்கிடவெழுந்து
கனவுகிரந்தொளிர்கதிர்போ
னிலைதருகருவிக்குழுவெலாங்கரந்து
னெஞ்சகத்தெழுந்தபேரொளியே
யனையிலுமினியகருணையாலுலகுக்
கம்புயன்மழைகொடுத்தாய்க்குக்
கொளையுறுகைமாறேதுளாபோரூர்க்
குமரனேயமரர்நாயகனே. (௨)

விரிதலைப்புவனம்வெயிலினில்வெதும்பி
வீதருவாயினின்மிகுத்த
கருணையான்மாரிதந்துகாத்தளித்த
கணைதனையச்சிறியனேவறிவே
னருணையங்கிரிநாதன்றமிழ்மணமு
மரியகீரன்றமிழ்மணமுங்
குரவினன்மணமுங்கமழ்தருபோரூர்க்
குமரனேயமரர்நாயகனே. (௩)

வேதநான்முகனும்விண்ணவர்கோனும்
விரிசடைமுனிவருமுனது
பாதபங்கயத்துக்கவர்கள்சீரணிதைப்
பங்கயங்குவிக்கக்கன்களித்தோய்
காதுறுபசியாலுயிர்துவியாமற்
கனமழைதந்துகாத்தளித்தாய்
கோதறுகருணைத்தெய்வநீபோரூர்க்
குமரனேயமரர்நாயகனே. (௪)

வேடுவர்குலத்தைவிளக்கியமயிலும்
விண்ணரசளித்தகோமயிலும்
பீடுறுபுடையில்வாழ்வுறநிவந்த
பெரியநற்பவளமால்வரையே
வாடுறுமுயிர்கடழைத்திடமாரி
வளத்தைநீகொடுத்ததற்புதமே
கோடுறுசந்தச்சாரலம்போரூர்க்
குமரனேயமரர்நாயகனே. (௫)

சன்றெருத்துணிலாவிளவெறிந்தவர்க்குக்
காதன்மீக்கொளவருமருக
வென்றுநன்மாரிதந்துநீயெம்மை
யெழிலுடன்காப்பதுன்கடனே
நன்றுதீதென்றபொருளெலாங்கடந்த
ஞானவீடுதவுசற்குரவா
குன்றுதோறுடலுவந்தவாபோரூர்க்
குமரனேயமரர்நாயகனே. (சா)

முக்கணாயகனுமவன்புடைமயிலு
முறைமுறையெடுத்துமுத்தாடுந்
தக்கநற்குருந்தாயிருந்தநீயவரிற்
றண்ணளியாற்பெரியவனே
மிக்கவாருயிர்வாடுறுந்தருவாயில்
விண்மழைதந்துகாத்தளித்தாய்
கொக்கடுசத்திச்சுவலனேபோரூர்க்
குமரனேயமரர்நாயகனே. (எ)

தங்கலொனுமச்சூர்க்குலம்வீட்டித்
தமனியத்தருவுறைநசிக்கு
மங்கலநாண்முன்கொடுத்துவானவரை
மகிழ்வொடுங்காத்தளித்ததுபோ
லெங்களையின்றும்வான்மழைபொழிவித்
தெழிலுடன்காத்தளித்தனைகாண்
கொங்கலர்சோலைச்சாரலம்போரூர்க்
குமரனேயமரர்நாயகனே. (அ)

பாகடுவெள்ளைக்குஞ்சரப்பிடரிற்
பால்புரைவெள்ளியங்கிரிமேற்
சேகுறுபவளமால்வரையிருந்த
செய்திபோற்சுரர்தொழவிருந்தோய்
வேகவெம்பசியால்வருந்திடாதெம்மை
விண்மழைதந்துகாத்தளித்தாய்
கோகன கப்பூந் தடஞ்செறிபோரூர்க்
குமரனேயமரர்நாயகனே. (க)

மாண்செறியடியார்வேண்டியவரங்கண்
மாறிடாதளித்திடுமுனைப்போற்
காண்கிலேனொருதேமூன்றுலகிடத்துங்
காட்சியாற்கேள்வியாற்றமியேன்
சேண்படுமுகிலான்மழைவருவித்துச்
சிற்றுயிர்காத்தினிதளித்தாய்
கோண்படுசங்கமுழங்குறுபோரூர்க்
குமரனேயமரர்நாயகனே. (க0)

குறுங்கழிநெடில்விருத்தம் முற்றியது.

---

உ

வேலுமயிலுந்துணை.

---

# திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

## குறுங்கழிநெடில்விருத்தம்.

---*---

அருட்கடாறதும்பிக்கவுட்செவிச்சார
லருவிபாய்ந்தெழிற்றருமசலம்
விருப்புறமருப்பிற்கடகமொன்றெடுத்து
வீறுகிம்புரியெனத்தரிப்போய்
கருப்பினந்தொடருங்கதுப்பினார்மயக்கிற்
றுளைந்துழன்றேனையினியளிப்பாய்
பொருப்பனபுயத்தோய்மயிற்பரியுகைத்தோய்
போரிவாழாறுமாமுகனே. (௧)

அறிவுதன்னினைவிற்கலந்துறுபோதி
லரும்பரமுயிர்சகமுளவாம்
பிறிவிலவ்வறிவர்க்கினைவினையகன்றுற்
பேதாபேதங்களொன்றின்றி
நெறியுறத்தானேதன்னிடத்திருக்கு
நிச்சயமென்றெனக்கிசைத்தான்
பொறிமறுமார்பன்மருகவேலெனையாள்
போரிவாழாறுமாமுகனே. (௨)

வினைவறிவெனவிவ்விரண்டினைவிரித்து
விகழ்த்துறுஞ்சுருதியீண்டிவற்றி
னினைவிரண்டாகும்பரவினைவெனவு
நிலவுறுமுயிர்வினைவெனவும்
புனைபரவினைவுசகமுயிர்வினைவுபுரிந்ததைப்
பிடிக்குமென்றிசைத்தான்
புனையரும்பாரஞ்சொரிதருநெய்தற்
போரிவாழாறுமாமுகனே. (௩)

பரனதுமுகத்திற்குலவுபொய்சீவன்
படிற்றுளக்கினுக்கதுமெய்மை
திரமுறுசாக்ஷிதானெனச்சீவன்
றெரிந்திடிற்பரன்மனமிவற்காம்
விரவியசகமப்போதுபொய்யாகி
விளங்குறுமென்றெனக்கிசைத்தான்
புரமெரிசெய்தோனுவந்துபெற்றெடுத்த
போரிவாழாறுமாமுகனே. (௪)

அறிவினைநோக்கிலுயிர்வயமாகு
மகமனஞ்சகத்தையவ்வுயிர்தான்
பிறிபடநோக்கின்மனத்தினின்வயமாம்
பிறப்புமீதிதன்வயப்படாது
நெறியுறுமறிவின்மிகப்பரிசிக்கி
னினைப்பறுங்கதியுமீதென்றான்
பொறிமயிலேறுஞ்சேவகனெனையாள்
போரிவாழாறுமாமுகனே. (௫)

வதொருநினைவின்றெழுமதுமனமீ
தெனதெனவருமிதன்மூலந்
தீதறுமூலவகங்காமீதியா
னென்றெழுஞ்செப்புமிங்கிவைக்கு
மூதிருளவித்தைதமூலமீதகன்றன்
மொய்யறிவெனவெனக்கிசைத்தான்
போதகமாக்கும்புகன்றமெய்க்குரவன்
போரிவாழாறுமாமுகனே. (௬)

சச்சிதானந்தமெனும்பெயர்மூன்றிற்
றழுவுமாவரணமூன்றிவைநா
நிச்சயவறிவாற்சமாதிஞானத்தா
னிகழ்வுறுசகசஞானத்தா
லச்சமின்றகலுமிவற்றினையறியென்
றருட்கடனிறைத்தெனையளித்தான்
பொய்ச்சழக்ககன்றமனத்தினர்நினைக்கும்
போரிவாழாறுமாமுகனே. (௭)

சுருதியின்றுணிவாலினைவுகொண்டுலகந்
துச்சமென்றுணர்தனிச்சயமாந்
கருத்துறுநினைவையடக்கியிவ்வுலகந்
கானலென்றுணர்ந்திடல்சமாதி
யிருவகையாய்முன்னுறாத்தவையின்றி
யிலங்கறிவுருவமாயிருத்தல்
பொருவறுசகசஞானமென்றிசைத்தான்
போரிவாழாறுமாமுகனே. (௮)

நிச்சயஞானஞ்சமாதிஞானங்க
ணிராசையார்மனத்தினிற்கலங்கா
தெச்சமின்றிருக்குமாசையார்மனத்தி
லிரண்டுஞானங்களுந்துலங்கு
நச்சுதல்வெகுளியின்றியசகஜ
ஞானிகளாசையுளர்போலப்
பொய்ச்சகத்துறினுங்கலங்குறுவொன்றான்
போரிவாழாறுமாமுகனே. (௯)

சித்தொருநான்கிற்பிரமங்கூடத்தன்
செப்புமாயாரகிதங்கண்
மத்தமிலீசனுயிர்கடாமாயா
சகிதங்கள்வழுத்துமிவ்வீசன்
சத்தெனுந்தன்மையறப்பிலாமையினாற்
றகுசத்தேதடிலன்சீவன்
பொய்த்தலில்வீடுதேடுமென்றிசைத்தான்
போரிவாழாறுமாமுகனே. (௧௦)

ஓதுருநாமமியானெனதசுத்த
முயர்ந்துளசுத்தவாதனைக
ளாதியதிரோதமனுக்கிரகித்தா
லாக்கைவாக்கியக்கவாதனைக
ளோதமில்காட்சிகாண்பவனென்ற
விவற்றுளோர்வகுப்பினுன்மனத்தின்
போதமினினைவைப்பகுத்துடக்கென்றான்
போரிவாழாறுமாமுகனே. (௧௧)

கயிலைவாழரசுதந்தகற்பகமக்
கனவரசுறைகொடிக்கனிநூ
லியல்புறுகற்புக்கன்னிமாரிருவ
ரிருமருங்குறைவடமேரு
வயிலுடன்மயிலுங்கோழியுமாடு
மழகுடன்படைத்தமெய்க்கடவுள்
புயலினஞ்சுரந்துபொழிதருநீதிப்
போரிவாழாறுமாமுகனே. (௧௭)

தடவரைப்பிறந்தநதியராச்சென்று
தண்கடற்படமுடிமீது
சுடர்விரியுதயகதிர்மணிவிளக்குஞ்
சுந்தரப்போரிவேலிறையே
மடமையின்றடியேனுனதருளமிர்த
வாரியின்மூழ்கிடநினையாய்
குடமுனிசிவந்தசடைமுடியிவர்ந்த
குரவணிசரணவாரிசனே. (௧௮)

முற்றிற்று.

வேலுமயிலுந்துணை.

---

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

### குறுங்கழிநெடில்விருத்தம்.

---

நல்வினைமுனைதுதிருவடிவிடய நாடுறுபொறியுடல்கரணம், புல்லியவினமென்றறிந்தஃதடைந்து பொருந்துமற்றிவைவிடவறியேன், கல்லெனவிழியுஞ்சாரல்பாயருவிகாழகிற்றிரண்மலைகாட்ட, மல்லலலைக்கடல் சங்கினமலைகாட்டிமலி சமராபுரிக்குகனே. (க)

ஏழ்கடலனையவருள்கொடுபுவிநீயிலங்குசற்குருவதாய்வந்த, போழ்தெலாமாறுபுரிந்தவெங்கொடியபுலையனை யாண்டவாறறியேன், வேழமாமலையிற்றாழ்மதவருவிவெளந்துளைந்திளம்பொழின்மூச, மாழைவண்டினங்கள்பூமணங்கமழுமலி சமராபுரிக்குகனே. (உ)

பாதகம்புரியுமெனதுளநினைக்கும்பரிசினிலொருசிறிதெனினுங், கோதறுமுனதுதிருவடிக்கன்புகொண்டுநின்றுருகிடக்காணே, ஞெதுறுகுரவம்பூச்சிறுகுழவிக்கூன்கழிஞெரளைவிடுபிழ்மை, மாதவிமனையிற்குர்மகவூட்டிமலிசமராபுரிக்குகனே.

கொங்கையங்குவடுமார்பிலூ டுருவக்கொடியிடைமகளிர
த்தழுவி, வெங்கனன்மெழுகா யுருகிடுமுளத்துவினையனே
னுய்யுநாளுளதோ, திங்களங்குழவிச்சடையவன்புயத்துன்
றிருவடிக்கமலமுமவன்பான், மங்கைதன்றனத்துன்குமுத
வாய்மலருமலிசமராபுரிக்குகனே. (ச)

பிறப்பறுவீட்டுற்பவமெனக்கருளிப் பிறங்குசிற்சுகவமிர்த
ருத்தி, யொறுக்குமென்போதமனைத்தையுமறுத்திங்குலகிய
லுணர்வெலாமறைத்து, விறற்றகுமுனது திருவடிவிளக்கி
மேன்மையந்தொழிலிவண்புரிவாய், மறைக்குரியவனுலினிப்
பிறப்பறியார்மலிசமராபுரிக்குகனே. (ரு)

உருமெனவெயிறுகடித்திதழ்மடக்கி யுழல்விழிபொறிபட
விழித்து, வெருவருதோற்றக்கூற்றுவந்தடரும்வேலையுன்பா
லெனையழையாய், பிரசவண்கடம்புசெறியுமுன்புயத்துப்பிற
ங்குறுகுறமகள்விழியு, மருமலர்க்கூந்தலிளம்பிடிவிழியுமலர்
சமராபுரிக்குகனே. (சா)

கண்ணிவாயிரையை யருந்திடப்புகுந்து கடுஞ்சிறைப்பற
வைசிக்குறல்போற், பெண்ணுறுமின்பங்கருதியான்மாயப்பி
றப்பிடையகப்படுகின்றே, னெண்ணுகண்மணியேதண்கடல
மிர்தேநறக்கதிச்சுவைதருகரும்பே, மண்ணுறுமணியேவடித்
தவேலரசேமலிசமராபுரிக்குகனே. (எ)

பிணியுடல்வெறுக்கேன்பெண்சுகமறுக்கேன்பேணுமுன்றொ
ழுக்கிலெனின்றுட், கணியநல்லடியார்க்கன்பு செய்திடிலேனு

தனே னேதமென்றறுமே, கனிபடுநறும்பூஞ் சிறுகுலைவயத
னைக்கான்புலிக்குருளையென்றஞ்சி, மணிபடுமான்கன்றிரிதரு
சாரன்மலிசமராபுரிக்குகனே. (அ)

பொறிவழிவிடயமறிநனவதனிற்பொருந்தியவாதனைமிகவு
ஞ், செறிதருகரணநான்குறுங்கனவிற்றியங்கிமற்றிவையெ
லாமிறந்த, நெறியறுமவித்தைதயிருளுறுஞ்சுழுத்திநிலையினில
றிவறத்துயின்று, மறுகுறுகின்றேனென்றனையடைவேன்ம
லிசமராபுரிக்குகனே. (௯)

குறுமைசேர்வடிவு நெடுமைமாதவமுங் கொண்டுதென்ம
லையுறைமுனிக்கு, மறைமுடிவிருந்தவிளக்ககத் தெற்றிமரு
ளிருடீர்த்தசற்குருவே, சிறுமையேபுரியுங் கொடியனையாள
த்திருவுளத்தடைத்திகெண்டாய், வறுமைதீ தறியார்களிப்பு
றுமாடமலிசமராபுரிக்குகனே. (௧0)

முற்றிற்று.

---

வேலுமயிலுந்துணை.

---

# திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

## சந்தக்கழிநெடில்விருத்தம்.

---*---

கருணைப்பெருநறவிருபுறனொழுகியகாரணமலைமகிழ்ந்து
ணைவா, மூரணுற்றிடுமலவிருளறவொளி தருமுளரிகர்த்த
திருத்தாளாய், தெருளூற்றிடுபேரின்பக்கடலிடைசிறியேனு
றவைத்தினிதாளாய், தருணச்சுந்தரமாறுதிலகியசரவணச
மரப்பதியானே. (௧)

சிவன்மெச்சுறவவன்மடிமிசைநிலவிய செந்துகிராடைச்சி
றுமதலாய், புவனத்தொடுசுரவசரமனித்தருள் பூரணிதரு
மொருகாரணனே, யவலச்சிறியவனேனையளித்தாய்க்கையா
கைமாறுளதுகொலோ, தவளக்கலைமயில்புகழ்ப்பெறுபுயசர
வணசமரப்பதியானே. (௨)

களவிற்கனியனகளமுள விறைதருகனகிங்கிணிநரல்சிறு
தாளா, விளவிற்கனிவிழவொருகன்றெறிதரு விமலனுவப்பு
றுகுலமருகா, சளகுச்செவிமதமலையனவெழுதருதுகளற
வெனதுளமறநினையாய், தளவகொந்தளவனமயின்மகிழ்வு
றுசரவணசமரப்பதியானே. (௩)

பொதியக்குறுமுனிமதியிற்றழுவியபூரணனேபுகழ்காரணனே, விதிபுத்தியிலறிவருமெய்ப் பொருளினைவிமலற்குதவியநாயகனே, கதியெற்குனதிருபதமுற்றெனைவிடல்ககனத்தவரமுதுறைகிரோ, ததியிற்றுயில்பவன் மருகச்சிறுபிளைசரவணசமரப்பதியானே. (௪)

உதவிக்கொருதுணையனையெனவெனைவந்துறுதுயரடையாதருடருவோய், மதனப்பயல்விடுகணைகளிலடியேன்வாடாதுனதிருதாடாரா, யிதழிச்சடைநடராயனளித்தருளொண்ணியதருபுண்ணியராயா,சதுநற்றளமுளமுளரியினிறமுளசரவணசமரப்பதியானே. (௫)

புனநற்குறமகள்விழியிணைகளிபெறுபுனைமலர்நீபத்தார்மார்பா,மனநற்கமலமதிடை திருவடியிணையருவத்திருவுளம்வைத்தெனையாள், கனகுக்குடவிருதுடையவவிடைவருகடவுள்புயத்தணைமிசைவளர்வோய், தனதத்தனவெனநடமயின்மிசைவருசரவணசமரப்பதியானே. (௬)

மதியொத்துளமுகமடவாரிருபுடைமகிழ்வுறநிகழ்வுறும்வடிவழகா, வதிகப்பெறுவளமடியவர்பெறவருளம்புயமலரனசெங்கரனே, துதிபெற்றுளசகசலதிக் கிடையதிசமடனைலைத்திடவினைதிவொலோ, ததிதித்திமியெனநடமயின்மிசைவருசரவணசமரப்பதியானே. (௭)

கலகப்பிணிவிழியரிவையர்கிறி செறிகலவியைநலனெனநணிநாடிப், பலகற்பனைவினைமனமறநினதருள்பாலித்தடியனை

யாளுதியே, யுலகிற்பெரியவர்பணிதருபரிதியினும்பர்கள்கும் பிடுநெடுவேலாய், தலைமைப்புகழ்ப்பெறுமாதிருநகருளைசரவ ணசமரப்பதியானே. (௮)

கடகத்தணிமணிமகுடச்சிர மணிதிரொளிவீசத்திசைசை தோறு, நடனச்சிறைமயின்மிசையுற்றடியர்முனனினர்த்திரு முகமலர்வோனே, மடமைச்சிறியனுனருளைப்பெறவினைவன சத்திருமயின்மருகோனே, நடவெற்பெனவளர்தவளக்களிறி வர்சரவணசமரப்பதியானே. (௯)

அறமிக்குளவுளமுடையவர்மகிழ்வுறவவொருறவருமொா ருநீதான், மறமிக்குளசிறியவனேனொருறவருநானொருநா ளுளதுகொலோ, திறமிக்குளசூர்மார்பூடுருவச்செஞ்சுடர்நெ டுவேல்விடுவோயே, தருகட்புலியாளுடையவனுதவியசரவ ணசமரப்பதியானே. (௧௦)

முற்றிற்று.

உ

வேலுமயிலுந்துணை.

---

## திருப்போரூர்ச் சந்நிதிமுறை.

### கட்டளைக்கலித்துறை.

---

அருளேமதமெனக்காட்டியடியரகத்திருந்த
மருளேதுடைத்தமதமாமுகத்தன்மகிழ்துணைவா
தெருளேயடியனுக்கீகுதல்வேண்டுஞ்செழுமறையின்
பொருளேமயிலவனேசமராபுரிப்புண்ணியனே. (க)

வந்திக்குமன்பர்க்குவாழ்வுங்கதியுமகிழ்ந்தளிக்குங்
கந்திக்களத்துமைமோந்துகொளாறுகமலத்தனே
சிந்திக்குமென்னெஞ்சைநின்பாதகஞ்சத்திற்சேரவைத்தேன்
புந்திக்குளேநிறைவாய்சமராபுரிப்புண்ணியனே. (உ)

நதியுமதியுங்குடிகொண்டவார்சடைநம்பனுக்கோர்
நிதியுந்தருவுமெனவந்தவாநினதன்பருக்குக்
கதியுந்திருவுந்தருவள்ளலேகடையேனையுமாள்
பொதியுமலர்ப்பொழில்சூழ்சமராபுரிப்புண்ணியனே. (௩)

பாதகமெண்ணிலி [illegible] ன்றுன்பாதகஞ்சப்
போதகமாமை [illegible] துலை [illegible]
காதகங் [illegible] துக் [illegible] றுப்
போதகஞ்செய்தவனேசமராபுரிப்புண்ணியனே. (௪)

கன்னியரா யிருவோரு மிருபுடைகாத லுற
மன்னியநாப் பணிருந்தனை வோருக்குப் வாழ்வுதரு
கின்னியல்பே தனவோதுகிற்பேனெம்மான் மருகா
பொன்னியன்மேனியனே சமராபுரிப் புண்ணியனே. (௫)

இகலடைந்தே வருஞ்சூர் குலமாயவிருளினுக்கோர்
பகலடைந்தா லெனவேல்விட்ட நிரபவனனிலா
தகலடைந்தார் சுடர்போனின் றுணைப்பணியன் பரைப்போற்
புகலடைந்தேனையுமாள் சமராபுரிப் புண்ணியனே. (௬)

கவனமதிக்கு மென்னெஞ்சைத் திருத்திக் கடவுளரு
மெவனமதிக்கின் றுனைத் திங்கெனையளிப்பாய்
சிவனமதிக்குஞ் சிறுமதலாய் புகழ்செப்பிழப்பார்ப்
புவனமதிக்குஞ் சமராபுரிவரு புண்ணியனே. (௭)

மறைகொண்ட பல்கலையாய்ப் பொதியமலை முனிக்கு
மிறைகொண்டபோத முரைசெய்த தேசிகநின் னடியேன்
கறைகொண்ட பவ்வத்தின் மூழ்கா துகாக்கக் கடனுனக்கே
பொறைகொண்ட மாதவர் சூழ் சமராபுரிப் புண்ணியனே. (௮)

நாகப்படமணி குத்தியெடுத் துநடம்புரியுந்
தோகைப்பரிமிசைத் தோன்றியவாது கனின்னடியே
னேகத்தியானத் திருந்திளைப்பா றவினிதளிப்பாய்
போகத்துநாகர் புகழ் சமராபுரிப் புண்ணியனே. (௯)

மறுமைகுறித்தயயத் தாற்பணியவர் மத்தியமோ
சிறுமைகுறித்துப் பணிவாரதமர் கள்செப்புமிந்த

வுறுமைகுறித்திலதன்பாய்ப்பணிபவருத்தமரோ
பொறுமைகுறித்தவர்சூழ்சமராபுரிப்புண்ணியனே. (க0)

நடிக்குமெய்யன்பரினென்போலிகணிற்கநம்பினர்க்கே
பிடிக்குளடங்கிடையார்கட்செலாதுளம்பேணிநின்பொன்
னடிக்குளுருகுங்கண்ணீர்வார்ந்துளாதழுத்தங்கமெல்லாம்
பொடிக்குமுரோமஞ்சமராபுரிவருபுண்ணியனே. (கக)

கோழிக்கொடியைமின்வேலைமயிலைக்குறித்தவரை
யூழிக்கனலுமனுகாதெனினுனையேயடைந்தேற
காழிப்பவமுமுளதோவரிவையரப்புசந்தம்
பூழிக்குளுமணக்குஞ்சமராபுரிப்புண்ணியனே. (கஉ)

முருகாவெனவுனையோதுந்தவத்தினர்மூதுலகி
லருகாதசெல்வமடைவார்வியாதியடைந்துளையா
ரொருகாலமுந்துன்பமெய்தார்பரகதியுற்றிடுவார்
பொருகாலனுடுபுகார்சமராபுரிப்புண்ணியனே. (கங)

முற்றிற்று.

---

வேலுமயிலுந்துணை.

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

### கட்டளைக்கலித்துறை.

---*---

நாரணனாரணனெந்நாளும்போற்றுநளினபத
காரணன்பாகம்பிரியாதகன்னிகளிக்கவருஞ்
சீரணவும்பதச்செந்தாமரையென்சிரசில்வைப்பாய்
வாரணவெல்கொடியாய்சமராபுரிவாணவனே. (௧)

வாதமுடன்பித்தமையென்றுமூன்றின்வரும்பிணிதீர்த்
தேதன்பிழைபொறுத்தேன்று கொள்ளாயெழிலார்குறப்பெ
காதல்புரிந்தணைபன்னிருசெம்புயக்காங்கெயனே [ண்
மாதமும்மாரிசொரிசமராபுரிவாணவனே. (௨)

அந்திப்பிறையணிவேணியினார்தந்தவானைமதஞ்
சிந்திப்பொழிந்துவரவேதியானித்தசேவலனே
யுந்திப்பவக்கடல்வீழாதெனையுன்னுபயசரண
வந்திக்கவேதருவாய்சமராபுரிவாணவனே. (௩)

கரும்போதவளக்கடலமிர்தோசனமாமழையோ
வரும்போதெழுதறவோவுறவோவையநீக்கியின்பந்
தரும்போதமோநின்னருளிணையேதென்றுதானுரைப்பேன்
வரும்போதகக்களிறேசமராபுரிவாணவனே. (௪)

நோயென்றனக்கொருசஞ்சீவியஞ்சநுவன்றெழுந்த
பேயாந்தனக்கொருமந்திரமாமெனைப்பேணுதற்கோர்

தாயாமினிய தமராமெனக்குறு தஞ்சமுமா
மாயாக்கருணை தருஞ்சமராபுரிவானவனே. (௫)

தோகைமயிற்பரியேறிவந்தென்னெதிர்தோன்றியரு
ளோகைமிகவும்புரிந்தெனையாள்வதுமுண்டுகொலோ
பாகைமறுத்தமொழித்தெய்வயானைபரிகணவா
வாகைபுனைவடிவேற்சமராபுரிவானவனே. (௬)

ஆறங்கநான்மறையோதுங்குறுமுனிக்கானமறைப்
பேறங்குதவும்பெருமானமிர்தம்பிறங்கியெழு
பாறங்குவாரிதுயின்றோன்மருகனின்பாதமுறு
மாறிங்கெனக்கருளாய்சமராபுரிவானவனே. (௭)

ஏழைத்தொண்டேனுனையண்டி நின்றேனெனையேன்றுகொ [ள்ளாய்
மாழைப்பொருப்புவில்லாளன்மைந்தாவினைவந்திக்கிலாக்
காழைப்பொருவுமனத்தினனாயினுங்காப்பைகண்டாய்
வாழைப்பெருங்குலஞ்சூழ்சமராபுரிவானவனே. (௮)

பேயன்பிழையையும்பித்தன்பிழையையும்பேசரிய
சேயின்பிழையுநேரார்பெரியர்சிறியபுன்மை
நாயன்பிழைதனைநீபொறுத்தாளுதிநாயகமே
மாயன்றிருமருகாசமராபுரிவானவனே. (௯)

அருண்மேகமென்னகத்தூடெழுமானந்தவாரியுண்மைப்
பொருண்மாதவருளம்புக்குறைபூரணம்போதநல்குந்
தெருள்வாசகன்முதற்றேவரும்போற்றியதெய்வநெஞ்சின்
மருண்மாசதிர்க்குஞ்சமராபுரிவருவானவனே. (௧0)

முற்றிற்று.

உ

வேலுமயிலுந்துணை.

---

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

### கட்டளைக்கலித்துறை.

---

கண்ணிற்சிறந்தகருமணியேகடையேனிதயத்
துண்ணிற்குமோரொளியேவெளியேயுயர்தேவரெல்லாம் [தா
விண்ணிற்றருமலர்கொண்டே யிறைஞ்சுமுன் மென்மலர்த்
டண்ணிற்சிறந்ததன்றேசமராபுரிச்சண்முகனே. (௧)

விண்டலைகொண்டநின்சேவடிக்கன்புசெய்வித்தகோ
மண்டலைவாரிப்பவங்கடப்பார்மற்றையோர்களெல்லாங்
கண்டலைமென்மொழியார்கருவாழிகடக்கறியார்
தண்டலைமண்டுசமராபுரிவருசண்முகனே. (௨)

தீதேபுரியுங்கொடியேனகத்துன்செறிகழற்றுட்
போதேயிருக்கவரந்தருவாய்புனக்குன்றவர்த
மாதேபுணருமணிப்புயத்தாய்வண்டினண்டிமொய்க்கத்
தாதேசொரிபொழில்சூழ்சமராபுரிச்சண்முகனே. (௩)

ஆலஞ்செறிந்தகறைமிடற்றற்குமகத்தியற்குங்
கோலஞ்செறிந்தமறைமொழிகூறுங்குருபரனே
சீலஞ்சிறிதுமறியேனையாண்டதிறனென்கொலோ
தாலம்புகழுஞ்சமராபுரிவருசண்முகனே. (௪)

வஞ்சகநெஞ்சினனாயினுமாதர்வலையிற்கொட்டிப்
பஞ்சனனெஞ்சினனாயினுமுன்றன்பணிபுரியா

தஞ்சுறுதீவினைசெய்தேனெனினுமடியனுக்குன்
றஞ்சமலாதுளதோசமராபுரிச்சண்முகனே. (௫)

அளையிருளேறைக்கும்விழிபோன்மலவிருளாழுமென்னைப்
புளையுறுமுன்மலர்த்தாட்பிரகாசம்புகுதவைப்பாய்
வளையுறுதோள்வள்ளிநாயகிகொங்கைமணந்தவனே
தளையுறுமன்பர்புகழ்சமராபுரிச்சண்முகனே. (௬)

தீதொன்றுநெஞ்சினனென்றுகொளுன்றன்றிருவடியாம்
போதொன்றிரதநறைபெறுவேன்பொருசேலிணைபோற்
காதொன்றுகண்ணினள்காணக்குறத்திதன்காதலனே
தாதொன்றுபூம்பொழில்சூழ்சமராபுரிச்சண்முகனே. (௭)

விடையுடையானுங்கருடத்துவசனும்வெங்குலிசப்
படையுடையானுமனக்கொடியானும்பணிபெரியோய்
கடையுடைநாயிற்றிரியுமென்றுயரைகளைந்திடத்
தடைவிடுநெஞ்சினர்சூழ்சமராபுரிச்சண்முகனே. (௮)

காரார்பிறவிக்கடலைக்கடத்துமென்கன்மனத்தை
நீராயுருக்குமெனீடுயிர்மூடிநிறைந்திருண்ட
தீராமலப்பிணிதீர்த்திடுமுன்றன்றிருவடியே
தாரார்பொழில்புடைசூழ்சமராபுரிச்சண்முகனே. (௯)

நாயேனுன்சேவடிவேண்டுகொளாதுநலிபிணியான்
மாயாமலுன்னடியேன்றனைக்காத்தனைமற்றிதற்கோர்
பேயேன்பின்செய்யுங்கைமாறுளதோபெரியாய்சிறியேன்
றாயேயெனாதுறவேசமராபுரிச்சண்முகனே. (௧௦)

முற்றிற்று.

உ

# வேலுமயிலுந்துணை.

---

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை

### நேரிசைவெண்பா.

---

கலைமுகங்கள்போற்றுங்களிற்றுக்கிளையா
ளிலைமுகங்கொள்வேலுக்கிறையா—னிலைமுகங்க
ளாறுடையானாறிரண்டுதோளுடையானம்போரூர்
வீறுடையானென்றுளமேவேண்டு. (௧)

வேதாந்தச்சென்னிமிசையிருக்குந்தெய்வமே
போதானந்தச்சுடரேபுண்ணியனே—நாதாந்த
வின்பத்தைக்காட்டியெனையளிப்பாய்போரூரா
துன்பத்தையெல்லாந்துடைத்து. (௨)

சும்மாவிருவெனநீசொல்லப்பொருளொன்று
மம்மாவறிந்திலமென்றன்றுரைத்த—வெம்மா
னருணகிரிநாதனனுபவநாயேற்குக்
கருணைபொழிபோரூராகாட்டு. (௩)

மன்னுபிரமத்தில்வாழபரைசத்தியிடத்
துன்னும்பரைசத்தியுண்டதனிற்—றுன்னு
மூலகுண்டதனையுளம்பிடிக்குமென்று
னில்கும்போரூர்வாழிறை. (௪)

அறிவைவிடத்தோன்றிடாதம்புவியுநெஞ்சஞ்
செறியறிவாய்சில்லென்றுசெப்பிப்—பிறிவறவென்

னெஞ்சைத்திருத்திநையவைத்தபோரூரன்
கஞ்சத்திருத்தண்டைக்கால். (௫)

இளம்பிடியுமாதுவள்ளிசைகற்பகமொன்
றுளங்குடியாக்கொண்டெனைவிட்டோவா—களங்கனிபோற்
கண்டத்தானீன்றதநுகாரணமெய்ப்பூரணத்தா
ரண்டத்தான்செய்போரூராங்கு. (௬)

தஞ்சமெனவுன்சரணடைந்தநாயினேன்
வஞ்சமனதினால்வாடினேன்—வஞ்சமன
நீக்கித்திருப்போரூர்நின்மலாநின்னடிமை
யாக்கியெனையாளுவாய். (௭)

உன்னடிமைக்கேவிரதமுற்றறியேன்மனமுன்
பொன்னடிமைக்காசாநூறுமோ—நின்னடிமை
யாக்குதற்கும்போரூரணிநகராய்நாயேனைக்
காக்குதற்குமுன்றன்கடன். (௮)

இனமனம்போக்கிச்சிறியேனுக்குன்றாளைக்
கானமனந்தந்தென்னையாளுவாய்—ஞானபர
முத்தாநம்போரூர்முருகாவென்னுயிருக்
கத்தாகருணாலயா. (௯)

ஆனந்தத்தேனிருக்குமாறுமுகக்கற்பகமே
யீனந்தீர்போதவிரவியே—தேனூந்து
நீபத்தொடையாய்நிழற்போரூரையாவென்
றாபத்திரயந்தவிர். (௧0)

முற்றிற்று.

வேலுமயிலுந்துணை.

---

# திருப்போரூர்ச்சன்னிதிமுறை.

## அடைக்கலப்பத்து.

---

மணியேயனைவைங்கரற்கிளையமன்னேபொன்னேவானமிர்தே
யெணியேயிருவர்பணிந்தேத்துமீசனுவந்தசிறுமதலாய்
நணியேயெனைவந்தாண்டுகொண்டநாதாவினிநாயேனைவிடே
லணியேசிறந்தபோரூராவடியேனுன்றனடைக்கலமே. (௧)

வேயேயனதோளுமையுதவுமிளிர்பொற்கலசப்பாலுண்ட
ஞாயோயிருகன்னியர்கணவாசோதிவேலாமயில்வீரா [ம்
நாயேனிழைத்தபிழைபொறுத்துன்னளினபாதந்தரவேண்டு
ஆயேயனையபோரூராவடியேனுன்றனடைக்கலமே. (௨)

மாண்டுபிறவாநெறியருளுமன்றுவானோர்முதலெவரும்,
வேண்டும்பொருளேபொய்யவனேன் மெய்யாந்துணையேநாய
டியே,னின்னடிங்கிழைத்தகுற்றங்களெல்லாம்பொறுத்தேயெ
ளியேனை, யாண்டுகொளவேண்டும்போரூரையாவுன்றனடை
க்கலமே. (௩)

வினையேனிழைத்தபெரும்பிழைகள் பொறுத்தாட்கொண்
டமெய்த்தேவே, நினையேன்வேறோர்புகலிடமுமறியேன்சிறி

யேனின்மலனே, கனைமாபிறவிக்கடல்கடப்பக்கழற்றுட்கலை
னத்தரவேண்டும், அனையயனையபோரூராவடியேனுன்ற
னடைக்கலமே. ௪

பொன்னேயனையவருடந்தாய்பொற்பார்திருத்தாடொழுத்
தந்தாய், மன்னேயதனைமறந்திகழ்ந்தமதியிலேனென்றினியு
ய்கேன், மின்னேயனையபொய்வாழ்வைவிழைந்தகடையேனு
யிடினும், அன்னேயனைய போரூராவடியேனுன்றனடைக்
கலமே. (௫)

காரின்கருணைபொழிந்திந்நாட் காத்துக்கடையேன்றனைய
ளித்தாய், கூருங்கொடியனெனவினித்தான்குறித்துவிடுத்
தல்கணக்கோதான்,வீரஞ்செறிந்தவனைத்தோளாவிண்ணோர்
பணிந்ததிருத்தாளா, வாரஞ்சிறந்தபோரூரா வடியேனுன்ற
னடைக்கலமே. (௬)

கலங்குநெறியிற்செலுத்தாமற்கதிசேர்நெறிக்கட்செலுத்
தியெனை, யிலங்கவைத்தபெருமானேயினிமேல்விடுத்தாலெ
ன்செய்கேன், றுலங்குபொறிச்செஞ்சேவலனேதுதித்துப்ப
ணிவோர்காவலனே, யலங்கன்மார்பாபோரூராவடியேனுன்
றனடைக்கலமே. (௭)

ஏதுசெயினுங்கொடியேனுக்கிரங்கியாண்டபெருந்தாதாய்
நீதனிவனென்றெனையிகழ்ந்தாற் சிறியேற்குயுமோர்நெறியு
வோதுமதிபோலருளமிர்தமுதவுமாறுமுகப்பெருமா [ளதோ
றுதிபுதல்வாபோரூராவடியேனுன்றனடைக்கலமே. (அ)

எளியேன்றனையோரன்பனெனவேன்றுகொண்டாண்டரு
ள்செய்தோய், களியாலுனதுபுகழிகழ்ந்தகடையேனெனினு
ம்விடேல்கண்டாய், வெளியேயொளியேவியனறிவேவேதநா
வின்முடிமணியே, யளியாரமிர்தே போரூராவடியேனுன்ற
னடைக்கலமே. (௯)

கண்ணின்மணியேயுயிர்க்குயிரேகரும்பின்சுவையேபெருந்தே
நண்ணுங்கதியேசுரர்பதியேநாதாவதிகசிவபோதா [னே
வெண்ணுமடியார்பெருவாழ்வேயென்னாயகனாகியதேவே
யண்ணுங்கனியேபோரூராவடியேனுன்றனடைக்கலமே.(௧0)

முற்றிற்று.

# வேலுமயிலுந்துணை.

---

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

### விருத்தக்கலித்துறை.

---*---

பேறுதருந்தொல்லியானைமுகன்றன்பிரியவீர
னீறிலகுஞ்செம்மேனியரன்றந்தருணீதன்
றேறிலகுந்தெண்ணீரெனவுள்ளந்தெளிவீர்கா
ளாறுமுகன்றன்போரியைவந்திங்கடைவீரோ. (க)

மூதுணர்வொன்றும்வீடுறநண்ணுமுனிவோர்காள்
பேதைமையுந்துநூல்களினின்றும்பிறழாதீர்
மாதுமைமைந்தன்மான்மருகன்றன்வளனீயு
மாதரவண்டும்போரியைவந்திங்கடைவீரோ. (௨)

ஊனையிகழ்ந்துமூனைமறந்துமுழல்வீர்காண்
மோனசுகஞ்சும்மாவருமின்றென்மொழிநாடிக்
கானில்விளங்குமாமயிலன்பன்கதிர்வேல
ஞானவர்தான்றும்போரியைவந்திங்கடைவீரோ. (௩)

பாலுநறுஞ்செந்தேனும்விரும்பும்பழமோடே
யேலுறுமின்பம்போலறிவின்பமெளிமேவுங்
கோலநரந்தவிபகர்ந்தன்குயின்மாமே
லாலுறுநந்தம்போரியைவந்திங்கடைவீரோ. (௪)

மாரனைவெல்லுஞ்சீலமுணர்ந்தமதியோர்காள்
காரினியங்குமேதியன்வஞ்சங்கடவீர்காள்

ஞாடுதுஞ்சுஞரியிடன்றன்சுதஞக
மாரமருப்பும்போரியைவந்திங்கடைவீரோ. (௫)

பாசவிலங்கிஞணிவிடும்பண்பினராகித்
தேசமதெங்குமோடியுழன்றுந்திரிவீர்காண்
மாசறுகந்தன்வேலவனம்பொன்மயில்வீர
ஞாசினிதுன்றும்போரியைவந்திங்கடைவீரோ. (௬)

நோய்பிணிபம்புஞ்ஞுனியம்வஞ்சநுவல்பூதங்
காய்பசிவெம்புஞ்சோகபயங்கங்கடிவீர்கா
ணையமுறுந்தண்மாதர்கணண்பனெடுவேல
ஞய்கிளிகொஞ்சும்போரியைவந்திங்கடைவீரோ. (௭)

பீடுறுமைந்தன்மாநெழில்புங்கப்பெயர்மாட
மாடணிதங்குநீடுறவெண்ணுறுமதியோர்காள்
வேடர்தரும்பெண்மாதுறுகொண்கன்விறல்வேல
ஞடகமண்டும்போரியைவந்திங்கடைவீரோ. (௮)

வேகதுரங்கஞ்சேனைகலிங்கமிளிர்பூண்மா
நாகபடங்கொண்மாநிலநெஞ்சினசைபீர்கா
ளேகமெனுஞ்சொல்லோர்பொருடந்தனையான்வே
ஞகமம்விஞ்சும்போரியைவந்திங்கடைவீரோ. (௯)

நாவலர்நெஞ்சந்தாவுறுமின்பநலனீபா
வோவறவென்றுமோதுறவெண்ணமுடையீர்கா
டவமினங்கட்பாவையினங்குஞ்செயுநீத
ஞவிறைமைந்தன்போரியைவந்திங்கடைவீரோ. (௰)

முற்றிற்று.

உ

வேலுமயிலுந்துணை.

---

## திருப்போரூர்ச் சன்னிதிமுறை.

### விடுபாட்டுகள்.

### கட்டளைக்கலித்துறை.

---

அகிலாவியுண்டெனக்காதலினீசடமாமெனவே
முகிலோடிகலிப்புழுகறலாடிமொய்வாசங்கொண்டு
நகிலேசுமந்துவருந்திடைசாயநணுங்குழலார்
தகிலேயெனுநாளமேபோரிவேலனைத்தாழ்ந்திறைஞ்சே. (௧)

### நேரிசைவெண்பா.

அன்னமனிக்குமூரண்டினைக்காக்குமூர்
சொன்னமழைபோற்சொரியுமூ—ருன்னினர்க்குத்
தீருபிணிதீர்க்குமூர்செவ்வேளிருக்குமூ
ரோதுதிருப்போரூரெம்மூர். (௨)

கண்டேன்கவலைநோய்காண்கிலேன்மும்மலமும்
விண்டேன்சுகவீடுமேவினேன்—றெண்டேனங்
காரூரும்பூஞ்சோலைக்காலருவித்தேன்பாயும்
போரூரன்வாழும்பொருப்பு. (௩)

தேன்பாடும்பூஞ்சோலைத்தென்போரிவேலவனைத்
தான்பாடுமேலோரித்தாரணிக்கே—யான்பாலுஞ்
சோறும்பெறுவார்கள்சொல்லவொண்ணாப்பேரின்பப்
பேறும்பெறுவார்கள்பின். (௪)

மாதர்யமனுமவர்தமைவிழியேவன்பாசம்
பீதிதருமல்குல்பெருநரகு—மோதிலதில்
வீழ்ந்தோர்க்குமேறவிரகில்லைபோரூரைத்
தாழ்ந்தோர்க்குமில்லைதவறு. (௫)

ஈரிரண்டுதோண்முக்கணீசனருளாறுமுக
னோரிரண்டுதாளையுறமேவி—யோரிரண்டு
வாழைக்கிடையிருந்தவாளரவின்வாய்ப்படார்
பீழைக்கிடைவருந்தார்பின். (௬)

திருவடிக்கீழ்நாயேனைச்சேர்த்தியேயென்றுங்
கருவடிக்கீழ்ப்போகாமற்காக்கு—மருவடிக்கொ
ணீபத்தாளுபுரத்தானையர்க்கிருள்போக்குந்
தீபத்தான்போரூரிற்சேய். (௭)

கேட்டவர்க்குநோய்போங்கிலேசம்போம்பாவம்போ
நாட்டுதிருப்பேரின்பநண்ணுமே—வேட்டதங்கை
நன்னிதியம்போற்கருணைநல்குதிருப்போரூரன்
சன்னிதியிலூதுதிருச்சங்கு. (௮)

ஈராற்றாகப்பணிருந்தானுங்காண்பரிய
வோராற்றுச்செஞ்சடையானென்சதனை—யீராற்றுக்
கையத்தினையரினைக்கண்டனமேபோரூரி
லையக்கினையாதுறு. (௯)

சண்டெலகிறுன்னையினைக்கதியாநாயேனை
யாண்டருள்போரூர்வேலரசனே—மாண்டு
பிறவாமலுன்றன்பதப்பூப்பெருந்தே
னிறைவாவெனக்கருணீயின்று. (௧௦)

தீர்த்தந்திவானந்தஞ்செய்யதலமோமாகு
மூர்த்தியொப்பிரமமுந்திருந்—சீர்த்த
திருப்போரூருண்மையினைத்தேர்ந்தபெரியோர்
மருப்போந்தனைப்படார்வந்து. (௧௧)

திருப்போரூர்ச்சன்னிதிமுறை.

முற்றிற்று.

---

துறைமங்கை - சிவப்பிரகாசசுவாமிகள் திருவடிவாழ்க.

## விளம்பரம்.

இப்புத்தகம் வேண்டியவர்கள் சென்னப்பட்டணத்தி ன் தங்கசாலைத்தெருவில் சுமைதாங்கிக்கெதிர்த்த கூ-நெம்பருடையவீட்டிலிருக்கும், வே. குமாரசுவாமிஐயரிடத்திலும் இராயவேலூரில் பெரியபாஜார் வீதியிலிருக்கிற ம-ா-ா - ஸ்ரீ தி. விசாகப்பெருமாளையரவர்கள் வீட்டில் பள்ளிக்கூடம் வைத்திருக்கிற, வே. சுப்பராயவுபாத்தியாயரிடத்திலும், வாங்கிக்கொள்ளலாம்.

